# 108 திவ்யதேச யாத்ரா ப்ரபாவ சந்திரோதயம்

BY

G. K. (105) BALIJA

"Badri Villa," *Tasker Town, Bangalore,*

C. & M. Station.



காபிரைட் ரிஜிஸ்டர்ட்] 1935 [விலை ரு. ௧—௮—0




பத்ரீ நாராயணன்-மூலஸ்தானம்

(Image in Sanctum Sanctorium of BADRINATH)

ஓம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# "108 திவ்ய தேச யாத்ரா ப்ரபாவ சந்த்ரோதயம்"

---



மார்க்க வசதிகளின் விவரங்களும், திவ்யதேசங்களாகிய

சந்நதிகளின் (கூடியவரையிலும்) படங்கள்

மற்றும் தேசபடம் அடங்கியது.

பெங்களூர் வக்கீல் ஜி. கெ. (105) பலிஜ

என்பவரால் தயாரிக்கப்பட்டது.



விலை ரு. 2-8-0.

ஓம்



ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

---

# சமர்ப்பண விஞ்ஞாபனம்

## இஃது

திருவரங்கம் பெரிய கோயிலென்னும் ஸ்ரீரங்கமாகிய பூலோக வைகுண்ட போகமண்டலத்தின் வெளியாண்டாள் சந்நதியினெதிரில் சின்னாள் வசித்து 1925ஹூத்தில் ஆசாரியன் திருவடியடைந்த அடியேன் பிதா பகவத்பாகவத தாசானுதாசர் கரூர், தேசாயி கொட்டே இராமசுவாமி நாயுடு குமாரரென்று வழங்கின ஸ்ரீமான் R. வெங்கிட்டராயலு நாயுடு என்னும் திருவேங்கிடராமாநுஜ தாசரின் ஞாபகார்த்தமாய் சமர்ப்பிக்கப்பட்டுள்ளது.

ஜி. கே. (105) பலிஜ,
ஆசிரியன்.

[வைஷ்ணவ 108 திவ்ய தேசங்களில் 105 திவ்ய தேசங்களை ஒழுங்காய் செவ்வனே சென்று சேவித்ததினிமித்தம் 105 என்னும் எண்ணை திருநாமத்திற்கு முன்பு அபகரித்துள்ளேன். க்ஷமாபணே.]

31-1

# முகவுரை

---

## நூற்றெட்டுத் திவ்யதேச யாத்ரா ப்ரபாவ சந்திரோதயம்

இந்த லீலா விபூதியின்கண் இன்புறு விளையாட்டுடையானான ஸ்ரீயப்பதியான ஸ்ரீமந் நாராயணன் சேதநோஜ்ஜீவனார்த்தமாக எழுந்தருளியிருக்கும் 108 திவ்ய தேசமென்னும் திருப்பதிகள், புராணங்களில் பரம ருஷிகளால் புண்ணியமாகக் கொண்டாடப்பட்ட புராண ஸ்தலங்கள், புண்ணிய தீர்த்தங்கள், ஆழ்வார் ஆசாரியர் அவதாரஸ்தலங்கள் என்றிருக்கின்றன. முதலில் சொன்ன 108 திவ்யதேச மென்னும் திருப்பதிகள் பெரும்பான்மையாக விசிஷ்டாத்வைதத்தைச் சேர்ந்த சில வைஷ்ணவர்களறிவார்களேயன்றி அவற்றின் திரு நாமங்கள் முழுமையு மறிந்தவர்கள் மிகவும் சிறுபான்மையரே என்பது அடியேன் அபிப்பிராயம். அன்றியும் அவற்றுள் (க்ஷீராப்தி என்னும் திருப்பாற்கடல், திருநாடென்னும் பரமபதம் இவ்விரண்டையு மகற்றி) இந்த ஸ்தூல சரீரத்துடன் சேவிக்கும்படியான ஏனைய 106 திவ்விய தேசங்களைச் சென்று முழுதும் சேவிக்கப் பெற்றவர்கள் ஒருவரிருவரிருப்பரோ இலரோ! ஏனெனில் இத்திவ்யதேசங்கள் யாவும் ஓரிடமில்லாமல் மலைப்பிரதேசங்களிலும், சரியான வழியில்லாத காடுகளின் மத்தியிலும், பக்கலில் சஞ்சரிக்கும் சாமானியஜனங்களுமறியாத ஸ்தலங்களிலிருக்கின்றமையாலும், அவற்றின் இருப்பிடமும், அவற்றைச் சேரும் மார்க்கமுமாகிய வழியும், அவ்விடம் தங்கும்

வசதி முதலிய சவுகரியங்களும் நன்ருய்த் தெரியாமையே யன்றி வேறில்லை. அடியேன் கேள்விப்பட்டுச் சென்ற வைஷ்ணவ, புராணஸ்தலங்கள், புண்ணிய தீர்த்த நதிகள், யாவும் ஒரு தடவைக்கு மேல்பட்டு சேவித்ததின் பிறகு, அடியேனுக்கு மனதில் ஏற்பட்ட சங்கல்பம் என்னவென்றல், முதல் திருப்பதியாகிய திருவரங்கம் முதல்கொண்டு, அடியேன் 1932-ம்வருஷம் சேவித்த வடநாட்டுத் திருப்பதிகளில் எட்டுத் திவ்ய தேசங்கள் நீங்களாக, ஏனைய திவ்யதேசங்களைமுறையே சென்று சேவித்து அவற்றின் விஷயமாய் இதைப் போன்ற ஒரு சிறு கிரந்தத்தைப் பிரசுரம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் அந்தர்யாமியின் அருளால் உண்டாயிற்று. அம்மாதிரியே சங்கல்பம் செய்து கொண்டு அடியேன் இத்திருப்பதிகளின் விஷயமாய் ஏனையோர் எழுதியுள்ள சில கிரந்தங்களைச் சேகரித்து வழி வசதிகளை அறிந்து செல்லவேண்டுமென முயன்றதில், சரியானபடி மார்க்கம் வசதி மற்ற தங்கும் சவுகரியங்களைக் குறித்து அடியேன் சேகரித்த கிரந்தங்கள் அடியேனுடைய திருப்திகரமாய் இல்லாமையால், அடியேன் அவ்விஷயமாய் ஒவ்வொரு திவ்விய தேசத்திற்கும் சகல விஷயங்களுமடங்கின (புராண மகத்துவம், ஸ்தல விசேஷம், அவற்றை மங்களாசாசனம் செய்த ஆழ்வார்கள், அவர்கள் அருளிச் செய்த கிரந்தங்களின் பெயர், அவற்றின் பாசுரங்களின் விவரங்கள், கூடிய வரையிலும் அடியேன் பிடித்த அவற்றின் போடோ படங்கள், மற்றும் மார்க்கத்தின் படம், மற்றும் விசேஷக்குறிப்புகளடங்கிய) கிரந்தம் ஒன்றைத் தயார் செய்யும் விஷயத்தில் தற்பொழுதுள்ள மார்க்க வசதிகள் போகுமுபாயங்கள் தங்கும் வசதி முதலிய

வைகளைச் செவ்வையாய் யாத்ரீகர்களுக்குத் தெரிவிக்க வேண்டுமென்ற பிரம்மானந்தத்துடன் அடியேன் 31—12—33 தேதியன்று திருவரங்கத்தைச் சேவித்து, எம்பெருமானின் அனுக்கிரககடாக்ஷத்தால்முன்னுக்கு யாத்திரைசெய்து சோழநாட்டுத் திருப்பதிகள் 40-ம், நடுநாட்டுத் திருப்பதிகள் 2-ம். தொண்டை நாட்டுத் திருப்பதிகள் 22-ம், ஆக 64 திவ்விய தேசங்களை 22 நாட்களில் தரிசித்துக்கொண்டு அடியேன்ஸ்தலம் சேர்ந்தேன். பின்னர் வடநாட்டுத் திருப்பதிகளில் திருப்பாற்கடல், சாளக்கிராமம் நீங்கலாக மற்ற 10 திருப்பதிகளில், அடியேன் தரிசினம் செய்யாது விட்டுப்போன, சிங்கவேழ்குன்றம் (அகோபலம்), துவாரகை என்பவைகளைச் சேவித்து, கடைசியாக பாண்டிய நாடு மற்றும் மலைநாட்டுத் திருப்பதிகளை முறையே சேவித்து, எம்பெருமான் ஆழ்வார் ஆசாரியர்களின் கிருபாகடாக்ஷத்தினுலும் பரமபாகவதர்களின் பாத தூளியே அடியேனுக்கு மிகவும் மஹத்தான சக்தி எனத்தெளிந்து இக்கிரந்தத்தை வரைய ஆரம்பித்தேன். இதில் அடியேனுடைய புத்தி சூட்க்ஷமங்களினுல் தெரியப்படுத்தும் விஷயங்கள் யாதுமில்லை. அடியேன் சென்று, கண்டு, கேட்டறிந்த உண்மை விஷயங்களைத் தவிர வேறுபாடான பிரமிக்கத்தக்க விஷயங்கள் ஒன்றுமே இல்லை. மற்றும் அனேகர்களுக்கு ஆழ்வார்களின் திருநாமங்கள்கூட சரியாய்த் தெரிந்தபாடில்லையென்ற துரபிப்பிராயம் அடியேன் மனதில் குடிகொண்டதால் 12 ஆழ்வார்களின் வைபவங்களைச் சுருக்கியும், அவர்கள் அருளிச்செய்த கிரந்தங்கள், மங்களாசாசன பாசுரக் குறிப்புகளை ஒருவாறு சங்கிரகமாய் எழுதத் துணிந்ததற்கு அடியேனை க்ஷமிக்க

வேண்டுமென தண்டனிட்ட பிரார்த்தனே. இவ்வாறு ஆழ்வார்களின் வைபவங்களே எழுதும் சமயத்தில் அடியேன் பரிசோசித்த இதர ஆங்கிலேய கிரந்தங்களி லுள்ள ஆழ்வார்களின் ஜீவியதிசையின் காலம் குரு பரம் பராப்பாவத்தில் கண்டிருக்கும் அவர்களின் ஜீவிய காலமும் வெகுவேறுபாடாயிருப்பதினுல் (ஆங்கி லேய கிரந்தங்களில் ஆழ்வார்களின் ஜீவிய காலம் குரு பரம்பரையில் கண்ட காலத்தைவிட வெகுகாலம் பின் னிட்டதாய் சொல்லி இருப்பதனுல்), அடியேன் குருப ரம்பரா ப்ரபாவத்தில் கண்டிருக்கும் ஆழ்வார்களின் ஜீவியகாலத்தையே அனுசரித்துக்கொண்டிருக்கிறேன்.

மற்றும் இப்பன்னிரு ஆழ்வார்கள் வேதத்தின் சாரத்தையே தென்மொழியில் இந்நாலாயிர திவ்ய ப்ரபந்தமாய்ப் பகர்ந்தனர் என்றுலும், இவ்வாழ்வார்கள் தனித்தனியே மங்களாசாசனம் செய்ததாகச் சொல்லி யிருக்கும் ஒவ்வொரு திவ்வியதேசங்களுக்குச் சென்று அவ்விடத்திய பெருமாள்களே மங்களாசாசனம் செய் தருளியிருக்க வேண்டும். அல்லது அந்தந்த திவ்விய தேசத்திய பெருமான்கள் யோகத்திலெழுந்தருளி யிருக்கும் ஆழ்வார்களின் எதிரில் சென்று தரிசனம் கொடுத்து மங்களாசாசனம் பெற்றிருந்தாலுமிருக் கலாம். ஆனுல் இப்பன்னிருவருக்குள் யாராகிலு மொருவர் இந்த 108 திவ்ய தேசங்களே ஒன்றையும் தவிராமல் மங்களாசாசனம் செய்திருப்பதாகக் காண வில்லே. இம்மங்களாசாசனமாயிருக்கும் திவ்ய தேசங்களெல்லாம் ஒரு காலத்தில் மிகவும் செழிப் பாய் அவற்றிலுள்ள பெருமான்களுக்கெல்லாம் எங்கும் நற்புகழுண்டாய் அக்காலத்து அரசர்களின் அசாதாரண ஆதரவுக்குட்பட்டவைகளாய் பெரும்

புகழ்பெற்றிருந்திருக்க வேண்டும். இந்த அபிப்பிரா யத்திற்கு ஆதாரம் யாதென்றால், வெகு சில திவ்ய தேசங்களைத் தவிர மற்றெல்லாத் திவ்ய தேசங் களின் சந்நதிகள் மிகப் பெரிய கட்டிடங்களாகி யும் அவற்றினுள்ளிருக்கும் பெருமாள்களின் மூல விக்கிரகங்கள் மிகவும் பெரியவையாயும் அழகாயும் என்றும் சிதலைமாகாவண்ணமாயும் ஸ்தாபிக்கப்பட்டி ருக்கின்றன. வெகு பல சந்நதிகளில் யாத்திரீகர்கள் தங்கப் பெரிய சுற்றுப்பிரகார கட்டிடங்கள் அஜீரண மாகாமல் இருக்கும்படி கருப்புக் கற்களினால் அமைக் கப்பட்டுள்ளன. நவீனமாய் ஏற்பட்டிருக்கும் சில விஷ்ணு சந்நதிகளில் மூலஸ்தானம் பெரியதாய் இருப்பதில்லை. இதைப் பார்த்தாலே இது நவீன சந்நதியே யென்று சொல்லலாம். வட நாட்டிலும், மற்றும் தொண்டை நாட்டில் சில சந்நதிகளைத் தவிர, ஆழ்வார்கள் மங்களாசாசனமாயிருக்கும் ஏனைய சந் நதிகள் மிகவும் பெரியவை.

சில விசேஷ சந்நதிகளில் பெருமாள் புஜங்க சயனமாயிருந்தால் இதைச் சுற்றிலுமுள்ள திவ்ய தேசங்களில் மூலஸ்தானப் பெருமான்கள் புஜங்கசயன மாகவே இருக்கின்றனர். நின்ற திருக்கோலமாய்ச் சில நெருங்கின பிரதேசங்களிலும், வீற்றிருந்த திருக் கோலமாய்ச் சில பிரதேசங்களிலும் மூலஸ்தானங்க ளிருக்கின்றன. ஆனால் இந்த 106 திவ்யதேசங்களி லும் திருவிடவெந்தை என்னும் 63-வது திவ்ய தேசத்தின் நித்தியகல்யாணர் எனப்படும் வராகமூர்த்தி யைப்போல் வேறெந்த ஸ்தலத்திலும் தரிசினம் கிடையாது. மலைநாட்டு 13 திவ்ய தேசங்களிலும், திருவேங்கிடம் தவிர, ஏனைய வடநாட்டுத் திருப்பதி

களின் உற்சவ விக்கிரகங்கள் வெகுவும் சிறியவை. இவைகளுக்கு விசேஷ ஸ்ருங்காரங்கள் மற்றும் வாகனங்கள் கிடையாது. ஸ்ரீ பாஷ்யகாரரான இராமாநுஜர் மலைநாட்டிற்குச் செல்லாததால் அவ்விடம் பாஞ்சராத்திர பூஜைக் கிராமங்களில்லை. ஐயங்கார்களென்ற ஸ்ரீ வைஷ்ணவர்கள் இந்தத் திவ்ய தேசங்களில் வசிப்பதுமில்லை. இத்திவ்ய தேசங்களில் பூஜை செய்பவர்களெல்லோரும் சந்தன ஊர்த்துவ புண்டரம் தரிக்கும் சிவில்லி பிராமணர்களென்னும் உடுப்பி பிராந்தியத்து ஸ்மார்த்த பிராமணர்களேயாவர். ஒவ்வொரு மங்களாசாசனமான விஷ்ணு சந்நதிகளிலும் சிவன் கோயிலுண்டு. ஒரு அர்ச்சகரே இவ்விரண்டு சந்நதிகளுக்கும் பூஜை செய்வார். அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட அர்ச்சகர்களிருந்தால் தினம் மாறி மாறி முறை பூஜை செய்வார்கள். வித்துவக்கோடு என்னும் மலைநாட்டுத் திவ்யதேசத்தின் சந்நதிக்குள் நுழையும்பொழுது சிவலிங்க தரிசனம் செய்தே பின்னண்டையிலுள்ள சந்நதியில் விஷ்ணுவின் தரிசனம். இம்மாதிரியாகவே தில்லை சித்திரக்கூடத்திலும், திருக்கடல்மல்லை யென்னும் மஹாபலிபுரத்திலுள்ள பூர்வீக மங்களாசாசனமான சந்நதியாகிய ஷோர் டெம்பில் (Shore Temple) என்றழைக்கப்படும் ஸ்தலமும், நிலாத்திங்கள்துண்டம் என்று மங்களாசானமாகப் பெற்ற விஷ்ணுவின் சந்நதி பெரியகாஞ்சீபுரத்திலுள்ள ஏகாம்பரீஸ்வரர் ஆலயத்திலும், திருக்கள்வனூர் என்று மங்களாசாசனமாகப் பெற்ற விஷ்ணுவின் சந்நதி காஞ்சியில் காமாக்ஷியம்மன் கர்ப்பக் கிரஹத்திலும் முள்ளன.

யாத்திரீகர்கள் சரியான மார்க்கமறிந்து மார்க்கத்திலிருக்கும் ஒவ்வொரு சந்நதியையும் தவராமல் சேவிக்குமாறு அடியேன் வரிசைக் கிரமத்தைக் கொடுத்து இக்கிரந்தத்தில் சேர்த்திருக்கும் திவ்ய தேச யாத்ரா படத்திலும் மார்க்கம் குறிப்பிடப்பட்டிருக்கிறேன். நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் 108 திருப்பதிகளின் அட்டவணையில் கண்ட வரிசைக் கிரம நெம்பர்கள் இக்கிரந்தத்தில் கண்ட திவ்ய தேசங்களின் கடைசியில் காணப்பட்டிருக்கின்றன. அடியேன் எடுத்துக்கொண்ட வரிசைக்கிரம திவ்யதேசங்கள் நாடுகளின் வரிசைக் கிரமமாய்க் கீழ்க்கண்டவாறு.

A சோழ. (40) நடு. (2) தொண்டை (22) ஆக 64-ஒரே யாத்திரையில் தரிசிக்கலாம்.

B பாண்டிய (18) மலைநாடு (13) ஆக 31-ஒரே யாத்திரையில் தரிசிக்கலாம்.

C வடநாடு (12)—இதில் திருப்பாற்கடலன்றி மற்ற 11 திருப்பதிகளை நான்கு யாத்திரைகளாய்த் தரிசிக்கவேண்டும்.

i துவாரகை

ii திருவேங்கிடம் & சிங்கவேழ்குன்றம் (அகோபலம்.)

iii வடமதுரை, ஆயர்பாடி (கோகுலம் எனப்படுவது) தரிசித்துக்கொண்டு, நேராய் ஹரித்வாரம் பத்ரி திறக்கும் சமயத்தில் சென்று வழிகளிலுள்ள திருக்கண்டங்கடிநகர் (இப்பொழுது தேவப்பிரயாகை எனப்படுவது (Deva Prayag), திருப்பிரிதி என்னும் ஜோஷி மடம் (Joshi Mut), மற்றும் வதரியாச்சிரமமென்னும் பத்ரீநாராயணனைச் சேவித்துக்கொண்டு

திரும்பும் மார்க்கத்தில் நைமிசாரண்யம், அயோத்தியா, சேவித்துக்கொண்டு ஊர் திரும்பலாம்.

iv சாளக்கிராம மென்னும் நேபால் (Nepal) தேசத்திலுள்ள திவ்ய தேசம் (அடியேன் இன்னும் சேவிக்காதது இது மட்டுமே.

மேலே சொன்ன A என்று குறிப்பிட்டுள்ள வகுப்பின் திவ்ய தேசங்களின் மொத்தம் 64. இவைகளை வெகு சுலபமாயும் அனுகூலமாயும் 25 லிருந்து 30 நாட்களுக்குள் தரிசிக்கலாம். காலதாமத மின்றித் தரிசிக்க வேண்டுமானல் கண்டிப்பாய் 20 நாட்களுக்குள் தரிசிக்கலாம். எப்படியென்றால் திருநாங்கூரில் ஊருக்குள்ளேயே இருக்கும் 6 சந்நதி களையும் 6 திவ்ய தேசங்களாக எண்ணப்படுகின்றன. இவைகளையெல்லாம் ஒரே சாயங்காலத்தில் தரிசிக்க லாம். சுற்றிலும் 3 மைல்களுக்குள்ளிருக்கும் திரு வாலி, திருநகரி, காவளம்பாடி, திருமணிக்கூடம், பார்த்தன்பள்ளி, திருத்தேவனார்தொகை என்னும் கீழைச்சாலை, திருவெள்ளக்குளம் என்னும் அண்ணன் கோயில் ஆக 7 சந்நதிகளையும் ஒரே நாள் தவறி னால் 2 நாட்களில் தரிசிக்கலாம். மற்றும் காஞ்சீ புரத்திலுள்ள 14 சந்நதிகளையும் இரண்டே நாட்க ளில் சேவிக்கலாம். நடுநாட்டு இரண்டு திவ்ய தேசங்களையும் ஒரே நாளில் சேவிக்க அனுகூலமுண்டு. ஆனல் ஒவ்வொரு திவ்ய தேசத்திலும் 3 இராத் தங்கவேண்டுமென்னும் அபிப்பிராயப்படும் யாத்ரீகர்க ளுக்கு அடியேன் இத்தகைய கணக்கை சொல்லுவ தில்லை. சம்சார அலுவல்களையே பெரிதாகக்கொண்டு திவ்யதேச யாத்திரை செய்வதற்குப் பொழுதில்லை யென்று வருந்தும் வைஷ்ணவர்களுக்கு மாத்திரம்

அடியேன் மேல்க்கண்டவாறு சொல்லும் சூழ்ச்சி. இம்மாதிரியாகவே B. வகுப்பில் கண்ட 31 திவ்விய தேசங்களையும் 10 நாட்களில் சேவிக்கலாம். எப்படியென்றால் ஆழ்வார் திருநகரி ஸ்ரீவைகுண்டத்தைச் சேர்ந்த நவதிருப்பதிகளென்னும் 8 திவ்விய தேசங்களையும் 1 அல்லது 2 தினங்களில் சேவிக்கலாம். மத்திய திருவனந்தபுரத்தின் செங்கனூர் (வடக்கு) சுற்றிலுமுள்ள 6 திவ்விய தேசங்களையும் 1 அல்லது 2 தினங்களில் சேவிக்கலாம். (அவைகளாவன: 1. திருப்புலியூர் (குட்டநாடு) 2. திருச்செங்குன்றூர் 3. திருவண்வண்டூர் 4. திருவாறண்விளை 5. திருவல்லவாழ் (**Trivella**) மற்றும் 6. திருக்கடித்தானம்). நிதானமாய்ச் சேவித்தாலும் இந்த 31-திவ்ய தேசங்களையும் 12-லிருந்து 15-நாட்களுக்குள் கண்டிப்பாய் சேவிக்கலாம்.

C வகுப்பிலுள்ள திருப்பதிகளைக் கீழ்க்கண்டவாறு நான்கு தடவைகளில் சேவிக்கலாம்.

I துவாரகை — இவ்விடத்திற்குப் பம்பாயிலிருந்து போக 2நாள், திரும்ப 2 நாள், அவ்விடம் ஒரு வாரமானாலும் 10 நாட்கள் செல்லும்.

II திருவேங்கிடம், சிங்கவேழ்குன்றம், 1 வாரத்திலிருந்து 10 நாட்கள் ஆகலாம்.

III வடமதுரை, கோகுலம், என்கிற ஆயர்பாடி, கண்டமென்னும் கடிநகர் அல்லது திருக்கண்டங்கடி நகர் (Devaprayag), திருப்பிரிதி அல்லது ஜோஷிமடம், வதிரியாச்சிரம மென்னும் பத்ரீ நாராயணன், நைமிசாரண்யம், அயோத்தியா, இவைகளைச் சேவிக்க $1\frac{1}{2}$ அல்லது 2 மாத காலங்களுக்குக் குறைவில்லை.

## IV சாளக்கிராமம்.

சரியான வெய்யற் காலத்தில் நேபால் தேசத்தில் சாதுக்கள் சேர்ந்தால் 1½ யிலிருந்து 2 மாதங்களாகும்.

வடநாட்டு யாத்திரை செய்யும்பொழுது சரியான படுக்கை, கம்பளித் துணிகள், பாதரட்க்ஷை முதலானது வேண்டும். இக்கிரந்தத்தின் 102வதான வதரியாச்சிரமத்தில் கண்டிருக்கும் குறிப்பில் பார்க்கவும். தென்னாட்டு யாத்திரைகளுக்குப் படுக்கை துணிமணிகள் அதிகம் வேண்டுவதில்லை. மற்றும் இந்த யாத்திரைகள் செய்ய விரும்புவோர் தினமும் ஸ்நானம் செய்து பகலில் ஓரே தடவை பிரசாதப் பட்டால் வெகு சுகமுண்டு. போகுமிடங்களில் சந்நதிகளின் பிரசாதப் பட்டாலும், இரவில் புசித்தாலும் அஜீரணத்தால் வியாதியஸ்தராய் விடுவார்கள். ஒரு வேளையே பிரசாதப்பட்டுச் சதா பகவத்தியானம் செய்துகொண்டு யாத்திரை செய்தால் வெகு சுலபமாய் வியாதியின்றி இந்த யாத்திரைகளைச் செய்து முடிக்கலாம். திவ்ய தேசயாத்திரை செய்ய 3 ஹேதுக்கள் முக்கியம். 1. திரவியம் 2. சந்தர்ப்பம் (circumstances) 3. திரேக சௌக்கியம் அல்லது திரேக பலம். இவைகளில் யாதாமொன்று குறைந்தால் கண்டிப்பாய் எல்லாத் திவ்ய தேசங்களையும் சுலப யாத்திரை செய்ய முடியாது.

மித ஆகாரப் பழக்கமும் உப்பு காரம் புளிப்பு என்னும் சுவைகளைக் குறைத்தோ அல்லது ஒழித்தோ இருந்தால் வெகு சுலபமாய் அந்தந்த தேசத்து ஆகாரங்களை அருந்தி ஜீரணிக்கச் செய்யலாம். ஆனல் சுயம்பாகம் செய்து கொள்ளும் பழக்கமிருந்தால்

மிகவும் உத்தமம். வடநாடு செல்வதானால் ஹிந்தி பாஷை தெரிய வேண்டும் அல்லது தெரிந்தவர் பக்கவில் இருக்கவேண்டும். வெகு மிதமாய்ச் சிலவுகள் செய்தால் தைரியமாய் ஊர் திரும்பிவந்து சேரலாம். ஏனென்றால் சோழ, பாண்டிய, நடு, தொண்டை நாட்டுத் திவ்ய தேசங்களின் சந்நதிகளில் யாத்ரீகர்களை அவர்கள் சக்திக்கு மீறின பணச்செலவு செய்யும்படி அர்ச்சகர்கள் செய்து விடுவார்கள். ஆகையால் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்.

இக்கிரந்தத்தில் நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தில் அடங்கிய விஷயங்களெல்லாம் சங்கிரஹமாய்த் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன. எவ்வாறெனில், 12 ஆழ்வார்கள், அவர்களின் வைபவங்கள், அவர்கள் அருளிச் செய்த கிரந்தங்கள், அவற்றின் பாசுர எண்ணிக்கைகள், அவர்கள் மங்களாசாசனம் செய்தருளிய திவ்ய தேசங்களின் திருநாமங்கள், திவ்ய தேசங்களைக் குறிப்பிக்கும் பாசுரங்கள், மற்றும் அத்திவ்யதேசங்களுக்குச் செல்லும் மார்க்கமும் அவ்விடத்திய வசதிகளும் இந்நூலில் அடங்கியுள்ளன. இந்நூலிலில்லாத விஷயம் என்னவென்றால் பாசுரங்கள் அல்லது அவற்றின் தாத்பர்யங்கள். அவைகளை இச்சிறு நூலில் சேர்க்க இயலாத காரியம். இந்நூலினால் அறியக்கூடிய விஷயம் யாதெனில், நாலாயிரதிவ்ய ப்ரபந்தம் என்பது என்ன, அதில் எந்தெந்த விஷயங்கள் அடங்கியவை, எந்தெந்த ஆழ்வார்கள் அருளிச் செய்த பிரபந்தங்கள் எவை எவை, அவை எம்மாதிரி வெளியிடப்பட்டன, அதில் எந்தெந்த விஷயங்கள் சேர்ந்திருக்கின்றன, மங்களாசாசனமான சந்நதிகளெல்லாம் எவ்விடம் உள்ளன என்னும் மார்க்க வசதிகள் அடங்கிய விஷய விவரங்களேயாம்.

## வசிஷ்டாத்வைத சித்தாந்தத்தின் 12 ஆழ்வார்களின் பெயரும் அவர்களின் வரிசைக்கிரமமும், அவதார பரமபத ஸ்தலங்களும், வைபவமும், அவர்க ளருளிச்செய்த பிரபந்தங்களும், அவற்றி லுள்ள பாசுரங்களின் எண்ணிக் கையும், அவற்றால் மங்களாசாச னமாகப்பெற்ற திவ்யதேசங் களின் விவரங்களும்.

1 போய்கையாழ்வார்.
அவதாரம்—காஞ்சீபுரம்.
பரமபதம்—திருக்கோவலூர்.

திருமாலின் பாஞ்சஜந்யாம்ஸம் — இவர் துவாபரயுகம் 8,62,901-வதான சித்தார்த்தி௵ ஐப்பசி-மீ சுக்லபக்ஷம் அஷ்டமி செவ்வாய்க்கிழமை கூடின திருவோண நக்ஷத்திரத்தில் அயோநிஜராய், ஸர்வேஸ்வரனை பிரம்மா அஸ்வமேத யாகத்தால் ஆராதித்தவிடமாகையால் "காஞ்சிபுரம்" என்று புகழுற்ற க்ஷேத்திரத்தில் புண்ணியத்தைப் பெருக்கத் தக்க கச்சித் திருவெஃகா வென்று திவ்யதேச நாமத்தைக் கொண்டாடும் யதோக்தகாரி அல்லது சொன்ன வண்ணஞ்செய்தபெருமாள் சந்நிதிக்கு வடபுரமாயுள்ள பொய்கைப் புஷ்கரிணியில் பொற்றாமரை மலரில் திருவவதரித்தருளினர்.

இவர் அருளிச்செய்த ப்ரபந்தம்—முதல் திருவந்தாதி 100 பாசுரங்கள்.

இவற்றுள் இவர் 6-ம் பாசுரத்தினல் திருவரங்கத்தையும், 77-வது பாசுரத்தினல் திருவேங்கிடம், திருவிண்ணகர், திருவெஃகா என்னும் மூன்று திவ்ய தேசங்களையும், 25-ம் பாசுரத்தால் திருப்பாற்கடலையும், 86-ம் பாசுரத்தினல் திருக்கோவலூரையும், 26, 37, 40,

68, 76, 77, 82, 99 பாசுரங்களில் திருவேங்கிடத்தை யும் மங்களாசாசனம் செய்ததாகக் கொள்ளப்படு கிறது.

இவர் முதலாழ்வார்கள் என்று பெயர் பெற்ற மூன்று ஆழ்வார்களில் முதல்வர். மற்றய இருவர் பூதத்தார், பேயாழ்வார் என்பவர்கள்.

2 பூதத்தாழ்வார்
அவதாரம் திருக்கடல் மல்லை யென்னும்-மஹாபலிபுரம்.
பரமபதம்—திருக்கோவலூர்.

ஈஸ்வரனின் ஸ்ரீகதாம்சம். இவர் துவாபர யுகம் 8,62,901—வ தான சித்தார்த்தி ஹு ஐப்பசி-மீ௴ சுக்லபக்ஷம் நவமி புதன்கிழமை கூடின அவிட்ட நக்ஷத்திரத்தில் அயோநிஜராய்த் திருக்கடல்மல்லை யென்னும் தொண்டைநாட்டுத் திவ்யதேசமாகிய மஹாபலிபுரமென்று விளங்கும் க்ஷேத்திரத்திலுள்ள குளக்கரையின் எதிரில் வடபாகமாய் இப்பொழுது பெருமாளுக்கு திருநந்த வனமாயிருக்குமிடத்தில் குருக்கத்தி மலரில் திருவவ தரித்தருளினர். இவர் அருளிச் செய்த ப்ரபந்தம் இரண்டாந் திருவந்தாதி 100 பாசுரங்கள்.

இவர் முதலாழ்வார்கள் மூவரில் இரண்டாவ தாவர். பொய்கையாழ்வாரைவிட ஒருநாள் சிறியவர். இவர் 25, 28, 33, 45, 46, 53, 54, 72, 75 பாசுரங்க ளில் திருவேங்கிடத்தையும், 3, 28-ம் பாசுரங்களால் திருப்பாற்கடலையும், 94-ம் பாசுரத்தினல் பாடகம் என்னும் கஞ்சிபுரத்தில் பாண்டவர் தூதரென்று வழங்கும் பெருமாளையும், 46-வது பாசுரத்தினல் திருக் கோட்டியூர், ஸ்ரீரங்கம், திருநீர்மலை, திருவேங்கிடம் என்னும் திவ்ய தேசங்களையும், 70-வது பாசுரத்தினல் திருத்தண்கால், தஞ்சை மாமணிக்கோவில், ஸ்ரீரங்கம்,

திருக்கடல்மல்லை, திருக்கோவலூர் மற்றும் திருக்குடந்தை என்னும் திவ்ய தேசங்களையும், 28-ம் பாசுரத்தால் திருவேங்கிடத்துடன் ஸ்ரீரங்கத்தையும் 46, 48, 54-ம் பாசுரங்களில் திருமாலிருஞ்சோலையையும் சேர்த்து மங்களாசாசனம் செய்ததாகக் கொள்ளப்படுகிறது.

3 பேயாழ்வார்.
அவதாரம்—மைலாப்பூர்
பரமபதம்—திருக்கோவலூர்
} ஸ்ரீ நந்தகாம்ஸம். இவர் துவாபரயுகம் 8,62,901—வதான சித்தார்த்தி ஐப்பசி—மீ சுக்லபக்ஷம் தசமி வியாழக்கிழமை கூடின சதய நக்ஷத்திரத்தில் அயோநிஜராய், மைலாப்பூர் என்று வழங்கும் திருமயிலையில், கேசவப்பெருமாள் ஸந்நிதிக்கு அடுத்த திருக்கிணற்றில் செவ்வல்லிமலரில் திருவவதரித்தருளினர். இவர் பொய்கையாழ்வாரைவிட இரண்டு நாளும், பூதத்தாழ்வாரைவிட ஒருநாளும் இளையவர். ஆகையால் இவர் முதலாழ்வார்களில் மூன்றுவதாவர்.

இவர் அருளிச்செய்த ப்ரபந்தம் மூன்றுந் திருவந்தாதி
100 பாசுரங்கள்.

இவற்றுள் இவர் 14. 26, 30, 32, 39, 40, 45, 58, 61, 62, 63, 68, 73, 75, 89-வது பாசுரங்களினுல் திருவேங்கிடத்தையும், 61, 62 பாசுரங்களினுல் திருவிண்ணகரத்தையும், 30, 62 பாசுரங்களினுல் திருக்குடந்தையையும், 62-வது பாசுரத்தினுல் திருக்கோட்டிபூரையும், 26, 62, 64 பாசுரங்களில் திருவெஃகாவையும் 26, 34, 62 பாசுரங்களில் வேளுக்கையையும் 26-வது பாசுரத்தில் திருக்கச்சியையும் 62-வது பாசுரத்தில் திருவரங்கத்தையும் 30-வது

பாசுரத்தில் பாடகத்தையும், திருப்பாற்கடலையும் 99-வது பாசுரத்தில் அட்டபுயகரத்தையும், 16-வது பாசுரத்தில் திருவல்லிக்கேணியையும். 61-வது பாசுரத்தில் திருப்பாற்கடல், திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை, திருக்கடிகை,பரமபதம் என்னும் திவ்யதேசங்களையும் மங்களாசாசனம் செய்திருப்பதாகக் கொள்கை.

| | |
|---|---|
| 4 திருமழிசையாழ்வார்.<br>அவதாரம் — பட்டணத்திற்குப் பக்கமிருக்கும் திருமழிசையில்.<br>பரமபதம்—திருக்குடந்தை. | —சக்ராம்ஸம். இவர் துவாபரயுகம் 8,62,901-வதான சித்தார்த்தி ஹு தை-மீ க்ருஷ்ணபக்ஷம் ப்ரதமை, ஞாயிற்றுக் |

கிழமை கூடின மகா நக்ஷத்திரத்தில், பார்க்கவருக்கும் கநகாவதியாருக்கும் திருக்குமாரராக திருமழிசையில் திருவவதரித்தருளினர். இவர் ஒரு பிண்டம் போல் ரூபங்கள் தோன்றாமல் அவதரிக்கையாலே பார்க்கவரும் அவர் பத்நியும் அநாதரித்து ஒரு பிரம்பின் புதரின்கீழ் போட்டுவிட்டுப் போனார்கள். பிரம்பு அறுக்கப்போன திருவாளன் என்பவன் இப்பிள்ளையைக் கண்டெடுத்து, தானும் தன் பத்நியும் இவரை வளர்க்கையில் எல்லா அவயவங்களும் பரிபூர்ணமாய் எழுந்தருளிப் பேசுவதும் அழுவதும் ஒன்றுமின்றி முலைப்பாலுண்கை முதலான போஜ்யங்களில் ஆசையற்று மலமூத்ரங்களுமில்லாமல் ஆழ்வார் வளர்ந்துகொண்டிருந்தார். இவருடைய வரப்பிரசாதத்தினாலும், இவர் சேஷித்த பாலை யருந்தினதினல் யௌவனமடைந்த நான்காம் வர்ணத்திற் பிறந்த, ஓர் கிழவனுக்கும் அவன் சம்சாரத்திற்கும் திருமழிசையில் பிறந்த புத்திரனின் பெயர் கணிகண்ணன்(திருவெஃகாநயனரின் சரிதையில் கண்டவர்). இவ்வாழ்வார்

முதலாழ்வார்கள் மூவருடன் சிலகாலம் (மதராஸ்) மைலாப்பூரில் பேயாழ்வார் திருவவதரித்தருளின கைரவ தீர்த்தக்கரையில் யோகத்தில் எழுந்தருளி, முதலாழ்வார்கள் மூவரும் இவருடைய அனுமதி கொண்டு பூசஞ்சாரார்த்தமாக எழுந்தருளியபின் திருமழிசைக்கு எழுந்தருளி, சிலநாள் சென்ற பின்பு, ஸத்யவ்ரதம் என்று பேர்பெற்ற கச்சி திருவெஃகாவுக் கெழுந்தருளி, பொய்கையாழ்வார் அவதரித்தருளின பொய்கைக்கரையில் யோகத்தில் எழுந்தருளியிருந்து பின்பு திருக்குடந்தைக்கு எழுந்தருளி, ஆராவமுதனைச் சேவித்து, தாம் செய்த க்ரந்தங்களாகிய 100 சம்புடங் களையும் காவேரி வெள்ளத்தில் விட்டுவிட நான்முகன் திருவந்தாதியும், திருச்சந்த விருத்தமும், வெள்ளத்தில் எதிர்த்துவந்தன; அவற்றை யெடுத்துக்கொண்டு ஆரா வமுதாழ்வாருடைய திவ்ய மங்கள விக்ரஹத்தைச் சேவித்து "காவிரிக்கரைக் குடந்தையுள் கிடந்தவாறெ ழுந்திருந்து பேசு" என்று விண்ணப்பஞ்செய்ய, ஆரா வமுதாழ்வாரும் அப்படியே உத்யோகிக்க, அந்த ஸௌலப்ய குணத்துக்குத் தோற்று "வாழிகேசனே" என்று மங்களாசாசனம் பண்ணி, திருமேனியுடனே ஆகாரங்களை விட்டுக் காய்கிழங்குகளைச் சிறிது அமுது செய்து 4700 வருடங்கள் பகவதநுபவம் பண்ணிக் கொண்டு திருக்குடந்தையிலேயே எழுந்தருளி யிருந் தனர்.

இவர் அருளிச்செய்த ப்ரபந்தங்கள் திருச்சந்த விருத்தம் 120 பாசுரங்கள், நான்முகன் திருவந்தாதி 96 பாசுரங்கள், மொத்தம் 216 பாசுரங்கள்.

இவைகளில் எந்தெந்த திவ்ய தேசங்களை மங்களாசாசனம் செய்திருக்கிறாரென்பதின் விவரம் கீழ்க் காண்க.

| திவ்யதேசம் | ப்ரபந்தம் | பாசுரங்கள் |
|---|---|---|
| 1 திருவரங்கம் | திருச்சந்த விருத்தம் | 21, 49 to 55, 93, 119 |
| | நான்முகன் திருவந்தாதி | 3, 30, 36, 60 |
| 2 திருவேங்கிடம் | ,, | 34, 39 to 48, 90 |
| | திருச்சந்த விருத்தம் | 81 |
| 3 திருக்குடந்தை | ,, | 56 to 61 |
| | நான்முகன் திருவந்தாதி | 36 |
| 4 திருவெஃகா | ,, | 36 |
| | திருச்சந்த விருத்தம் | 63—64 |
| 5 திருப்பாற்கடல் | ,, | 81—95 |
| | நான்முகன் திருவந்தாதி | 3—36 |
| 6 திருவெவ்வுள் (திருவள்ளூர்) | ,, | 36 |
| 7 அன்பில் | ,, | 36 |
| 8 திருப்பேர் நகர் | ,, | 36 |
| 9 திருக்கூடல் | ,, | 39 |
| 10 கவித்தலம் | ,, | 50 |
| 11 திருக்கோட்டியூர் | ,, | 34 |
| 12 திருவல்லிக்கேணி | ,, | 35 |
| 13 திருக்குறுங்குடி | திருச்சந்த விருத்தம் | 62 |
| 14 பாடகம் | ,, | 63—64 |
| 15 ஊரகம் | ,, | 63—64 |
| 16 பரமபதம் | ,, | 45 |

5 மதுரகவியாழ்வார்.
அவதாரம்—திருநெல்வேலி ஜில்லா, ஸ்ரீ வைகுண்டம் தாலுக்காவைச் சேர்ந்த திருக்கோளூர்.
பரமபதம்—திருக்குருகூர், (ஆழ்வார் திருநகரி.)

(பிராமணர்) ஸ்ரீ வைநதேயாம்ஸம்.

இவர் துவாபரயுகம் 8,63,879-வதான ஈஸ்வர வருஷம் சித்திரைமீ சுக்ல பக்ஷம் சதுர்த்தசி வெள்ளிக்கிழமை கூடின சித்திரை நக்ஷத்திரத்தில் திருக்கோளூரில், சாமவேத பிராமண வருணத்தில் அவதரித்தவர். இவர் நம்மாழ்வாரைத் தன் குருவாகக் கொண்டாடி ஸ்ரீ பராங்குசரான ஷை ஆழ்வாரின் வைபவத்தைக் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்கிற தனதாசாரியன் விஷயமாய் 11 பாசுரங்கள் கொண்ட திவ்ய ப்ரபந்தத்தை யருளிச் செய்து லோகத்தை வாழ்வித் தருளினர்.

6 நம்மாழ்வார்.
அவதாரம்—அப்பன் சந்நதி. திருக்குருகூர்என்கிற ஆழ்வார் திருநகரியின் திருப்புளியமரம் வளர்ந்தவிடம்.
பரமபதம்—திருக்குருகூர்.

ஸ்ரீ சேநாம்ஸம்: இவர் கலியுகம் பிறந்த 43-வது நாள் ப்ரமாதிஞுல வைகாசிமீ 12வ பௌர்நமி வெள்ளிக்கிழமை கூடின விசாக நக்ஷத்ரம் கற்கடக லக்கினத்தில் திருக்குருகையில், காரியாருக்கும் உடையநங்கையாருக்கும் குமாரராய்த் திருவவதரித்தருளினர். இவர் ஸ்ரீ சேநாம்ஸம். இவருக்குப் பெற்றோரிட்ட திருநாமம் மாறன். இவர் சடவாயுவை நிராகரித்தமையால் இவருக்கு சடகோபர் என்றும், பொலிந்து நின்றபிரானல் ப்ரஸாதிக்கப்பட்ட மகிழம்பூ மாலையைச் சாத்திக்கொண்டமையால் வகுளாபரணர் என்றும், பெருமாள் எல்லா ஆழ்வார்களைக் காட்டிலும் இவரை நம்ஆழ்வார் என்று அபிமாநித்தருளினதால் நம்மாழ்

வாரென்றும், ஏனைய மதக்கண்டனம் செய்தமைப் பற்றி பராங்குசரென்றும், திருப்புளிய மரத்தடியி லிருந்ததால் திருப்புளியாழ்வாரென்றும் திருநாம முண்டாயிற்று. இவர் 35 வருடங்கள் மாத்திரம் ஜீவித்திருந்தவர். இவர் பால்யந் தொடங்கி எம்பெரு மானுடைய குணங்களையே தாரகமாக வுடையவராய் அவ்வநுபவத்தாலுண்டான ப்ரீதி உள்ளடங்காமை யால், இயற்பாவாக திருவிருத்தம் 100 பாசுரங்கள், திருவாசிரியம் 7 பாசுரங்கள், பெரிய திருவந்தாதி 87 பாசுரங்கள் கொண்ட மூன்று திவ்ய ப்ரபந்தங் களால், ரிக், யஜுஸ்ஸு, அதர்வணம் என்கிற மூன்று வேதங்களின் ஸாரார்த்தத்தையும், சரமப்ரபந்தமான நான்காவது ஆயிரமாய்ப் பாவிக்கப்படும் திருவாய் மொழியால் 1102 பாசுரங்களில் அர்த்தபஞ்சகத்தை யும், ஸரணாகதி மந்த்ரார்த்தத்தையும், சாமவேத சாரார்த்தத்தையும் உலகத்தோர் நன்றாகத் தெளிந்து உஜ்ஜீவிக்கும்படி அருளிச்செய்திருக்கிறார்.

எல்லாத் திவ்ய தேசங்களிலுமுள்ள எம்பெருமான் களும் திருப்புளியாழ்வாரடியிலே யெழுந்தருளி இவ் வாழ்வாருக்குச் சேவை சாதித்துத் தாங்களும் ஸத்தை பெற்றிருக்கவும், நித்யசூரிகளும் சுவேதத்வீபவாசி களும் இவ்வாழ்வாரைக் காண்கைக்காக வந்து நிற்க வும், அவர்களை ஆழ்வார் சேவித்து 'பொலிக பொலிக' என்று மங்களாசாசனம் பண்ணி, இப்படி வைஷ்ணவர் களின் வைபவத்தை யறிந்து அநுபவித்த தமக்கு உபயவிபூதியிலும் ஒப்பில்லாத பெருமையுடையவ ராய், 35 திருநக்ஷத்திரத்துக்குமேல் அவாவுற்று வீடு பெற்றருளினர்.

பின்னர் ஆழ்வாருக்குப் ப்ரதம சிஷ்யரான மதுர கவிகள் தம் ஆசாரியர் வைபவத்தை, "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்கிற திவ்ய ப்ரபந்தத்தாலே யருளிச் செய்து, அர்ச்சாவதார ரூபமான ஆழ்வார் விக்ரஹத் தையும் எழுந்தருளப்பண்ணி, அவருக்கு நித்ய பக்ஷமாஸ அயந ஸம்வத்ஸர உத்ஸவங்களை யெல்லாம் தாழ்வற நடத்திக்கொண்டு மஹோத்ஸவம் கண்டருளப்பண்ணி வேதம் தமிழ் செய்த பெருமாள் வந்தார்! திருவாய் மொழிப் பெருமாள் வந்தார்! திருநகரிப் பெருமாள் வந்தார்! திருவழுதிவளநாடர் வந்தார்! திருக்குரு கூர்நகர்நம்பி வந்தார்! காரிமாறன் வந்தார்! சட கோபன் வந்தார்! பராங்குசர் வந்தார்! என்று பல சின்னம் பரிமாற, அவ்வளவில் ஏகம்பநாடன் சிஷ்யர்கள் வந்து, "எங்கள் கம்பனோடு தர்க்கித்துச் சங்கப்பலகை யேறினாலொழிய, வேதம் தமிழ் செய்த பெருமாள்! என்று விருது பிடிக்க வொட்டோம்", என்று தடுக்க, மதுரகவிகளும், எங்கள் ஆழ்வார் எங்கும் எழுந்தரு ளார், அவருடைய திவ்ய ஸூக்திக்குச் சங்கப்பலகை யிடங்கொடுத்ததாகில் அவருக்கு இடங் கொடுத்தாப் போலாகும் என்று சொல்லி ஒரு சிறு முறியிலே 'கண்ணன் கழலிணை' என்றெழுதி இச்சிறு முறியைச் சங்கப்பலகையின் மேலே வைக்க, அக்காலத்தில் தென் மதுரையில் கம்பநாடனோடு சேர முந்நூறு தமிழ்ப்புல வர் சங்கப்பலகை யேறியிருக்க, அப்பலகை அவர்க ளெல்லாரையும் எடுத்துக் கவிழ்த்துப் போட்டு, ஆழ் வார் திவ்ய ஸூக்திச் சிறுமுறி யொன்றையுமே தரித் துக்கொண்டு நிற்க, இதைக் கண்டு ஏகம்பநாடனும் ஆச்சரியப்பட்டு, ஈயாடுவதோகருடற்கெதிரே? இரவிக் கெதிர் மின்மினியாடுவதோ? நாயோடுவதோவுறுமிப்

புலிமுன்? நரிகேசரி முன்னடையாடுவதோ? பேயாடுவதோவழகூர்வசிமுன்? பெருமானடிசேர்வகுளாபரணன் ஓராயிரமாமறையின் தமிழின்றொரு சொற்பொறுமோவுலகிற்கவியே? என்று ஆழ்வார் விஷயமாகக் கவி சொல்லி அபராதக்ஷமாபணம் பண்ணிக் கொண்டான். அங்கிருந்த தமிழ்ப் புலவர்கள் தனித் தனியே கவி சொல்லி அபராத க்ஷமாபணம் பண்ணிக் கொண்டார்கள். இவர் அருளிச்செய்த பிரபந்தங்கள் திருவிருத்தம் 100 பாசுரங்கள், திருவாசிரியம் 7 பாசுரங்கள், பெரிய திருவந்தாதி 87 பாசுரங்கள், திருவாய்மொழி 1102 பாசுரங்கள், ஆக மொத்தம் 1,296 பாசுரங்கள். இவைகளில் எந்தெந்த பாசுரங்களால் எந்தெந்த திவ்யதேச திருப்பதியை மங்களாசாசனம் செய்திருக்கிறரென்பதின் விவரம் கீழ்க் காண்க.

| | திவ்யதேசம் | பாசுரங்கள். | | |
|---|---|---|---|---|
| | | திருவிருத்தம் 28-ம் பாசுரம். | | |
| | திருவாய்மொழி. | பத்து. | திருமொழி. | பாசுரங்கள். |
| 1 | திருவரங்கம் | 7 | 2 | 10 |
| 2 | திருப்பேர்நகர் | 10 | 8 | 11 |
| 3 | திருக்குடந்தை | 5 | 8 | 10 |
| 4 | திருவிண்ணகர் | 6 | 3 | 11 |
| 5 | திருக்கண்ணபுரம் | 9 | 10 | 10 |
| 6 | திருமோகூர் | 10 | 1 | 11 |
| 7 | திருமாலிருஞ்சோலை | 10 | 7 | 11 |
| | | 10 | 8 | 1-6 |
| | | 2 | 10 | 11 |
| 8 | திருக்குறுகூர் | 4 | 10 | 11 |
| 9 | தொலைவில்லிமங்கலம் | 6 | 5 | 11 |

| | திவ்யதேசம் | பாசுரங்கள். | | |
|---|---|---|---|---|
| | திருவாய்மொழி. | பத்து. | திருமொழி. | பாசுரங்கள். |
| 10 | சிரீவரமங்கை | 5 | 7 | 11 |
| 11 | திருப்புளிங்குடி | 8 | 3 | 5-ம் |
| | | 9 | 2 | 10 |
| 12 | திருக்குளந்தை | 8 | 2 | 4ம் |
| 13 | திருப்பேரை | 7 | 3 | 11 |
| 14 | வரகுணமங்கை | 9 | 2 | 4ம் |
| 15 | ஸ்ரீவைகுந்தம் | 10 | 7 | 8ம் |
| | | 9 | 2 | 4ம |
| 16 | திருக்குறுங்குடி | 5 | 5 | 11 |
| | | 3 | 9 | 2ம் |
| | | 1 | 10 | 9ம் |
| 17 | திருக்கோளூர் | 6 | 7 | 11 |
| | | 8 | 3 | 5ம் |
| 18 | திருவனந்தபுரம் | 10 | 2 | 11 |
| 19 | திருவண்பரிசாரம் | 8 | 3 | 7ம் |
| 20 | திருக்காட்கரை | 9 | 6 | 10 |
| 21 | திருமூழிக்களம் | 9 | 7 | 11 |
| 22 | திருச்செங்குன்றூர் | 8 | 4 | 10 |
| 23 | திருவாட்டாறு | 10 | 6 | 11 |
| 24 | திருப்புலியூர் (குட்டநாடு) | 8 | 9 | 10 |
| 25 | திருநாவாய் | 9 | 8 | 10 |
| 26 | திருவல்லவாழ் | 5 | 9 | 11 |
| 27 | திருவண்வண்டூர் | 6 | 1 | 11 |
| 28 | திருக்கடித்தானம் | 8 | 6 | 11 |
| 29 | திருவாறன்விளை | 7 | 10 | 10 |

| | திவ்யதேசம் | | | பாசுரங்கள் |
|---|---|---|---|---|
| | | திருவாய் மொழி. பத்து. | திருமொழி | பாசுரங்கள். |
| 30 | திருவயோத்தி | 7 | 5 | 1ம் |
| 31 | திருவேங்கடம் | 3 | 3 | 10 |
| | | 3 | 5 | 8ம் |
| | | 3 | 9 | 1ம் |
| | | 4 | 5 | 11ம் |
| | | 6 | 6 | 11ம் |
| | | 6 | 9 | 5ம் |
| | | 6 | 10 | 11 |
| | | 9 | 3 | 8ம் |
| | | 10 | 5 | 6ம் |
| | | 10 | 7 | 8ம் |
| | | 1 | 8 | 3ம் |
| | | 8 | 2 | 1ம் |
| | | 2 | 6 | 9-10ம் |
| | | 2 | 7 | 11ம் |
| | | திருவிருத்தம் பாசுரங்கள் 8, 10, 15, 31, 50, 60, 67, 81 | | |
| | | திருவாய்மொழி. | | |
| 32 | வடமதுரை | 8 | 5 | 9ம் பாசுரம் |
| | | 9 | 1 | 3-10பாசுரங்கள் |
| 33 | திருப்பாற்கடல் | 8 | 1 | 8ம் பாசுரம் |
| | | 8 | 2 | 8ம் ,, |
| | | 10 | 7 | 8ம் ,, |
| | | திருவிருத்தம் பாசுரம் 79 | | |
| | | பெரிய திருவந்தாதி ,, 77 | | |
| | | திருவாய்மொழி. | | |
| 34 | பரமபதம் | 8 | 2 | 8ம் ,, |
| | | 10 | 9 | 3, 8, 9 பாசுரங்கள். |

| **7 குலசேகராழ்வார்**<br>அவதாரம்—கோல்லிநக ரென்னும் கோல்லம் (Quilon)<br>பரமபதம் — திருவரங்கம் (ஸ்ரீரங்கம்.) | } | ஸ்ரீகௌஸ்துபாம்ஸம் இவர் கொல்லிநகரில்கலி 28வதான பராபவஹு மாசி மீ சுக்லபக்ஷம் துவாதசி வெள்ளிக் கிழமை கூடின புனர்பூச |
|---|---|---|

க்ஷத்ரத்தில் ஸ்ரீகௌஸ்து பாம்ஸராய் சந்திரகுலத்தர சராகிய த்ருடவ்ரதருக்குப் புத்திரராகத் திருவவதரித் தருளினர். பின்னர் பகவத் கடாக்ஷத்தால் அவர் ஸ்வரூப ரூபகுண விபூதிகளையெல்லாம் நன்றாய்க் கண்டு கொண்ட பின்பு, இவ்வாழ்வார் அவற்றை யெல்லாம் பகவத் பத்தி ரூபமான ஜ்ஞாநத்தை யுடையராய்க் கண்டபின்பு, திவ்யதேசங்களெங்கும் எழுந்தருளி அங்கங்குள்ள எம்பெருமான்களையும் ஸேவித்து அங்கங்கே நித்யவாஸம்பண்ண ஆசையுடையராய், அஷ்டாதஸ புராண இதிஹாஸாதிகளின் ஸாரபூதமான முகுந்த மாலையை அருளிச்செய்தார். பின்னர் திருவரங்கத்துக் கெழுந்தருளி அணியரங்கத்தம்மானைக் கண் களாரக்கண்டு, வாயாரவாழ்த்தி அநுபவித்து, அவ்வநு பவத்தாலுண்டான அதிக ப்ரீதியாலே பகவத்பாகவத வைபவத்தை யெல்லாருமறிந்து உஜ்ஜீவிக்கைக்காக 105 பாசுரங்களடங்கிய பெருமாள் திருமொழி என்கிற திவ்ய ப்ரபந்தத்தை யருளிச்செய்து லோகத்தை வாழ் வித் தருளினர்.

இப் பெருமாள் திருமொழியில் கீழ்க்கண்ட திவ்ய தேசங்களை மங்களாசாசனம் செய்திருப்பதாகக் கொள்கை.

முதலாயிரம்

| | திவ்யதேசம் | பாசுரங்களின் குறிப்பு | |
|---|---|---|---|
| | | திருமொழி | பாசுரங்கள். |
| 1 | திருவரங்கம் | 1 | 11 |
| | ,, | 2 | 10 |
| | ,, | 3 | 9 |
| | ,, | 8 | 10ம் |
| 2 | திருக்கண்ணபுரம் | 8 | 11 |
| 3 | தில்லைச் சித்திரகூடம் | 10 | 11 |
| 4 | உறையூர் | 2 | 10ம் |
| 5 | வித்துவக்கோடு | 5 | 10 |
| 6 | திருவேங்கிடம் | 4 | 11 |
| 7 | அயோத்தி | 8 | 6-7ம் |
| | ,, | 10 | 1-8ம் |
| 8 | திருப்பாற்கடல் | 2 | 8ம் |
| | ,, | 4 | 4ம் |
| 9 | திருக்கூடல் (தென்மதுரை) | 2 | 10ம் |

8 பெரியாழ்வார்.
அவதாரம் } ஸ்ரீ வில்லி
பரமபதம் } புத்தூர்
—கருடாம்ஸம் — இவ்வாழ்வார் ஸ்ரீவில்லிபுத்தூரில் கலி 47வதான க்ரோதந௵ ஆனி ௴ சுக்லபக்ஷம் ஏகாதசி ஞாயிற்றுக்கிழமை கூடின ஸ்வாதி நக்ஷத்திரத்தில், வேதியர்குலத்தில், பதுமையாருக்கும் முகுந்தாசார்யருக்கும் புத்திரராகத் திருவவதரித்து விஷ்ணு சித்தர் என்னும் திருநாமத்தை யுடையராய் அவதரித்தருளினர். திருநந்தவன கைங்கர்யமே உகப்பெனக் கொண்டு வட பெருங்கோயிலுடையானுக்குத் திருமாலை கட்டிச் சாத்திக்கொண்டிருந்தார். பின்னர் ஸ்ரீவல்லபதேவன் என்னும் பாண்டிய அரசன் புருஷார்த்த நிர்ணய பூர்வகமாக அத்ருஷ்டஸித்திக்கு உபாயமான வேதாந்த ஸித்

தமான பரதத்துவநிர்ணயம் பண்ணுவிக்கைக்காக வெகு த்ரவ்யத்தை வித்யாசுல்கமாக ஒரு தோரணத்தில் கிழிச்சீரையிலே கிழியாகக் கட்டுவித்து இராஜ்யத்தில் வித்வான்களைத் திரட்டும்படி உத்தரவு செய்தபொழுது, வடபெருங்கோயி லுடையானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே இவ்வாழ்வார் அரச சபையின் முன் சென்று "அகாரவாச்யனான ஸ்ரீமந்நாராயணனே ஸர்வ ஸ்மாத்பரன்" என்று ஸ்ருதி ஸ்மருதி இதிஹாஸ புராணாதிவசந ஸஹஸ்ரங்களால் பஹுமுகமாக ப்ரதி பாதித்தருளிச் செய்கையால், வித்யாஸுல்கமாகத் தோரணத்தில் கிழியாகக் கட்டிவைத்த தநம் இவர்முன்னே தானே வளைய, ஆழ்வாரும் ப்ரீதி யோடே அக்கிழியை அறுத்தருளினர். இதைக் கண்ட வித்வான்களும் அரசன் முதலானவரும் வியப் புற்று இவர் திருவடிகளில் தண்டம் சமர்ப்பித்து மிக வும் ப்ரீதியுடனே ஆழ்வாரை யானையின்மேலேற்றி அந்த வித்வான்கள் விருதூதி திருச்சிந்நம் பரிமாறவும், ஈண்டிய சங்க மெடுத்தூதவும், அரசர் இவருக்குப் பட்டர்பிரான் என்று திருநாமம் சாத்தி, தானும் பரி காரத்துடன் சேவித்துக் கொண்டாடினன்.

"பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானெ<br>ஈண்டிய சங்கமெடுத்தூத—வேண்டிய [ன்று<br>வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்<br>பாதங்கள் யாமுடையப் பற்று"

இவ்வாழ்வார் க்ருஷ்ண வ்ருத்தாந்தத்தில் ப்ரவண ராய் கிருஷ்ணன் அவதரித்தது முதலாகச் செய்தரு ளின வ்ருத்தாந்தத்தை, அவருடைய ஸௌஸீல்யம் ஸௌலப்யம் முதலான குணங்களை நன்றாக அநுப வித்து அவ்வநுபவத்தாலுண்டான அதிக ப்ரீதியாலே

பெரியாழ்வார் திருமொழி என்கிற திவ்ய ப்ரபந்தத்தை யருளிச் செய்து ஸஜ்ஜநங்களுக்கு உபகரித்தருளி, லோகத்தை வாழ்வித்தருளினர். இவர் கீழ்க்கண்ட திவ்ய தேசங்களை மங்களாசாசனம் செய்திருப்பதாகக் கொள்கை

| | திவ்யதேசம் | பாசுரங்களின் குறிப்பு | | |
|---|---|---|---|---|
| | | பத்து | திருமொழி | பாசுரம் |
| 1 | திருவரங்கம் | 1 | 4 | 9ம் |
| | ,, | 2 | 7 | 2-8ம் |
| | ,, | 2 | 9 | 11ம் |
| | ,, | 3 | 3 | 2ம் |
| | ,, | 4 | 8 | 10பாசுரங்கள் |
| | ,, | 4 | 9 | 11 ,, |
| | ,, | 4 | 10 | 10 ,, |
| 2 | திருவேங்கிடம் | 1 | 5 | 3ம் பாசுரம் |
| | ,, | 1 | 9 | 8ம் ,, |
| | ,, | 2 | 7 | 3ம் ,, |
| | ,, | 2 | 9 | 6ம் ,, |
| | ,, | 3 | 3 | 4ம் ,, |
| | ,, | 2 | 6 | 9ம் ,, |
| | ,, | 5 | 4 | 1ம் ,, |
| 3 | திருப்பேர் நகர் | 2 | 6 | 2ம் ,, |
| | ,, | 2 | 9 | 4ம் ,, |
| 4 | திருப்பாற்கடல் | 2 | 6 | 6ம் ,, |
| | ,, | 3 | 3 | 7ம் ,, |
| | ,, | 4 | 10 | 5ம் ,, |
| 5 | திருவாய்ப்பாடி | 2 | 2 | 5ம் ,, |
| | ,, | 2 | 3 | 7ம் ,, |

| | | பத்து | திருமொழி | பாசுரம் |
|---|---|---|---|---|
| 5 | திருவாய்ப்பாடி | 3 | 4 | 10ம் பாசுரம் |
| | ,, | 3 | 6 | 7ம் ,, |
| 6 | திருக்கண்டங்கடி நகர் (தேவப்பிர யாகை) | 4 | 7 | 11பாசுரங்கள் |
| 7 | வடமதுரை | 4 | 7 | 9ம் பாசுரம் |
| | ,, | 3 | 6 | 3ம் ,, |
| 8 | சாளக்கிராமம் | 4 | 7 | 9ம் ,, |
| 9 | திருவயோத்தி | 4 | 7 | 9ம் ,, |
| | ,, | 3 | 9 | 10பாசுரங்கள் |
| | ,, | 3 | 10 | 4-8ம் ,, |
| 10 | துவாரகை | 4 | 7 | 9ம் ,, |
| | ,, | 5 | 4 | 10ம் ,, |
| 11 | வதரியாச்சிரமம் | 4 | 7 | 9ம் ,, |
| 12 | திருவெள்ளறை | 1 | 6 | 8ம் ,, |
| | ,, | 2 | 8 | 10பாசுரங்கள் |
| 13 | திருமாலிருச்சோலை | 1 | 6 | 8ம் ,, |
| | ,, | 3 | 4 | 5ம் ,, |
| | ,, | 4 | 2 | 11பாசுரங்கள் |
| | ,, | 4 | 3 | 11 ,, |
| | ,, | 5 | 3 | 10 ,, |
| 14 | திருக்கண்ணபுரம் | 1 | 6 | 8ம் ,, |
| 15 | ஸ்ரீவில்லிபுத்தூர் | 2 | 2 | 6ம் ,, |
| 16 | திருக்குறுங்குடி | 1 | 6 | 8ம் ,, |
| 17 | திருக்கோட்டியூர் | 1 | 2 | 1,10 ,, |
| | ,, | 2 | 6 | 2ம் ,, |
| | ,, | 4 | 4 | 11பாசுரங்கள் |
| 18 | திருக்குடந்தை | 2 | 6 | 2,6 ,, |

| | | பத்து | திருமொழி | பாசுரம் | |
|---|---|---|---|---|---|
| 18 | திருக்குடந்தை | 2 | 7 | 7ம் | பாசுரம் |
| 19 | பரமபதம் | 5 | 4 | 10ம் | ,, |
| | ,, | 3 | 6 | 3ம் | ,, |
| | ,, | 4 | 7 | 9ம் | ,, |
| 20 | தில்லைச்சித்திரகூடம் | 2 | 6 | 7ம் | ,, |

9 ஆண்டாள்.
அவதாரம்—ஸ்ரீவில்லி புத்தூர்
பரமபதம்—திருவரங்கம் (ஸ்ரீரங்கம்.)

பூமி பிராட்டியாசம்ஸம். இவர் ஸ்ரீ வில்லிபுத்தூரில் திருநந்தவனத்தில் துளசிமலரில், கலி 98 வதான நள ௵ ஆடி ௴ சுக்லபக்ஷம் சதுர்த்தசி செவ்வாய்க்கிழமை கூடின பூரநக்ஷத்திரத்தில், அயோநிஜையாய்த் திருவவதரித் தருளினர். எப்படி யென்றால்: "மெய்யடியாரான விஷ்ணுசித்தர்" என்னும் நம்முடைய பெரியாழ்வார் தம் திருநந்தவனத்தில் திருத்துழாய் செடிகளின்கீழ் கொத்தாநிற்க, அத்திருத்துழாய் மண்ணின் கீழே, திருவாடிப்பூரத்தில், ஸ்ரீபூமிப்பிராட்டி அகப்பட, இதை விஷ்ணு சித்தர் கண்டு சந்தோஷத்தோடு எல்லா லக்ஷணங்களோடும் கூடிய இக்குழந்தையைப் புத்திரியாக வெடுத்துக்கொண்டு, பிரீதியுடனே 'கோதை' என்னும் திருநாமஞ்சாத்தி, திருமகள்போல் வளர்த்துக்கொண்டு வந்தார். (இது ஸ்ரீ ஜனகராஜன் யாகசாலைக்குப் பூமியை உழும்பொழுது படைச்சாலிலே உத்பவித்த சீதைப் பிராட்டியின் சரித்திரம் போன்று).

பின்னர் இக்கோதைக்குச் சூடிக்கொடுத்த நாய்ச்சியாரென திருநாமமுண்டாயிற்று. இந்நாய்ச்சியார் விவாஹபருவமடைந்ததும் பெரியாழ்வாரிடத்து என்னை மானிடவர்கட்கு விவாகம் செய்தால் நான் வாழமாட்

டேனென்றும் "மாலிருஞ் சோலை யெம்மாயற்கல்லால் மற்றொருவர்க்கென்னைப்பேசலொட்டேனென்ன" பெரியாழ்வாரும் "108 திருப்பதிகளின் எம்பெருமான்களில் நீர் யாருக்கு வாழ்க்கைப்படுகிறீர்" என்று கேட்க, ஆண்டாளும் ஆழ்வாரைக் குறித்து "அவ்வவருடைய குணபதாநங்களைக் கீர்த்தித்தருளவேண்டும்" என்று கேட்க, ஆழ்வாரும் வடபெருங்கோயிலுடையான் வைபவம் தொடங்கி, பாண்டிய நாடு, மலைநாட்டு திருப்பதிகளிலும் வடநாட்டுத் திருப்பதிகளிலுள்ள எம்பெருமான்களின் வைபவமும், வட திருவேங்கடவன் வைபவந்தொடங்கி, தொண்டைநாடு நடுநாடு சோழநாட்டிலுள்ள எம்பெருமான்கள் வைபவமும், திருமாலிருஞ் சோலையிலுள்ள அழகர் வைபவமும் அருளிச்செய்ய ஆண்டாளும், அதுகேட்டு ஆநந்தக்கண்ணீர் பெருகவும், உடம்பெங்கும் மயிர்ச்செறியவும், இன்னரங்கத்தின்னமுதருடைய குழலழகு வாயழகு கண்ணழகுகளைக்கேட்டு மிகவும் வியாகூலையாய், மோஹித்து, மனமுருகி, மலர்க்கண்கள் துளிக்க, அழகிய மணவாளரையே காமித்து, அவர் தன்னைக் கண்ணாலஞ்செய்யக் கணக்கண்டு, அணியரங்கத்தம்மானுக்கே தீராத காதலையுடையாளானாள். ஆழ்வாரும், "இது கூடும்படி யென்?" என்று சிந்தை கலங்கியிருக்க திருவரங்கச் செல்வனார் திருவருளால் ஆண்டாள் திருவரங்கம் சென்று அழகிய மணவாளன் திருமுன்னே சென்று, உள்ளேபுகுந்து, கண்களாரக்கண்டு, "கேசவநம்பியைக் கால்பிடிப்பாள்" என்னும் பேறுபெற்று, திருவநந் தாழ்வானாகிற படுக்கையை மிதித்தேறித் திருவரங்கரைச் சேர்ந்து, திருவரங்கன் திருவடியே நாடும்படி அந்தர்ப்பவித்தருளினாள்.

இவ்வாண்டாளும் "மார்கழி நீராடியும் நோன்பு நோற்றும் காமபஜநம் முதலானவற்றைப் பண்ணியும் தரிப்போம்" என்று திருவுள்ளமுவந்து நாய்ச்சியார் திருமொழி, திருப்பாவை என்கிற திவ்யப் பிரபந்தங்களை யருளிச்செய்து ஜகத்துக்கு உபகரித்தருளினாள்.

இவர் கீழ்க்கண்ட 11 திவ்யதேசங்களைத் தான் பாசுரங்களால் மங்களாஸாசனஞ் செய்திருப்பதாகக் கொள்கை.

| | திவ்யதேசம் | முதலாயிரம் | பாசுரங்களின் விவரம் |
|---|---|---|---|
| | | திருமொழி | |
| 1 | திருவரங்கம் | 11 | 10 பாசுரங்கள் |
| 2 | திருக்குடந்தை | 13 | 2ம் ,,பாசுரம் |
| 3 | திருக்கண்ணபுரம் | 4 | 2ம் ,, |
| 4 | திருக்கூடல் | 4 | 11 பாசுரங்கள் |
| 5 | திருமாலிருஞ்சோலை | 4 | 1 ம்,, |
| | ,, | 9 | 10 பாசுரங்கள் |
| | ,, | 10 | 8ம் ,, |
| 6 | திருவேங்கிடம் | 10 | 5,8 ,, |
| | ,, | 4 | 2ம் ,, |
| | ;, | 1 | 1,3 ,, |
| | ;, | 5 | 2ம் ,, |
| | ,, | 8 | 10 பாசுரங்கள் |
| 7 | ஸ்ரீ வில்லிபுத்தூர் | 5 | 5ம் ,, |
| 8 | வடமதுரை | 4 | 5,6 |
| | ,, | ,, 12 | 1ம் ,, |
| | | திருப்பாவை | 5ம் ,, |
| 9 | திருவாய்ப்பாடி—முதலாயிரம் | 12 | 2ம் ,, |
| 10 | திருப்பாற்கடல்—திருப்பாவை | | 2ம் பாசுரம் |
| 11 | த்வாரகை—முதலாயிரம் | 4 | 8ம் ,, |
| | ,, | ,, 9 | 8ம் ,, |

| 10 தொண்டரடிப்பொடி யாழ்வார். அவதாரம் — திருமண் டங்குடி பரமபதம்—திருவரங்கம் (ஸ்ரீரங்கம்) | ஸ்ரீ வைஜயந்தி வநமா லிகாம்ஸம்—இவர் திரு மண்டங்குடி யென்கிற கிராமத்தில் கலி, 298 வதான ப்ரபவஹூ மார் கழிமீ° கிருஷ்ண பக்ஷம் சதுர்த்தசி செவ்வாய்க் |
| --- | --- |

கிழமை கூடின கேட்டை நக்ஷத்திரத்தில், ஸ்ரீ வைஷ் ணவ சோழியருக்குப் புத்திரராய்ப் பிராம்மண வம்ஸத் திலே திருவவதரித்தருளினார். இவருக்கு விப்ர நாராய ணர் என்ற திருநாமம் சாத்தினர். பின்னர் இவர் வேதசாஸ்திரம் முதலான வித்தைகளைக்கற்று விரக்த ராய், ஸ்ரீரங்கக்ஷேத்திரத்திற் கெழுந்தருளி, அழகிய மணவாளரைச் சேவித்தபோது, குழலழகர் வாயழகர் கண்ணழகரான பெரிய பெருமாளின் கடாக்ஷ வீக்ஷண் யத்தால் விப்ரநாராயணருக்கு ஞானமுண்டாய் பகவத் விஷயத்தின் வாசியறிந்து அரங்கனுர்க்காட்செய்ய வேணுமென்று பெரியாழ்வாரைப்போல் நித்யம் திரு மாலை கட்டித் திருவரங்கனுருக்குச் சாத்தித் திருநந்த வனம் கைங்கர்யம் செய்து கொண்டிருந்தார்.

பின்னர் இவர் தேவதேவி என்னும் ஒரு வேசியின் வலையில் சிக்கி அதனுலுண்டான ஆபத்துகளில் யெம் பெருமானுல் விடுதலை யடைந்த பின்னர், தான் ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாததூளி (தொண்டரடிப் பொடி) என்ற நிருபகமான திருநாமத்தையுடையராய், திருவரங்கத் திருப்பதியைத்தானே யிருப்பாகக் கொண்டு, பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகளால் பெரியபெருமாளே ஸர்வவிதபந்து என்று திருமந்த்ரா நுஸந்தானம் பண்ணிக்கொண்டு, ஆனந்தித்து, ஸ்ரீ வைஷ்ணவர்களடியில் முடியைவைத்து, பெரிய பெரு

மாள் கேட்கிறவனாகவும்தான் சொல்லுகிறவனாகவும் பாவித்துத் திருமாலை என்னும் கிரந்தத்தைப்பாடி, இச் சரீரத்தில் ஆத்ம புத்தியை நிவர்த்தித்து திருமந்த்ர நிஷ்டராய், யெல்லோரும் உஜ்ஜீவிக்கும்படி திருப்பள்ளி யெழுச்சியுடன், இந்த 2 திவ்ய ப்ரபந்தங்களை யருளிச் செய்து லோகத்தை வாழ்வித்தருளினார்.

இவர் கீழ்க்கண்ட 3 திவ்ய தேசங்களை மங்களாசாசனம் செய்திருக்கிறதாகக் கொள்கை.

| | திவ்யதேசத்தின் பெயர் | பாசுரங்களின் குறிப்பு |
|---|---|---|
| | | திருமாலை |
| 1 | திருவரங்கம் | 1 to 4, 6. 8, 10 to 17 |
| | ,, | 20, 23 to 27, 29 to 33 |
| | ,, | 36 to 40, 42, 43, 45 |
| | ,, | பாசுரங்கள் |
| | | திருப்பள்ளியெழுச்சி 10 பாசுரங்கள் |
| 2 | திருவயோத்தி ,, | 4-ம் பாசுரம் |
| 3 | திருப்பாற்கடல்—திருமாலை | 18-ம் பாசுரம் |

11 திருப்பாணாழ்வார்.
அவதாரம் — நிசுளாபுரி (உறையூர்)
பரமபதம்—திருவரங்கம் (ஸ்ரீரங்கம்)

ஸ்ரீவத்ஸாம்ஸம்—இவ்வாழ்வார் நிசுளாபுரி என்கிற திருவுறையூரில் செந்நெற்பயிரில், கலி 343 வதான துன்மதி௵ கார்த்திகைமீ க்ருஷ்ணபக்ஷம் த்விதியை புதன்கிழமை கூடின ரோகிணி நக்ஷத்திரத்தில், பஞ்சமவர்ணத்தில் அயோநிஜராய் திருவவதரித்தருளினார்.

இவருக்கு நம்பெருமாளின் ஜாயமான கடாக்ஷத்தினால் எப்பொழுதும் ஸத்வகுணமே மேலிட்டு காவேரியின் தென்கரையில் திருவரங்கத்தமுதனை நோக்கிவீணையும் கையுமாய்த் திருப்புகழ்கள் பலவும் பாடிக்கொண்

டிருக்கையில், பெரிய பெருமாளின் நியமனப்படி ஸ்ரீ லோக சாரங்கமஹாமுநீந்திரர் தம்தோளின்மேல் ஆழ்வாரைக் காவேரியின் தென்கரையினின்றும் எழப்பண்ணிக்கொண்டு வந்து அழகிய மணவாளர் திருமண்டபத்துக்கெதிரே புகுர, பெரிய பெருமாளும் தன் திவ்ய மங்கள விக்ரஹத்தை இவருக்குக் காட்டிக் கொடுக்க, ஆழ்வார் அவ்விக்ரஹத்தைத் திருவடிகள் தொடங்கி திருமுடியளவும் அநுபவித்து, அவ்வநுபவத்தாலுண்டான பிரீதியதிசயத்தாலே அமலனாதிபிரான் என்னும் திவ்யப்பிரபந்தத்தைப் பத்துப்பாசுரங்களாக அருளிச்செய்து லோகத்தை வாழ்வித்தருளி எல்லோரும் காணும்படி அணியரங்கன் திருவடிகளில் அந்தர்ப்பவித்தருளினார்.

இவர் தம் பாசுரங்களினால் கீழ்க்கண்ட 2 திவ்ய தேசங்களை மங்களாசாசனம் செய்ததாகக் கொள்கை.

| திவ்யதேசத்தின் பெயர் | பாசுரங்களின் குறிப்பு |
|---|---|
| 1 திருவரங்கம் | அமலனாதிபிரான் 10 பாசுரங்கள் |
| 2 திருவேங்கிடம் | 1 — 3ம் பாசுரங்கள் |

12 திருமங்கையாழ்வார்.
அவதாரம் —குறையலூர்
பரமபதம்—திருக்குறுங்குடி.

ஸ்ரீ சார்ங்காம்ஸம்— இவ்வாழ்வார், திருவாலி திருநகரிக்கடுத்த காவளம்பாடி யென்னும் திவ்ய தேசத்திற்குக் கிழக்கே 1 மைல் தூரத்திலுள்ள குறையலூர் என்னும்கிராமத்தில், கலி 399 வதான நளஹு கார்த்திகைமீ பௌர்ணமி வியாழக்கிழமை கூடின கிருத்திகை நக்ஷத்திரத்தில், நீலன் என்பவருக்குக் குமாரராகத் திருவவதரித்தருளினார்—இவர் மிலேச்சவம்சத்தில் அவதரிக்கையாலே

இவருக்கு நீலநிறத்தர் என்று திருநாமம் சாத்தினார்கள். பின்னர் இவர் சோழராஜாவினிடம் ஒரு தேசாதிபதியும் சேனாநாயகனுமாய்க் கையில் வாளைப்பிடித்துத் திரிந்து கொண்டிருந்தார். திருமாமகளும் குமுதவல்லி யென்னும் திருநாமத்துடன் திருநாங்கூரில் மருத்துவரான ஒரு பாகவதோத்தமர் இல்லத்தில் அவர் திருக்குமாரியாக வளர்ந்துவர அப்பெண்பிள்ளையை நீலநிறத்தர் விவாகம் செய்து கொள்ளவேண்டுமென விரும்பிக்கேட்க, அப்பெண்மகளும் "திருவிலச்சினையும் திருநாமமுள்ளவர்க்கொழிய மற்றொருவர்க்கென்னைப்பேச வொட்டேனென்ன" இவர் உடனே திருநறையூரென்னும் நாச்சியார்கோயில் சென்று நம்பி திருமுன்பே சென்று திருவிலச்சினை தரித்து,பன்னிரண்டுதிருநாமங்களையும் சாத்திக்கொண்டு வந்தார். குமுதவல்லியார் அவரைப்பார்த்து, "ஒரு வருஷம் நித்யமாக ஆயிரத்தெட்டு ஸ்ரீ வைஷ்ணவர்களை அமுது செய்வித்து அவர்களுடைய ஸ்ரீ பாததீர்த்தமும் ததியைப்பிரசாதமும் ஸ்வீகரித்துநிறைவேற்றினாலொழிய உம்மை நான் பர்த்தாவாக அங்கீகரிப்பதில்லை" என்ன, இவரும் அதுக்குச் சம்மதித்து, பிரதிஜ்ஞை பண்ணிக்கொடுக்க, இருவருக்கும் விவாகமாயிற்று. பாகவத்ததியாராதநம் பண்ணுகைக்காக சோழராஜனுக்குக் கப்பம் கட்டும் பணத்தையெல்லாம் இவர் செலவு செய்ததினிமித்தம் இவரை அரசன் சிறையில் வைத்து நிர்பந்திக்க, கச்சிநகர் வரதராஜரின் கடாக்ஷத்தால் இவர் அரசனுக்குப்பணம் கட்டிவிட, அரசனும் இவர் மஹா பாகவதரென்று இவரால் கொடுத்த பணத்தை யெல்லாம் இவருக்கே கொடுத்துவிட, இவர் அப்பணத்தையெல்லாம் ததியாராதநம் நடத்தி, கையில் காசில்லாமற்

போய், வழிபறித்தாகிலும் பணம் சம்பாதித்துத் ததீயாராதநம் இடைவிடாமல் நடத்தவேணும் என்று வழிபறித்து, தனங்கொண்டுவந்து ததீயாராதநம் பக்தியுடன் நடத்திக்கொண்டு வருங்கால், இவர் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்காகவே வழிபறிப்பவராகையால் சர்வேஸ்வரன் கண்டு, இவரை விசேஷ கடாக்ஷம் பண்ணி, அங்கிகரிக்கவேணும் என்று திருவுள்ளமாய்ப் பிராமண வடிவம் கொண்டு லக்ஷ்மியுடன் திருமணம் புணர்ந்துவரும் மணவாளக்கோலமாய், ஆழ்வார் வழி பறிக்கைக்காக பதுங்கிக்கொண்டிருந்த அரசமரத்தின் பக்கல் எல்லா ஆபரணங்களும் அணிந்துகொண்டு வெகு திரவியத்துடன் வந்து சேர்ந்தார். இவர் ஆடை ஆபரணங்களையெல்லாம் அபகரித்து, அறுகாழி (காலின் பெருவிரலின் பக்கத்து விரல்) மோதிரத்தைத் தன் திருமுத்தாகிய பற்களினால் கடித்து வாங்கி, இவற்றை யெல்லாம் சுமையாகக் கட்டி யெடுக்க, அச்சுமை பேர்க்கவும் போராதபடியால், மணவாளனை பிராஹ்மணனைப் பார்த்து "நீ மந்திரவாதம் பண்ணினாய்" என்று இவர் சொல்ல, அம்மந்திரத்தை உமக்குச் சொல்லுகிறோம் வாரும் என்று கழுத்தையணைக்க, இவரும் "நீ சொல்லாவிடில் இந்த வாளுக்கு இரையாவாய்" என்று தன் கைவாளைக் காட்ட, எம்பெருமானும் எட்டு அக்ஷரமாய் மூன்று பதமான பெரிய திருமந்த்ரமான "ஓம் நமோ நாராயணாய:" வென்னும் சப்தத்தை அவர் வலது திருச்செவியில் உபதேசித்து, பெரிய திருவடியின் மேல் திவ்யமங்கள விக்ரஹத்துடன் சேவை சாதிக்க, இவருக்குண்டான ப்ரீதியதிசயத்தினால் பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவழுகூற்றிருக்கை, சிறிய திருமடல்

பெரியதிருமடல் என்ற இவ்வாறு ப்ரபந்தங்களேயும் நான்கு வேதங்களின் சாரமாகிய, நம்மாழ்வாரருளிச் செய்த, நான்கு ப்ரபந்தங்களுக்கு ஆறு அங்கமாக, நான்குவிதமான கவிகளாலே யருளிச்செய்து, நாலு கவிப்பெருமாள் என்று பிரசித்தியாம்படி உபகரித் தருளினர்.

இவருக்குண்டான வேறு திருநாமங்களாவன. நாலு கவிப்பெருமாள், நம்கலியன், ஆலிநாடர், அருள் மாரி, கொங்குமலர்க் குழலியர்வேள், மங்கைவேந்தர், பரகாலன், பரவாதிமத்தகஜ கண்டீரவர்.

இவர் திருவரங்கத்தில் திருமதில்கள், திருமண்ட பம், சிகரமுதலான திருப்பணி பண்ணுவித்திருக்கிறார். இதற்குவேண்டிய திரவியத்திற்காக திருநாகையிலிரு ந்து கொண்டுவந்த பொன்னல் செய்த ஓர்புத்த விக் கிரஹமே! இதைக் குறித்தே உண்டான "தோரா வழக்குத் திருக்கண்ணங்குடி" யென்று பெயரானதை 20 வது திவ்ய தேசமாகிய திருக்கண்ணங்குடியின் குறிப்பில் பார்க்கவும். இவ்வாழ்வார் திருக்குறுங்குடி யில் பரமபத மெழுந்தருளினதாகச் சொல்லப்படுகி றது. இவர் தம் பாசுரங்களால் கீழ்க்கண்ட 22 திவ்ய தேசங்களேத் தவிர மற்றெல்லாத் திவ்ய தேசங்களேயும் மங்களாசாசனம் செய்ததாகக் கொள்கை. இவரால் மங்களாசாசனமாகாத திவ்ய தேசங்களின் பெயர்.

1 அன்பில் }
2 கவித்தலம் } சோழ நாட்டின் 40 திருப்பதி களில் இவை இரண்டு.

| எண் | திருப்பதி | குறிப்பு |
|---|---|---|
| 3 | ஸ்ரீ வில்லிப்புத்தூர் | 3 முதல் 12 வரையிலுள்ள திருப்பதிகள் பாண்டிய நாட்டின் 18 திருப்பதிகளுக்குள் பத்து. |
| 4 | திருக்குருகூர் | |
| 5 | தொலைவில்லி மங்கலம் | |
| 6 | சிரீவரமங்கை | |
| 7 | திருப்புளிங்குடி | |
| 8 | திருக்குளந்தை | |
| 9 | திருப்பேரை | |
| 10 | திருக்கோளூர் | |
| 11 | ஸ்ரீ வைகுந்தம் | |
| 12 | வரகுணமங்கை | |
| 13 | திருவண்பரிசாரம் | மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றுள் இவை ஒன்பது. |
| 14 | திருவாட்டாறு | |
| 15 | திருவனந்தபுரம் | |
| 16 | திருச்செங்குன்றூர் | |
| 17 | திருவாறன்விளை | |
| 18 | திருவண்வண்டூர் | |
| 19 | திருக்கடித்தானம் | |
| 20 | திருக்காட்கரை | |
| 21 | வித்துவக்கோடு | |
| 22 | திருக்கண்டங்கடி நகர் (தேவப்பிரயாகை) | வடநாட்டின் 12 திருப்பதிகளுக்குள் இது ஒன்று |

மேல்கண்ட நாலாயிரம் பாசுரங்களும் கீழ்க் கண்டவாறு பிரிக்கப்பட்டுள்ளன.

| | விவரங்கள். | பாசுரங்கள். |
|---|---|---|
| 1 முதலாயிரம். | 1. திருப்பல்லாண்டு | 12 |
| | 2. பெரியாழ்வார் திருமொழி | 461 |
| | 3. திருப்பாவை | 30 |
| | 4. நாய்ச்சியார் திருமொழி | 143 |
| | 5. பெருமாள் திருமொழி | 105 |
| | 6. திருச்சந்த விருத்தம் | 120 |

| | விவரங்கள். | பாசுரங்கள். |
|---|---|---|
| | 7. திருமாலை | 45 |
| | 8. திருப்பள்ளி யெழுச்சி | 10 |
| | 9. அமலனாதிப்பிரான் | 10 |
| | 10. கண்ணிநுண் சிறுத்தாம்பு | 11 |
| | | 947 |
| 2 ஈராயிரம். | 1. பெரிய திருமொழி | 1084 |
| | 2. திருக்குறுந்தாண்டகம் | 20 |
| | 3. திருநெடுந்தாண்டகம் | 30 |
| | | 1134 |
| 3 மூன்றாவதாயிரம் | 1. முதல் திருவந்தாதி | 100 |
| | 2. இரண்டாந் திருவந்தாதி | 100 |
| | 3. மூன்றாந் திருவந்தாதி | 100 |
| | 4. நான்முகன் திருவந்தாதி | 96 |
| | 5. திருவிருத்தம் | 100 |
| | 6. திருவாசிரியம் | 7 |
| | 7, பெரியதிருவந்தாதி | 87 |
| | 8. திருவெழுகூற்றிருக்கை | 1 |
| | 9. சிறியதிருமடல் | 77½ |
| | 10. பெரிய திருமடல் | 148½ |
| | | 817 |
| 4. நான்காவதாயிரம் | 1. திருவாய்மொழி | 1,102 |

ஆக மொத்தம் 4,000 பாசுரங்கள்

எம்மாதிரியாக இந்த 4,000 பாசுரங்களையும் முதலாயிரம், ஈராயிரம், மூன்றுவதாயிரம், நான்காவதாயிரம் என்று வகுக்கப்பட்டிருக்கிறதென்றால், சாமானியமாய் இப்பிரபந்தத்தின் விஷயங்களைக் கவனிக்குமளவில் கடைசியவதாரமான கண்ணன் திருவவதாரத்தையும் அதற்குச் சம்பந்தமான விஷயங்களைப் பாடிய ஆழ்வார்களின் பிரபந்தங்களையெல்லாம் முதலாயிரமாக எடுத்துக்கொண்டிருக்கிறதென்றும், திவ்யதேசங்களை மங்களாசாசனம் செய்யும் பிரபந்தங்களையும், சக்ரவர்த்தித் திருமகன் விஷயங்களையும் ஈராயிரமாகவும், தத்துவங்களைக் குறிக்கும் ப்ரபந்தங்களை யெல்லாம் மூன்றுவதாயிரமாகவும், நம்மாழ்வாரின் திருவாய்மொழியை மட்டும் நான்காவதாயிரமாகவும் வகுத்திருக்கிறுப்போல் காண்கிறது. ஆனுல் இக்கூற்று சரியல்ல.

(1) திருமந்த்ரம் (2) த்வயம் (3) சரமஸ்லோகம் என்னும் இம்மூன்று இரகசியங்களையும் ஆழ்வார்கள் இந்நாலாயிரப் பிரபந்தத்தின் 4,000 பாசுரங்களால் சேதனர்கள் தெரிந்து உஜ்ஜீவிக்கும் பொருட்டு வெகு தெளிவாய்ப் பொழிந்திருக்கிறுர்கள்.

இவற்றுள் முதலாயிரத்திலடங்கிய 1 முதல் 9 வது விஷயங்கள் "ஓம்" என்ற பிரணவத்தை விவரித்துக்காட்டியுள்ளன. வடமொழிவேதத்திற்கு "ஓம்" எவ்வாறு ஆதியாக அமைந்ததோ அங்ஙனமே தென்மொழி வேதமாகிய இந்நாலாயிர ப்ரபந்தத்திற்கும் இத்திருப்பல்லாண்டு முதல் ப்ரபந்தமாக அமைந்துள்ளது என்று ஸ்ரீமணவாளமாமுனிகள் தாம் இயற்றிய உபதேசரத்தினமாலை யென்னும் கிரந்தத்துள் திருவுள்ளம் பற்றுகிறுர்.

முதலாயிரத்தில் 10வதான கண்ணிநுண் சிறுத் தாம்பு என்னும் விஷயம் திருமந்திரத்தின் இரண்டாவதான "நமோ" என்னும் விஷயத்தை விளக்குகிறது.

ஈராயிரமெனப்படும் மூன்று விஷயங்களும் 'நாராயணாய:' என்னும் ரகஸ்யத்தைத் தெரிவிக்கிறதினால், இம் முதலாயிரம் ஈராயிரம் இவைகளிரண்டும் திருமந்த்ரத்தின் ரகஸ்யம் எனவும், நான்காவது ஆயிரமெனப்படும் ஆழ்வார் திருவாய்மொழி "த்வயம்" என்னும் ரகஸ்யமெனவும், மூன்ருவதாயிரமெனப்படும் விஷயங்கள் சரமஸ்லோகத்தின் ரகஸ்யத்தையும் விவரிப்பதால் இந்த 4,000 பாசுரங்களையும் நான்கு பாகமாக பிரித்து வைஷ்ணவன் உஜ்ஜீவிக்கைக்காக உள்ள திருமந்த்ரம், த்வயம் சரமஸ்லோகம் என்னும் இம்மூன்று ரகஸ்யங்களும் இவை இவை யென்று தெரியப்படுத்தியிருக்கிறது.

இப்பிரபந்தங்களால் ஆழ்வார்கள் நமக்குத் தெரிவித்திருப்பது என்னவென்ருல் ஈஸ்வரன் காற்று (spirit), ஜோதி (light), ப்ரீதி (love) என்பவை மாத்திரமன்றி அருட்பெருங்கருணை (grace-pre-eminent) கருணாகரன் என்னும் விஷயமும் நாம் அறிகிறோம்.

## நாலாயிர திவ்ய ப்ரபந்தம் வெளியான விவரம்

இந்நூலின் 13வது திவ்ய தேசமாகிய திருக்குடந்தை என்னும் ஸ்தலத்தின் விவரத்திலுள்ள குறிப்பைப் பார்க்கவும். அதை யனுஸரித்து ஸ்ரீமந் நாதமுனிகளின் சரிதையைப் பார்க்கில் கீழ்க்கண்ட விவரங்களும் அடங்கியுள்ளன—மறைந்து நின்ற நாலாயிரம் பாசுரங்களையும் தெரிந்துகொள்ள வேண்டுமென்று வெகு அவாவுடன் குருகூர் என்னும் ஆழ்வார் திருநகரி

சென்ற ஸ்ரீமந் நாதமுனிகள் அவ்விடமுள்ள வைஷ்ண வர்களைப் பலவாறு விசாரித்துக்கொண்டிருக்க, ஸ்ரீமத் மதுரகவியாழ்வாரின் சிஷ்யரான பராங்குசதாச ரொருவரையும் சந்தித்துக் கேட்டதில், அவர் நாத முனிகளுக்குச் சொன்ன விவரமாவது, சுவாமி! நம் மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி யென்னும் விஷயமாத்திரமன்றி ஏனைய ஆழ்வார்களருளிச்செய்த பிரபந்தங்களெல்லாம் வெகுகாலத்திற்கு முன் அரு ளிச்செய்திருந்தமையால் பூராவும் மறைந்து போயிருக் கிறது. என்னுடைய ஆசாரியரான ஸ்ரீமதுரகவிகள் கீழ்க்கண்டவாறு சொல்லியிருக்கிறார், அதாவது,

இவ்விடமிருக்கும் நம்மாழ்வாரின் விக்ரஹத்தி னெதிரில் யாராகிலுமொருவர் யோகத்திலுட்கார்ந்து தன்மனதை நம்மாழ்வாரின் பாதகமலங்களில் நிறுத் திக் "கண்ணிநுண்சிறுத்தாம்பு" யென்னும் பத்துப் பாசுரங்களையும் பனிரெண்டாயிரம்தடவை ஸ்மரிக்கின் றார்களோ அவர்களுக்கு நம்மாழ்வார் ப்ரத்யக்ஷமாய் அனுக்கிரஹிப்பாரென்று சொன்ன வசனங்களை நாத முனிகள் கேட்டு மனமுகப்புடன் பராங்குச தாசரின் திருவடிகளை நமஸ்கரித்துத் தனக்குக் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" யென்னும் திவ்ய பாசுரங்களை கற்றுக் கொடுக்கும்படியாய் வெகுவும் வேண்டினார். தாசரும் இவரே அக்காரியம் செய்ய அருகரெனத் தெரிந்து இவருக்கு அப்பாசுரங்களை யுபதேசித்தார்.

ஸ்ரீமந்நாதமுனிகளும் தாசர் சொன்னவண்ணமே பக்திபரவசராய் யோகத்திலிறங்கி நம்மாழ்வாரை மேல்கண்ட பாசுரங்களுடன் 12,000 தடவை தியானித் தார். ஸ்ரீமந்நாதமுனிகளின் நம்பிக்கை, ஞானம்,பக்தி,

வைராக்கியம், சாந்தி, மனோதிடம் முதலானவைகளை மெச்சி நம்மாழ்வார் இவருக்கு பிரசன்னராகி அசரீரி வந்தாப்போல் இவரெதிரிலிருக்கும் விக்ரகத்தின் திருவாயைத் திறந்து இவரபிப்பிராயத்தை வினவ, ஸ்ரீமந்நாதமுனிகளும் மறைந்து நின்ற ப்ரபந்தங்களை யெல்லாமறிய வேண்டுமென, ஸ்ரீ கண்ணபிரான் அர்ஜுனனுக்கு ஞானக்கண்ணைத் திறந்தாப்போல், ஆழ்வாரும் இவருக்கு ஞானமாகிய கண்ணைத்திறந்து திருவாய் மொழியையும், தனக்கு முன்னும் பின்னும் அவதரித் திருந்த ஆழ்வார்களருளிச் செய்திருந்த திவ்ய ப்ரபந் தங்களையும், மறைந்து நின்ற 4,000 பாசுரங்களையும் விரிவாயிவருக்குபதேசித்ததுமன்றி. வைணவத்தின் மூன்று ரஹஸ்யங்களையும், யோகத்தின் மர்மங்களையுமு பதேசித்தனர். பின்னும் சிலகாலம் ஸ்ரீமந்நாதமுனிகள் குருகூரிலேயே ஆதிநாதர் மற்றும் ஆழ்வார் கைங்கர் யங்களிலீடுபட்டவராயிருக்கும் பொழுது, வீரநாரா யணனென்னும் மன்னனுர் ஒரு நாள் இவர்கனவில் வந்து, இவர் கற்றுக்கொண்ட நாலாயிரம் பாசுரங்களை யும் தன்னெதிரில் சொல்லவேண்டுமென்று கட்டளை யிட, ஸ்ரீமந்நாதமுனிகள் ஆழ்வார், ஆதிநாதரின் உத்தி ரவுபெற்று, அவர்களாக்கினையின் பிரகாரம் இப்பாசுரங் களை யெல்லாம் தன் மனம், புத்தி, சித்தம், அஹங்கா ரங்களைச் சாமதானத்தினுலடக்கி நற்குணமுடைய ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் தெரிவிக்குமாறு அரங்கேத்திக் கொண்டு தன் சொந்தக் கிராமமாகிய (காட்டுமன்னார் கோயில்) வீரநாராயண புரமென்னும் ஸ்தலம் சேர்ந் தார்.

மன்னனாரின் கட்டளைப்பிரகாரம் தான்கற்றுக் கொண்ட நாலாயிரம் பாசுரங்களையும் சேவித்தார்.

பெருமாள் இவைகளை உலகினர் உஜ்ஜீவிக்கு மாறும், என்றும் மறவாமல் பிரகாசிக்கும் வண்ணம், நீர் இவற்றை இயலுமிசையுமாககும் என்று ஸ்ரீமந் நாதமுனிகளுக்கு நியமித்தருளினர்.

ஸ்ரீமந்நாதமுனிகளும் இப்பாசுரங்களை உதாத்த (Udatta), அனுதாத்த (Anudatta), ஸ்வரித (Svarita), ப்ரசய யுக்தங்களாக உச்சரிக்கலாம்படி, தன் மருமக்களான கீழையகத்தாழ்வாரையும் மற்றும் மேலையகத்தாழ்வாரையும் அழைத்து அவர்களின் சகா யத்தால் இந்த 4,000 பாசுரங்களையும் திவ்ய கானத் திலேயடைத்து இயலுமிசையுமாக்கிப் பாடுவித்தருள, இது லோகத்திலே பிரசித்தமாயிற்று. பின்னர் தன் எட்டு சிஷ்யர்களுக்கும் இத்திவ்ய பிரபந்தத்தை யோது வித்து சிலகாலம் யோகத்திலெழுந்தருளினர்.

ஸ்ரீமந்நாதமுனிகளின் பின்னர், இவர் எட்டு சிஷி யர்களின் மூலமாகவே இப்பிரபந்தம் பிரசுரமாய் பர விற்று. இவருடைய 8 சிஷியர்களின் திருநாமங்க ளாவன.

(1) உய்யக்கொண்டார்.(2) குருகைக்காவலப்பன் (3) நம்பி கருணாகரதாசர். (4) ஏறுதிருவுடையார். (5) திருக்கண்ணமங்கையாண்டான். (6) வானமாமலைதேவி யாண்டான் (7) உருப்பட்டூர் ஆச்சான்பிள்ளை. (8) சோகத்தூராழ்வார். (இவர்களின் வைபவங்களை பாஞ்ச ராத்திரமென்னும் கிரந்தத்தின் ஜய-சம்ஹிதா என்ப தில் காணவும்.)

(இக்கிரந்தத்தில் நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தின் ஆழ்வார்கள் அவதாரிகையிலடங்கிய சில விஷயங்கள் அவ்வாறே அனுசரிக்கப்பட்டிருக்கின்றன.)

## 108 திருப்பதிகளின் வரிசைக்கிரமம்

முதல்பாகம். பக்கம்.

---

இரண்டாம் பாகம்.

43 லிருந்து 64 வரையிலும் தொண்டைநாட்டுத் திருப்பதிகள்.

---

மூன்றும் பாகம்.

# முதல்பாகம்

---

விஷயம். விஷய ஸூசிகை பக்கம்.

விஷயம். விஷய ஸூசிகை பக்கம்.

விஷயம். விஷய ஸூசிகை பக்கம்.

விஷயம். விஷய ஸூசிகை பக்கம்.

| விஷயம். | விஷய ஸூசிகை | பக்கம். |
|---|---|---|





முதல் பாகம்

# சோழநாட்டுத் திருப்பதிகள் 40.

---

பன்னிரு ஆழ்வார்கள் மங்களாசாசனம்
செய்தருளிய நூற்றெட்டுத் திருப்பதிகளின்
விவரங்களடங்கிய பாசுரம்.

ஈரிருப தாஞ்சோழ மீரொன்ப தாம்பாண்டி
ஓர் பதின்மூன்றாமலை நாடோ ரிரண்டாம்—ஓர் நடுநா
டாறுடனே ரெட்டுதொண்டை யவ்வடநா டாறிரண்டு
கூறுதிரு நாடொன்றாக் கொள்."

ஈரிருபதாஞ்சோழம் $= 2 \times 20 = 40$.

இந்த 40 திவ்யதேசங்களிருக்குமிடங்களின் விவரங்கள் :—

(திருச்சினப்பள்ளி மற்றும் தஞ்சாவூர் ஜில்லாக்கள்.)

(1) திருச்சினப்பள்ளி ஜில்லாவில் ஸ்ரீரங்கம் சுற்றிலுமுள்ள 6 திவ்ய தேசங்கள் இக்கிரந்தத்தின் 1 முதல் 6 முடிய.

(2) தஞ்சாவூரிலிருந்து திருவையார் போகும் வழியிலுள்ள 2 ஸ்தலங்கள்—அதாவது 7, 8-வது.

(3) திருவையாரிலிருந்து கும்பகோணம் போகும் பாதையில் 4 சந்நதிகள்—9 முதல் 12 முடிய.

(4) கும்பகோணம் சுற்றிலுமுள்ள 4 சந்நதிகள்— 13 முதல் 16 முடிய.

(5) கும்கோணத்திலிருந்து திருவாரூர் போகும் பாதையிலுள்ள 3 சந்நதிகள்—17 முதல் 19 முடிய.

(6) தஞ்சாவூர் ஜில்லா திவலூர் சமீபத்தில்
1, 20-வது.

(7) நாகப்பட்டணத்தில் 1, 21-வது.

(8) நாகூரிலிருந்து நன்னிலம் போகும் வழியில்
1, 22-வது.

(9) நன்னிலம், திருவாரூர் கிளை ரையில்வே
லைனிலுள்ளது 1, 23-வது.

(10) மாயவரம் சுற்றிலுமுள்ள 3 சந்நதிகள்
24 முதல் 26 முடிய.

(11) சீர்காழியில் 1, 27-வது.

(12) சீர்காழிக்குத் தெற்கிலுள்ள 12 சந்நதிகள்
28 முதல் 39 முடிய.

(13) சிதம்பரத்தில் 1-40வது.

இந்த 40 திவ்ய தேசங்களையும் 15-நாட்களுக்குள் சேவிக்கலாம். சாவகாசமாய்ச் சேவிக்கவேண்டுமானால் 20-நாட்களுக்குக் குறைவில்லை. எல்லாவிடங்களுக்கும் சவாரி வசதியுண்டு. மற்ற விவரங்கள் அடியேன் பிரசுரப்படுத்தியிருக்கும் "108 திவ்யதேச யாத்ரா ப்ரபாவ சந்திரோதயம்" என்னும் கிரந்தத்தின் முகவுரையில் காணலாம்.

யாத்ரிகர்களின் அனுகூலத்தின் பொருட்டு மேல் சொன்ன கிரந்தத்தைத் தனித்தனி பாகங்களாய்ப் பிரித்து சுலப விலைக்கு வெளியிடப்பட்டிருக்கிறது.

பெங்களூர் 1—9—35

ஜி. கே. (105) பலிஜ,
வக்கீல்.



திருவரங்கம் பெரியகோயில்-ஸ்ரீரங்கம்-பூலோக வைகுண்டம்
போக மண்டலம்) **Srirangam Entrance Tower**



ப்ரணவ விமாநம்-ஸ்ரீரங்கம் **(Srirangam Pranava Viman)**



**Jewels of Srirangam Temple - திருவரங்கம்**
**பெரிய கோயிலென்னும் ஸ்ரீரங்கம் சந்நதியின் ஆடரணங்கள்**

# சோழநாட்டுத் திருப்பதிகள் 40.

---

ஒவ்வொரு திவ்யதேசத்தின் பெயரின் கடைசியிலுள்ள எண் இது நாலாயிர பிரபந்தத்தின் 108 திருப்பதிகளின் அட்டவணையின் இத்தனையாவது க்ஷேத்திரமென்பதைக் காட்டுகிறது.

## 1. திருவரங்கம் பெரிய கோயில். (ஸ்ரீரங்கம், பூலோக வைகுண்டம், போக மண்டலம் என்றும் சொல்லப்படும்.) 1.

மங்களாசாசனம்.

பெரியாழ்வா ரருளிச்செய்த பெரியாழ்வார் திருமொழி.

| | | | | |
|---|---|---|---|---|
| 2-ம பத்து | 7-ம் திருமொழி | 2, 8-ம் பாசுரங்கள். | | |
| 2 ,, | 9 ,, | 11-ம் பாசுரம். | | |
| 3 ,, | 3 ,, | 2 ம் ,, | | |
| 4 ,, | 8 ,; | 10 பாசுரங்கள் | | |
| 4. ,, | 9 ,, | 11 ,, | | |
| 4 ,, | 10 ,, | 10 ,, | | |

ஆண்டாளருளிச் செய்த நாய்ச்சியார் திருமொழி
முதலாயிரம் 11-ம் திருமொழி 10 பாசுரங்கள்.

குலசேகராழ்வாரருளிச் செய்த பெருமாள் திருமொழி
முதலாயிரம் 1-ம் திருமொழி 11 பாசுரங்கள்
,, 2 ,, 10 பாசுரங்கள்
,, 3 ,, 9 ,,
,, 8 ,, 10-ம் பாசுரம்

திருமழிசையாழ்வாரருளிச் செய்த திருச்சந்த விருத்தம்
21, 49, 50, 51, 52, 53, 54, 55.
93, 119-ம் பாசுரங்கள்

நான்முகன் திருவந்தாதி 3, 30, 36, 60-ம்
பாசுரங்கள்

தொண்டரடிப்பொடியாழ்வாரருளிச் செய்த
திருமாலை 1 to 4, 6, 8, 10 to 17, 20, 23 to 27,
29 to 33, 36 to 40, 42, 43, 45-ம் பாசுரங்கள்
திருப்பள்ளியெழுச்சி 10 பாசுரங்கள்

திருப்பாணாழ்வாரருளிச் செய்த அமலனாதிபிரான்
10 பாசுரங்கள்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி

| | | | |
|---|---|---|---|
| 1-ம் பத்து | 8-ம் திருமொழி | 2-ம் பாசுரம் | |
| 5 ,, | 4 ,, | 10 | பாசுரங்கள் |
| 5 ,, | 5 ,, | 4, 5, 6, 9, 10 | பாசுரங்கள் |
| 5 ,, | 6 ,, | 10 | ,, |
| 5 ,, | 7 ,, | 10 | ,, |
| 5 ,, | 8 ,, | 10 | ,, |
| 7 ,, | 3 ,, | 4-ம் | பாசுரம் |
| 8 ,, | 2 ,, | 7-ம் | ,, |
| 9 ,, | 9 ,, | 2-ம் | ,, |
| 11 ,, | 3 ,, | 7-ம் | ,, |
| 11 ,, | 8 ,, | 8-ம் | ,, |

திருக்குறுந்தாண்டகம் 7, 12, 13, 19-ம் பாசுரங்கள்
பெரிய திருமடல் 118-ம் பாசுரம்
சிறிய திருமடல் 71-ம் பாசுரம்.

திருநெடுந்தாண்டகம் 11, 12, 14, 18, 19, 23, 24,
25-ம் பாசுரங்கள்.

பொய்கையாழ்வாரருளிச் செய்த முதற்றிருவந்தாதி
6-ம் பாசுரம்.

பூதத்தாழ்வாரருளிச் செய்த இரண்டாந் திருவந்தாதி
28, 46, 70-ம் பாசுரங்கள்.

பேயாழ்வாரருளிச் செய்த மூன்றாந் திருவந்தாதி
62-ம் பாசுரம்.

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி
7-ம் பத்து 2-ம் திருமொழி 1-ம் பாசுரம்.
திருவிருத்தம் 28-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—ஸ்ரீரங்கநாதன், நம்பெருமாள், ஸ்ரீரங்க நாய்ச்சியார், ப்ரணவாக்ருதி விமாநம், வேதஸ்ருங்கம், காவேரிநதி, சந்திர புஷ்கரிணி, புன்னைவிருக்ஷம், புஜங்கசயநம், தெற்கே திருமுகமண்டலம், தர்மவர்மாவுக்கும், ரவிதர்மனுக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு): இது குலசேகராழ்வார், ஸ்ரீ ஆண்டாள், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், முதலிய நால்வரும் திருநாட்டிற் கெழுந்தருளிய ஸ்தலம். பட்டர், வடக்குத் திருவீதிப் பிள்ளை, அவர் குமாரர் பிள்ளைலோகாசாரியார், பெரியநம்பி இவர்களின் அவதாரஸ்தலம்—வடகலையாரின் பலம் குறைந்த விடமாயிருந்தாலும் அகோபலமடம் தற்பொழுது இவ்விடமே ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீ பாஷ்யகாரர் நியமித்த 74 சிம்ஹாசனாதிபதிகளில் அநேகருடைய வாசஸ்தான மிதுவே. இதுதான் ஸ்ரீ பாஷ்யகாரரேன்னும் இராமாநுஜரின் ஐக்கிய ஸ்தலம். இச்சந்நதியில் 7 பிரகாரங்களும் 15 கோபுரங்களுமுள. ஏறக்குறைய சந்நதிமட்டும் $\frac{3}{4}$ மைல் சுற்று விஸ்தீரணமுள்ளது. இச்சந்நதிக்கு மற்ற சந்நதிகளை

விட ஆதாயமதிகம். பொக்கிஷமும் ஆபரணமும் பெயர்போனது. இச்சந்நதியில் மற்ற சந்நதிகளைப் போல் தேங்காய் மூலஸ்தானத்தில் உடைப்பதில்லை யாதலால் வெளியில் உடைத்த தேங்காய் திருவலேயே பெருமாளுக்கு அம்சையாகும்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே (S. I. Rly.) மீடர்கேஜ் லைனில் வில்லுபுரம்—திருச்சி கார்டு லைனிலுள்ள ஸ்ரீரங்கம் என்னும் ஸ்டேஷன். ஸ்டேஷனிலிருந்து சந்நதி சுமால் ¾ மைல் தூரம் மேற்கிலிருக்கிறது. குதிரை மாட்டுவண்டிகள் கிடைக்கின்றன. திருச்சி ஸ்டேஷனிலிருந்து வடக்கே 3 மைல் தூரம். குதிரை மாட்டு வண்டிகளும் மோட்டார் பஸ் வண்டிகளும் கிடைக்கின்றன. இவ்வூரில் தங்க அநேக சத்திரங்களும் இராமாநுஜ கூடங்களுமிருந்தாலும் அவைகளில் மரியாதையுள்ளவர்கள் தங்க அனுகூலமிராது. அவ்வூரில் வசிக்கும் ஸ்ரீ வைஷ்ணவ பிராமணர்கள் சுலப வாடகைக்கு தங்கள் குடியிருக்கும் வீடுகளில் இடம் அமைத்துக் கொடுப்பதன்றி எல்லாவித அநுகூலங்களும் ஏற்படுத்திக் கொடுப்பார்கள். ஆனால் இவர்கள் வடநாட்டுப் பண்டாக்கள் போல் தொந்திரை செய்பவர்களல்லர். யோக்கியர்களே. மற்றும் பிராமணரல்லாதார்களும் சில சில வீடுகளைக் காலிசெய்து கொடைக்கூலிக்கு விடுகிறார்கள். இராமாநுஜ கூடங்களென்று பெயர் வைத்துக்கொண்டு யாத்ரீகர்களுக்கு இடவசதி செய்து கொடுப்பதாக வெளிநாடுகளில் சென்று பணம் வசூலித்துக்கொண்டு வந்து இத்தலத்தில் இராமாநுஜ கூடங்களை ஏற்படுத்தியிருந்தாலும் அவைகளில் மரியாதை யோக்கியதை இல்லாத மனிதர்களை காவல்

பாதுகாப்புக்காக வைத்திருப்பதால் இக்கூடங்களில் தங்கினுல் யாத்ரீகர்களுக்கு இவர்களால் வெகு இம்சை ஏற்படும். மரியாதை யில்லாமல் பேசுவார்கள். இவ்வூரில் சூத்திரர்களில் அநேகம்பேர் திருமண் போட்டுக்கொண்டிருப்பார்கள். இது தென்கலையார் சந்நிதி. தென்கலை நாமம் எவ்விடமும் பார்க்கலாம். அநேக ஆகார ஹோட்டல்களும் கடைகளுமுண்டு. குறைந்த விலைக்கு சந்நதியில் பிரசாதங்கள் விற்கிறுர்கள். ஆனுல் யாத்ரீகர்கள் இச் சந்நதியில் விற்கும் பிரசாதங்களை வாங்கி சாப்பிடுவது உசிதமல்ல. ஆனுல் சாப்பிடவேண்டுமானுல் அவைகள் சூடாயிருக்கும் பொழுதே வாங்கி சாப்பிடவேண்டும். ஆரிப்போன பிரசாதம் சாப்பிடக்கூடாது. த்வஜஸ்தம்பத்தின் பக்கத்தில் ஆரியபட்டாள் வாசலில் விற்கும் சூடான பிரசாதம் ஒன்றுதான் விலைக்கு வாங்க உசிதம். மற்றெந்த விடங்களிலும் விற்கும் பிரசாதம் வாங்கி சாப்பிடக்கூடாது. நாட்களான சந்நதிவடை முருக்குகளை வாங்கி சாப்பிடுவது நன்றல்ல.

(முக்கிய குறிப்பு):—இச்சந்நதியை சேவித்துக் கொண்டபின் இதற்குத் தெற்கில் சுமார் 4 மைலிலுள்ள உறையூரென்கிற நிசுளாபுரியை இரண்டாவதாகச் சேவித்துக் கொண்டு (வண்டிகளுண்டு) ஸ்ரீரங்கம் திரும்பி கொள்ளிடத்திற்கு வடகரையிலுள்ள கரம்பனூர் என்னும் உத்தமர் சந்நதியை நதியைக் கடந்தோ, அல்லது வண்டிமார்க்கமாயோ 3 மைல் சென்று சேவித்துக் கொண்டு, அவ்விடத்திலிருந்து மோட்டார்பஸ் வண்டி மார்க்கமாய் 7 மைலிலுள்ள திருவெள்ளறை என்னும் திவ்ய தேசத்தையும்

சேவித்த பின்பு ஸ்ரீரங்கம் திரும்பி ரைல்வண்டி மார்க்க மாய் வடகிழக்கேயுள்ள லால்குடி என்னும் ஸ்டேஷனி லிறங்கி கிழக்கே 5 மைலிலுள்ள அன்பிலைச் சேவித் துக் கொண்டு (லால்குடியிலிருந்து குதிரை வண்டி கள் ஏராளமாய்க் கிடைக்கும்), அவ்விடத்திலிருந்து எதிராக கொள்ளிடத்திற்கு தென் கரையிலுள்ள கோவிலடி யென்னும் திருப்பேர்நகரைச் சேவித்துக் கொண்டால் (அன்பிலிலிருந்து தென்திசையில் கொள் ளிடத்திற்குத் தென்கரையில் சுமார் 2மைல் தூரத்தி லுள்ளது திருப்பேர்நகர்) ஸ்ரீரங்கத்திற்குச் சுற்றிலு முள்ள 6 திவ்ய தேசங்களை ஒரே தடவையாய் 2 அல் லது 3 தினங்களில் சேவித்துக் கொள்ளலாம்.

---

## 2. உறையூர் (நிசுளாபுரி) 2.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
9-ம் பத்து 2-ம் திருமொழி 5-ம் பாசுரம்.

குலசேகராழ்வாரருளிச் செய்த பெருமாள் திருமொழி
முதலாயிரம் 2-ம் திருமொழி 10-ம் பாசுரம்

ப்ரபாவம்:—அழகிய மணவாளன், வாஸலக்ஷ்மி, உறையூர்வல்லி, கல்யாண விமாநம், கல்யாணதீர்த்தம், குடமுருட்டிநதி, வடக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கும் ரவிதர்ம ராஜாவுக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு):—இந்த சந்நதிக்கு உற்சவ விக்கிரகமில்லை. ஸ்ரீரங்கத்திலிருந்து வரும் உற்சவரே இவ்விடமும் உற்சவர். சந்நதியும் ஸ்ரீரங்கத்தைப் போல் பிரபலமில்லை. இவ்விடம் விற்கும் பிரசாதமும் கொஞ்சமே. ஸ்ரீரங்கத்தின் சந்நதி அர்ச்சகர்களே இச்சந்நதிக்கும் அர்ச்சகர்கள். இது திருப்பாணாழ்வாரின் அவதாரஸ்தலம். இது விசேஷ யாத்திரா ஸ்தலமாகக் காண்கிறதில்லை.

மார்க்கமும் வசதியும்:—(S.I.Rly.) தென் இந்தியா ரையில்வேயின் மீடர்கேஜ் திருச்சினப்பள்ளி கோட்டை (Fort) ஸ்டேஷனுக்கு மேற்கே கற்சாலை மார்க்கமாய் 1 மைலிலிருக்கிறது. குதிரை, மாட்டு, மோட்டார் பஸ் வண்டிகளும், சத்திரமும், ஆகார சாப்பாடு ஹோட்டல்களுமுண்டு. குடியிருக்கும் வீடுகளில் வாடகைக்கு இடம் கிடைக்கும். ஆனால் திருச்சியிலோ அல்லது ஸ்ரீரங்கத்திலோ இடவசதிகளிருப்பதால் யாத்ரீகர்கள் அவ்விடங்களில் ஸ்தலம் செய்து கொண்டு இச்சந்நதிக்குப் போய் தரிசனம் செய்து திரும்பி வருவது சாதாரணமா யிருக்கிறது.

## 3. கரம்பனூர் (உத்தமர் சந்நதி) 5.

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
5-ம் பத்து, 6-ம் திருமொழி, 2-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—புருஷோத்தமன், பூர்வாதேவி, உத்யோக விமாநம், கதம்ப தீர்த்தம், வாழைமரம், கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், கதம்ப மகரிஷிக்கும், திருமங்கையாழ்வாருக்கும், உபரிசரவஸுவுக்கும், ஸநகஸனந்தஸநத்குமாரர்களுக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு):—இச்சந்நதியிள் பிராகாரத்திற்குள் தென்னண்டையில் சில வாழைமரங்கள் எப்பொழுதுமிருக்கின்றன. செழிப்பாயிருப்பதில்லை. ஆனல் ப்ரபாவத்தில் கண்டிருப்பதனல் பேருக்கு மாத்திரம் சில வாழைமரங்கள் விசேஷ கவனமின்றி வைக்கப் பட்டிருக்கின்றன. மழைகாலத்தில் இம்மரங்கள் பிரபலமாயிருக்கலாம். இப்பிரகாரத்திளுள்ளேயே பிக்ஷாண்டார் என்னும் ஒரு சிவலிங்கங்கொண்ட சந்நதி விஷ்ணு சந்நதியின் மூலஸ்தானத்தை ஒட்டினுப்போலவே மேற்கே திருமுகமண்டலமாயிருக்கிறது. இச்சந்நதிக்குச் செல்லும் யாத்ரீகள் சந்நதியைப் பிரதக்ஷிணம் செய்வதானல் இந்த சிவன் சந்நதியையும் சேர்த்தே பிரதக்ஷிணம் செய்யவேண்டும். சிவ நிந்தனை செய்யும் வீரவைஷ்ணவர்களின் கதி எப்படி? இத்திவ்ய தேசத்தை தரிசிக்காமலே இருப்பார்போலும். ஆகையால் மங்களாசாசனம் செய்த திருமங்கையாழ்வார் சிவத்வேஷியல்ல. மற்றும் அவர் காலத்தில் வைஷ்ணவர்கள் சிவத்வேஷிகளாய் கண்

டிப்பாயிருக்கவேயில்லை. வைஷ்ணவர்கள் சிவ த்வேஷம் செய்ய வாரம்பித்தது ஸ்ரீ பாஷ்யகாரரின் பின்னிட்ட காலத்திலேயே யென்பது திண்ணமாய் விளங்கும். இவ்விஷயத்தைப் பரிபூர்ணமாய் அடியேன் க்ரந்தத்தின் 50-வது திவ்யதேசக் குறிப்பில் காணவும்.

மார்க்கமும் வசதியும்:—இச்சந்நதி ஸ்ரீரங்கத்திற்கு எதிர்க்கரையாகிய கொல்லிட நதியின் இட புரமாயுள்ளது. ஸ்ரீரங்கத்திலிருந்து நதியைத் தாண்டிச்சென்றால் சுமார் $1\frac{1}{2}$ மைலாகும். கட்டை வண்டி மார்க்கமாய் அவ்விடமிருந்து 3 மைலாகும். திருச்சியிலிருந்து நாமக்கல்—சேலம் மோட்டார் வண்டியிலேறினால் 3 மைலிலுள்ள இத்தலத்தில் இறங்கலாம். சந்நதி சேலம் போகும் கற்சாலையின் வழிமேல் வலது கைப் புறமுள்ளது. பூஜைகாலம் தப்பினால் அர்ச்சகர் கிடைக்கமாட்டார். அவர் சந்நதிக்கு வடக்கே $\frac{1}{2}$ மைல் தூரமுள்ள ஓர் வீட்டில் குடியிருக்கிறார். இவ்விடத்தில் சத்திரம் ஆகார ஹோட்டல்களில்லை. தரிசினம் செய்துகொண்டு ஸ்ரீரங்கம் திரும்புவதே நலம்.

---

## 4. திருவெள்ளறை 6.

(வெள்ளறையுள் கல்லறைமேல் என்றும் மங்களாசாசனம்.)

மங்களாசாசனம்.

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி
முதற்பத்து, 6-ம் திருமொழி, 8-ம் பாசுரம்.
2-ம் பத்து, 8 „ 10 பாசுரங்கள்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
5-ம் பத்து, 3-ம் திருமொழி, 10 பாசுரங்கள்.
10 „ 1 „ 4-ம் பாசுரம்.
சிறிய திருமடல் 70-ம் பாசுரம்.
பெரிய திருமடல் 117-ம் „

ப்ரபாவம்:—புண்டரீகாக்ஷன், பங்கயச் செல்வி, செண்பகவல்லி, விமலாக்ருதிவிமாநம், குசதீர்த்தம், மணிகர்ணிகா தீர்த்தம், சக்ரதீர்த்தம், திவ்யபுஷ்கரிணி, புஷ்கலதீர்த்தம், பத்மதீர்த்தம், கந்த புஷ்கரிணி, க்ஷீர புஷ்கரிணி, வராகதீர்த்தம், சுவேதகிரி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், பெரிய திருவடிக்கும், சிபி சக்ரவர்த்திக்கும், பூதேவிக்கும், மார்க்கண்டேயருக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு):—இத்தலமெங்கும் வெண்மையான கற்பாறைக் குன்றுகள் பரவியுள்ளன. வெகு புராதன சந்நதியாய்க் காண்கிறது. பூர்த்தியாகாத கோபுரமும், விமாநமும் காணலாம். சந்நதியும் ஒரு உயந்த ஸ்தானத்திலிருக்கிறது. இது பெரிய மலையுமல்ல, சமபூமியுமல்ல. ஆனல் ஊரின் வீடுகளின் சமமட்டத்தைப் பார்க்கிலும் சுமார் 100 அடி உயரத்தில் சந்நதி யிருக்

கிறது. படிக்கட்டுகளுண்டு. இதையே சுவேதகிரி யென்பர். ஆகையால்தான் திருமங்கையாழ்வாரும் தான் அருளிச்செய்த பெரிய திருமடல் 117-ம் பாசுரத்தில் 'வெள்ளறையுள் கல்லறைமேல்' என்று மங்களாசாஸனம் செய்தார்போலும். உய்யக்கொண்டார் அவதாரஸ்தலமென்பர்.

மார்க்கமும் வசதியும் :—திருச்சி கோட்டையிலிருந்து சேலம் போகும் மோட்டார் பஸ் வண்டிகள் மார்க்கமாய் மணச்சநல்லூர் என்னும் கிராமம் தாண்டி 13—14-ம் மைல் கற்களுக்கு மத்தியிலுள்ள ஸ்தலம். ரோட்டை விட்டு மேற்புரம் 2 பர்லாங்கில் சந்நிதி காண்கிறது. ஸ்ரீரங்கத்திலிருந்து வடக்கே 10 மைலிலும், காம்பனூரிலிருந்து வடக்கே 7 மைலிலுமுள்ளது. குதிரை, மாட்டு வண்டிகள் திருச்சி, ஸ்ரீரங்கம் அல்லது ஜம்புகேஸ்வரத்திலிருந்து அமைத்துக்கொண்டு போகலாம். சத்திரமில்லை. கடைகளுண்டு. ஹோட்டல்கள் கிடையாது. இச்சந்நிதியை சேவித்துக்கொண்டு ஸ்ரீரங்கம் அல்லது திருச்சி அன்றே திரும்பிவிடலாம்.

---

## 5. அன்பில் 4.

மங்களாசாசனம்.

திருமழிசையாழ்வாரருளிச் செய்த நான்முகன் திருவந்தாதி 36-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—திருவடிவழகியநம்பி, அழகியவல்லி நாய்ச்சியார், தாரகவிமாநம், மண்டூகபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், பிரம்மாவுக்கும் வால்மீகருக்கும் ப்ரத்யக்ஷம்.

இது வெகுவும் புராதன கோயிலாய்க்காண்கிறது. இப்பொழுது வெகு ஜீர்ணஸ்திதியடைந்து கர்ப்பக்கிரகத்தின் பாகம் மாத்திரம் ரிப்பேர் செய்யப்பட்டு வெகு சிறிய சந்நதியாயிருக்கிறது. சுற்றிலுமுள்ள இடிந்த செங்கற் சுவர்களை நோக்கில் பூர்வத்தில் இது வெகுவும் பெரிய சந்நதியா யிருந்திருக்கவேண்டும். இங்கே ஒரு சிறிய கிராமமுண்டு. கொள்ளிடத்தின் வடகரையிலுள்ளது.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரையில்வேயின் (S. I. Ry) மீடர்கேஜ் திருச்சி—வில்லுபுரம் கார்டு லைனிலுள்ள லால்குடி என்னும் ரையில்வே ஸ்டேஷனிலிறங்கி கிழக்கே 5 மைல் தூரம் சென்றால் இத்தலத்தை யடையலாம். குதிரை வண்டிகள் எப்பொழுதும் ஸ்டேஷனிலிருந்து கிடைக்கும். நபர் ஒன்றுக்கு 2-அணா. சத்திரமில்லை. ஆகாரக்கடைகளுண்டு.

---



திருப்பேர்நகர் சந்நதி (கோயிலடி-இந்திரகி.ரி)
**Thiruppernagar or Koiladi Temple**

## 6. திருப்பேர் நகர் 8.

(கோவிலடியென்று சாதாரணமாய் பெயர் வழங்கும்)

மங்களாசாசனம்:

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி
2-ம் பத்து 6-ம் திருமொழி 2-ம் பாசுரம்
,, 9 ,, 4 ,,

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
5-ம் பத்து 9-ம் திருமொழி 10 பாசுரங்கள்
திருக்குறுந்தாண்டகம் 19-ம் பாசுரம்
திருநெடுந்தாண்டகம் 8, 9-ம் பாசுரங்கள்
சிறிய திருமடல் 70-ம் பாசுரம்

திருமழிசையாழ்வாரருளிச் செய்த நான்முகன் திருவந்
தாதி 36-ம் பாசுரம்

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி
10-ம் பத்து 8-ம் திருமொழி 11 பாசுரங்கள்

ப்ரபாவம்:—அப்பக்குடத்தான், கமலவல்லித் தாயார், இந்திரவிமாநம், இந்திரதீர்த்தம், மேற்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், வலதுகையின் கீழ் குடம், இந்திரகிரி, உபமனுவுக்கும், பராசரருக்கும் ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:—இது ஒரு சிறிய கிராமம். கொள்ளிடநதிக்குத் தென்கரையிலுள்ளது. அன்பில் கிராமத்திற்கு எதிரில் நேர் தெற்காய் 2½மைல் தூரத்தில் கொள்ளிட நதியின் எதிர்கரையிலுள்ளது. ஆற்றைக் கடந்தால் கோவிலடி சேரலாம். மற்றும் திருச்சியிலிருந்து இந்த கிராமம் சுமார் 15 மைல் தூர

முள்ளது. கல்லணையிலிருந்து கிழக்கே சுமார் 5 மைல் வந்தால் இத்தலத்தை யடையலாம். மணற் பாதைவழி. கட்டை வண்டிகள்தான் நிதானமாய் இக் கிராமத்திற்கு வரும். கல்லணையிலிருந்தாவது, ஜம்பு கேஸ்வரத்திலிருந்தாவது, திருச்சியிலிருந்தாவது வண்டிகள் அமைத்துக் கொண்டு இத்தலம் வரலாம். சத்திரமுண்டு, ஆகார ஹோட்டலுமுண்டு, சாப்பாட்டிற்கு வசதிகள் செய்துகொள்ளலாம்.

சந்நதியின் தென்புறமாய் ஓர் நதி ஓடுகிறது. ஜலவசதி யுண்டு. சந்நதியைச் சுற்றிலும் மலைக்குன்றுகள் கிடையாவிடினும், ஊரின் மட்டத்தைவிட சந்நதியின் மூலஸ்தானம் சுமார் 20 அடி உயரமாயிருப்பதால் இதற்கு இந்திரகிரி என்று பெயருண்டாயிருப்பதாகக் காண்கிறது.

## 7. தஞ்சை மாமணிக் கோயில் 3.
## (வடகலை சந்நதி)

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரிய திருமொழி.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1-ம் பத்து, | 1-ம் திருமொழி, | 6-ம் பாசுரம் |
| 2 ,, | 5 ,, | 3 ,, |
| 7 ,, | 3 ,, | 9 ,, |

பூதத்தாழ்வாரருளிச் செய்த இரண்டாந்திருவந்தாதி 70-ம் பாசுரம்

நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழி 5-ம் பத்து, 3-ம் திருமொழி, 1-ம் பாசுரம்

### தஞ்சை மாமணிக் கோயில்

ப்ரபாவம்:—நீலமேகப்பெருமாள், செங்கமல வல்லி, சௌந்தரியவிமாநம், கன்னிகாபுஷ்கரிணி, அமுததீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்ருந்த திருக்கோலம், பராசரமுனிக்கு ப்ரத்யக்ஷம்.

### தஞ்சையாளிநகர்

நரசிங்கப்பெருமாள், தஞ்சைநாயகி, வேதசுந்தர விமாநம், சூரிய புஷ்கரிணி, ஸ்ரீராம தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், மார்க்கண்டேய மகாமுனிக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு):—இதற்கு வடக்கு சுமார் ½ மைல் தூரத்தில் வெண்ணாற்றங்கரைக்குத் தென்பாகத்திலேயே நீலமேகப்பெருமாள் சந்நதி யிருக்கிறது. அதற்குப் பக்கத்தில் மணிக்குன்றப்பெருமாள் சந்நதியென்று வேரே ஒரு சந்நதியுமிருக்கிறது. இம்மூன்று

சந்நதிகளும் ஆழ்வார்களால் மங்களாசாசனமானவைகள்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரியதிருமொழி 1-ம் பத்து 1-ம் திருமொழி 6-ம் பாசுரத்தின் 3-ம் வரியில் "தஞ்சை மாமணிக்கோயிலே வணங்கி"யென்பதனுல் மணிக்குன்றப்பெருமாளையும், 2-ம் பத்து 5-ம் திருமொழி 3-ம் பாசுரத்தின் 5-ம் வரியில் "தடம்பருகு கருமுகிலைத் தஞ்சைக் கோயில் தவநெறிக்கோர்பெருநெறியை" என்று நீலமேகப் பெருமாளையும்(கருமுகிலையென்றதால்)

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி 5-ம் பத்து 3-ம் திருமொழி 1-ம் பாசுரத்தின் முதல் வரியில் "மாசறுசோதி யென்செய்யவாய் மணிக்குன்றத்தை" யென்றதனுல் மணிக்குன்றப் பெருமாளையே மங்களாசாசனம் செய்துள்ளார்.

பூதத்தாழ்வாரருளிச் செய்த இரண்டாந் திருவந்தாதி 70-ம் பாசுரத்தின் 1-ம் வரியில் "தமருள்ளம் தஞ்சை தலையரங்கம்" என்பதில் தஞ்சையின் எந்த திவ்ய தேசமென்பது விவரமாயில்லை. தஞ்சையாளி நகரென்று சொல்லப்படும் நரசிங்கப்பெருமாள் சந்நதியை மாத்திரம் திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி 7-ம் பத்து 3-ம் திருமொழி 9-ம் பாசுரத்தின் 3-ம் வரியில் "தஞ்சையாளியை" என்று சொல்லி யிருப்பதால் தஞ்சையாளிநகர் என்று சொல்லும் திவ்ய தேசமும் மங்களாசாசன மானதாகக் கொள்ளப்பட்டிருக்கிறது.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே (S.I.Ry) மீட்டர் கேஜ் லைனில் தஞ்சாவூர் என்னும் ரைல்வே ஸ்டேஷனிலிருந்து வடக்கே திருவையார் போகும் கற்சாலையில் $2\frac{1}{2}$ மைல் தூரம் சென்றால் வெண்ணாற்றங்கரை யென்னும் ஊரில் இந்த 3 சந்நதிகளுண்டு. குதிரை, மாட்டு வண்டிகளும் மோட்டார் பஸ் வண்டியும் கிடைக்கின்றன. சத்திரங்களும், ஆகார ஹோட்டல்களுமுண்டு. இவ்விடமிருந்து வடக்கே 3 மைல் சென்றால் 8வதான கண்டியூர் என்னும் திவ்யதேச மிருக்கிறது.

விசேஷக் குறிப்பு:-கண்டியூர் சேவித்துக் கொண்டு இரவில் வடக்கே 1 மைல் தூரமுள்ள திருவையார் சேரவேண்டும். சத்திரமுண்டு. காலையில் அவ்விடமிருந்து கும்பகோணம் போகும் மோட்டார் பஸ் வண்டியில் புறப்பட்டால் வழியில் கிழக்கே $7\frac{1}{2}$ மைல் தூரத்திலுள்ள 9வது திவ்யதேசமாகிய ஆடுதுறை பெருமாள் கோயிலென்கிற கூடலூர் என்னும் திவ்ய தேசத்தையும் (சார்ஜ் 0-4-0), மற்றும் அவ்விடத்திலிருந்து $3\frac{1}{2}$ மைல் கிழக்கிலுள்ள 10-வது திவ்யதேசமாகிய கவித்தலத்தையும், மற்றும் இவ்விடத்திருந்து 3 மைல் கிழக்கிலுள்ள அண்டக்குடியைச் சேர்ந்து அவ்விடம் ஒரு இரட்டைமாட்டு வண்டியை அமர்த்திக்கொண்டால் ஓரேநாளில் அதற்கு வடக்கில் மண் சாலை வழியாய் கூனன்சேறி மார்க்கமாய் 2 மைல் தூரத்திலுள்ள 11வது திவ்யதேசமாகிய புள்ளம்பூதங்குடி யென்னும் திவ்யதேசத்தையும், இதற்கு வடகிழக்கே $\frac{3}{4}$ மைலிலுள்ள 12-வதான ஆதனூர் என்னும் திவ்யதேசத்தையும், புள்ளம்பூதக்குடிக்கு மேற்கே

கூனஞ்சேறி மார்க்கமாய் 1 மைல் தூரத்திலுள்ள மண்டங்குடி யென்னும் தொண்டரடிப்பொடியாழ் வார் அவதார ஸ்தலத்தையும் தரிசித்துக்கொண்டு அன்றே அண்டக்குடியிலிருந்து மோட்டார் பஸ் வண்டி மார்க்கமாய் கும்பகோணமென்னும் 13-வது திவ்யதேசமாகிய திருக்குடந்தையைச் சேர்ந்து தரி சிக்கலாம். இவ்வாறாக 6 திவ்ய தேசங்களை ஒரே முறையாக 2 தினங்களில் சேவிக்கலாம்.

அண்டக்குடி யென்பது சுவாமி மலைக்கு மேற்கில் 1 மைல் தூரத்திலுள்ள சிறிய கிராமம். கவித்தலத்தி லிருந்து 3 மைல் கிழக்கேயுள்ளது. மோட்டார்பஸ் வண்டி போகும் கற்சாலைமேலுள்ளது. இவ்விடம் ஒரு சிறிய சத்திரமும் பிராமணாள் ஆகார ஹோட் டலுமுண்டு. ஜல சௌகரியமுமுண்டு. சிறிய கிராமமா யிருந்தாலும் வாடகைக்கு இரட்டைமாட்டு வண்டிகள் கிடைக்கின்றன. மழைகாலங்களில் இவ் விடமிருந்து போகும் மூன்று ஸ்தலங்களுக்குப் போவது கடினம். வழி களிமண் நிறைந்தது. கும்பகோணத்திற்கு மேற்கேயுள்ள சுவாமிமலை யென் னும் ரைல்வே ஸ்டேஷனி லிறங்கினாலும் அண்டக்குடி சேர்ந்தே இந்த 11, 12-வது ஸ்தலங்களையும் திருமண் டங் குடியையும் சேவிக்கவேண்டும்.

---

## 8. கண்டியூர். 15.

(வடகலை சந்நதி)

மங்களாசாஸனம்:

திருமங்கையாழ்வாரருளிச் செய்த திருக்குறுந்தாண்டகம் 19-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—அரன்சாபந்தீர்த்தவர், கமலவல்லி நாய்ச்சியார், கமலாக்ருதிவிமாநம், கபாலதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், ருத்ரனுக்குக் கபால நிவர்த்தி செய்தவர், அகஸ்தியருக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே (S. I. Ry) தஞ்சாவூர் ஸ்டேஷனிலிருந்து வடக்கே திருவையாற்றுக்குப் போகும் மோட்டார் வண்டியில் சென்றால் 6-வது மைலிலுள்ள இத்தலத்தை யடையலாம். இவ்விடமிருந்து திருவையார் வடக்கே 1 மைலிலிருக்கிறது. இது வெண்ணாற்றங்கரையிலிருக்கும் தஞ்சைமாமணிக்கோயிலிலிருந்து வடக்கே $3\frac{1}{2}$ மைல் தூரத்திலிருக்கிறது. தஞ்சாவூரிலிருந்து குதிரை, மாட்டு வண்டிகளும் கிடைக்கின்றன. சத்திரமுண்டு. ஆனால் அதில் தங்க சௌகரியமிராது. ஹோட்டல்களுண்டு. இச்சந்நதியைத் தரிசித்துக்கொண்டு இரவில் திருவையார் சென்று தங்கினால் வெகுவும் அனுகூலமாயிருக்கும்.

---

## 9. கூடலூர். 25.

(ஆடுதுறைப் பெருமாள் கோயிலென்றால்தான் சாமா
தென் னிய ஜனங்களுக்குத் தெரியும்) ~~—~~கலை சந்நதி.

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரியதிருமொழி
5-ம் பத்து, 2-ம் திருமொழி, 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—வையங்காத்த பெருமாள், பத்மாஸந வல்லி, சுத்தஸத்வ விமாநம், சக்ரதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், நந்தக மாமுனிக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:—முன் சொன்ன திவ்ய தேசமாகிய கண்டியூரைச் சேவித்தபின்பு வடக்கே 1 மைல் தூரமுள்ள திருவையார் என்னும் ஊரிலிருந்து கும்பகோணம் செல்லும் மோட்டார் வண்டியிலேறி (சார்ஜ் 0-4-0) கிழக்கே $7\frac{1}{2}$ மைல் சென்றால் கற்சாலையின் மீதுள்ள இச்சந்நதியைச் சேரலாம். திருவையாரிலிருந்து குதிரை மாட்டுவண்டிகள் கிடைக்கும் சிறியகிராமம். சத்திரமில்லை. ஆகார ஹோட்டலுண்டு. இச்சந்நதியைச் சேவித்தபின்பு கும்பகோணம் போகும் மோட்டார் வண்டியில் மற்றும் கிழக்கே $3\frac{1}{2}$ மைல் சென்றால் 10வதாகிய கவித்தலம் என்னும் சந்நதியைச் சேரலாம்.

---

## 10. கவித்தலம் 28.

தென் (வடகலை சந்நதி)

மங்களாசாசனம்.

திருமழிசையாழ்வாரருளிச்செய்த நான்முகன் திருவந்தாதி 50-ம் பாசுரம்

"கூற்றமும் சாரா கொடுவினையும் சாரா தீ
மாற்றமும் சாரா வகையறிந்தேன்—ஆற்றங்
கரைக்கிடக்கும் கண்ணன் கடல் கிடக்கும் மாயன்
உரைக் கிடக்கு முள்ளத் தெனக்கு."

இப்பாசுரத்தால் இத்தலத்தை யாகிலும் இத்தலத்தின் பெருமாளாகிய கஜேந்திரவரதரையாகிலும் எவ்வாறு ஆழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளாரென அடியேனுக்குப் புலப்படவில்லை. இப்பாசுரத்தைவிட ஏனைய ஆழ்வார் யாரும் இத்தலத்தை மங்களாசாசனம் செய்ததாகக் காணப்படவில்லை. மேலே சொல்லியிருக்கும் பாசுரம் இத்தலத்தின் மங்களாசாசனப் பாசுரமாகப் பாவிக்கப்படாவிடில் இத்தலம் மங்களாசாசனமாயுள்ளதென சொல்ல வேறே எந்த ஆதாரமும் காண்கிறதில்லை.

ப்ரபாவம்:—கஜேந்திரவரதர், ரமாமணிவல்லி, பொற்றாமரையாள், ககநாக்ருதிவிமானம், கஜேந்திர புஷ்கரிணி, கபிலதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், கஜேந்திரனுக்கும் ஆஞ்சநேயருக்கும் ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும் :—மேலே சொன்ன கூடலூர் அல்லது ஆடுதுறைப்பெருமாள் கோயி

லென்னும் சந்நதியிலிருந்து கிழக்கே 3½ மைல் சென்ருல் இத்தலத்தை யடையலாம். இவ்விடமிருந்து மோட்டார் பஸ் வண்டிகள் இவ்வூர் மார்க்கமாய் கும்பகோணம செல்லுகின்றன. மற்றும் தென் இந்தியா ரைல்வேயின் கும்பகோணத்திற்கு மேற்கிலுள்ள பாபநாசம் ஸ்டேஷனிலிறங்கினுல் வடக்கே 2 மைல் தூரத்திலிருக்கிறது. ஸ்டேஷனிலிருந்து வண்டிகள் கிடைக்கின்றன. இது இந்தப்பக்கங்களிலுள்ள கிராமங்களுக்கெல்லாம் பெரிய கிராமம்—ராஜவீதி (ரோடு) யிலிருந்து வடக்கே 2 பர்லாங்கு சென்ருல் இச்சந்நதி யிருக்கிறது. இவ்வூரில் சத்திரமுண்டு. பெரிய கடைகளுமுண்டு. ஆகார ஹோட்டல்களுமுள. திருவையாரிலிருந்து இத்தலம் 11 மைல் தூரம். திருவையாரிலிருந்து கும்பகோணம் போகும் மோட்டார் வண்டியிலேறினுல் இவ்விடத்திற்கு சார்ஜு நபர் ஒன்றுக்கு 0—5—0.

———

## 11. புள்ளம் பூதங்குடி - (வடகலை சந்நதி) 7 மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
5-ம் பத்து 1-ம் திருமொழி 10 பாசுரங்கள்

ப்ரபாவம்:—வல்விலிராமன், பொற்றாமரையாள், சோபநவிமாநம், க்ருத்ர தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், சக்ரவர்த்தித் திருமகனுக்கும், க்ருத்ர ராஜனுக்கும் ப்ரத்யக்ஷமாய் மோக்ஷம் தந்தவிடம்.

(குறிப்பு):—இந்த சந்நதிக்கு மேல்புறம் அதாவது பின்னண்டையுள்ள குளத்திற்கு ஜடாயு தீர்த்தமென்னும்பெயருண்டு. இவ்விடம் இராமபிரான் ஜடாயுவை தகனம் செய்தபின்பு மூலஸ்தானத்தின் பின்னிருக்கும் பொன்னை மரத்தின்கீழ் படுத்து இளைப்பாறினதாகவும், கலியனென்ற திருமங்கையாழ்வாருக்கு சங்கு சக்ர ரூபத்துடன் தரிசனம் கொடுத்ததாகவும் ஐதீகம் சொல்லுகிறார்கள். ஆகையால் மூலஸ்தானம் ஸ்ரீராமர் விக்கிரஹமாயிருந்தாலும் கையில் சங்கு சக்காங்களிருப்பது காணத்தக்கது. திவ்யதேசங்களெல்லாவற்றிலும் இந்த திவ்யதேசத்திலொன்றிலே மாத்திரம் ஸ்ரீராமர் சங்கு சக்கரத்துடன் தரிசனம் கொடுக்கிறார்—மற்றெங்குமில்லை.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே (S. I. Rly.) மீடர்கேஜ் மெயின் லைனிலுள்ள கும்பகோணத்திற்கு மேற்கேயுள்ள சுவாமிமலை யென்னும் ஸ்டேஷனிலிருந்து மேற்கே 1 மைலிலுள்ள அண்டக்குடி யென்னும் கிராமத்தைச் சேர்ந்து அவ்விடமிருந்து ஒரு இரட்டை மாட்டு வண்டியை

ஏற்படுத்திக்கொண்டால் மண்சாலை வழியாய் வட மேற்கே 2 மைல் தூரம் சென்றால் இத்தலத்தை யடையலாம். இது ஒரு சிறிய கிராமம். சத்திரம் கடைகள் மற்றும் ஆகார ஹோட்டல்கள் கிடையா. சந்நிதியில் பிரசாதம் பூஜை வேளைக்குச் சென்றால் கிடைக்கும். வெகுவும் சிறிய சந்நதி. இது அஹோபில மடத்தைச் சேர்ந்த வடகலை சந்நதி.

(இதற்கு மேற்கே 1 மைலில் தொண்டரடிப் பொடியாழ்வாரின் அவதார ஸ்தலமான திருமண்டங்குடி என்னும் கிராமமிருக்கிறது.)

---

## 12 ஆதனூர் (வடகலை சந்நதி) 9

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமடல்
130-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—ஆண்டளக்குமையன், ஸ்ரீரங்கநாயகி யார், ப்ரணவவிமாநம், சூரியபுஷ்கரிணி, கிழக்கே திரு முகமண்டலம், புஜங்கசயநம், காமதேனுவுக்கும் திரு மங்கையாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம்

(குறிப்பு):—இது வெகுவும் சிறிய கிராமத்தி லுள்ள சிறு சந்நதி. சத்திரம் கடைகள் மற்றும் ஆகார ஹோட்டல்களில்லை. இந்தச்சந்நதி வெகு ஜீரணமாயிருந்ததை ஓர் வடதேசத்துப் பிரபுவாகிய ஸ்ரீமத் கல்கத்தா மஹனிராம் குன்வார் பங்கூர் சேட் என்பவர் ஏராளமான திரவியத்தைச் சிலவு செய்து சந்நதி முழுமையும் புதிப்பித்திருக்கிறார். புதிய சந்ததியைப்போல் காண்கிறது. இந்த சந்நதியின் மூலவரின் பெயர் ஆண்டளக்குமையன். தன் தலையின் கீழ் தலையணையாக ஒரு மரக்காலை வைத்துச் சயனித் துக்கொண்டு உலகத்தோருக்கு படியளக்கும் பரம கிருபையைக் குறிப்பதாயினும் இத்தலத்திற்கு வரும் யாத்ரீகர்களுக்கு சந்நதியின் பிரசாதங்கூட கிடைக்கா மலிருந்தது. அடியேன் சென்ற பொழுது அவ்விட முள்ள ஸ்ரீவைஷ்ணவ ஸ்வாமிகளைச் சந்தித்து அவர் களில்முக்கியஸ்தரான ஸ்ரீமான் வி. ஸ்ரீனிவாச இரங் காசாரியார் B. A. L. T. (வில்லுபுரம் ஹைஸ்கூல் உபாத் தியாயர்) ஸ்வாமிகளின் மூலியமாய், முன்னுக்கு சந்நதி யின் பிரசாதத்தை முற்றும் தேசாந்திரிகளுக்குப்

பங்கிட்டுக் கொடுப்பதாகவும் தங்க ஸ்தலவசதிசெய்து கொடுப்பதாகவும் ஏற்றுக்கொண்டிருப்பதால் யாத்ரீகர்களுக்கு இவ்விடம் வசதியுண்டென அடியேன் இக்கிரந்தத்திலெழுதத் துணிவு கொண்டேன்.

மார்க்கமும் வசதியும்:—புள்ளம்பூதங்குடி யென்னும் சந்நிதியிலிருந்து ½ மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம். போகும் வழியில் நரசிம்மபுரமென்ற ஓர் சிறிய கிராமத்தின் பக்கத்தில் அஹோபலமடத்தின் பரமபதமடைந்த மடாதிபதிகளின் பிருந்தாவனங்களிருப்பதைக் காணலாம்.

(முக்கிய கவனிப்பு) இத்தலத்தின் மூலஸ்தானத்திற்குள்ளேயே திருமங்கையாழ்வாரின் பிம்பமும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால்தான் ப்ரபாவத்தில் திருமங்கையாழ்வாருக்குப் ப்ரத்யக்ஷம் என்றிருக்கிறதுபோலும். மற்றெல்லா திவ்யதேசங்களிலும் ஆழ்வார்களுக்கு வெளியில் தனியாக சந்நிதிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இதுவே இச்சந்நிதியின் விசேஷம்.

---

## 13. திருக்குடந்தை (வடகலை சந்நதி) 14.

(கும்பகோணம்.)

மங்களாசாசனம்.

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி
முதற் பத்து 7-ம் திருமொழி 4-ம் பாசுரம்.
2-ம் ,, 6-ம் ,, 2-6-ம் பாசுரங்கள்.
,, 7-ம் ,, 7-ம் பாசுரம்.

ஆண்டாளருளிச் செய்த நாய்ச்சியார் திருமொழி.
முதலாயிரம் 13-ம் திருமொழி 2, 4-ம் பாசுரங்கள்.

திருமழிசையாழ்வாரருளிச் செய்த
திருச்சந்த விருத்தம் 56 முதல் 61 முடியும் பாசுரங்கள்
நான்முகன் திருவந்தாதி 36-ம் பாசுரம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1-ம் பத்து, | | 1-ம் திருமொழி, | | 2 & 7-ம் பாசுரங்கள். | |
| 2 | ,, | 4 | ,, | 1-ம் பாசுரம். | |
| 3 | ,, | 6 | ,, | 5 & 8-ம் பாசுரங்கள். | |
| 5 | ,, | 5 | ,, | 7-ம் பாசுரம். | |
| 6 | ,, | 8 | ,, | 9-ம் | ,, |
| 7 | ,, | 3 | ,, | 3-ம் | ,, |
| 7 | ,, | 6 | ,, | 9-ம் | ,, |
| 8 | ,, | 9 | ,, | 5-ம் | ,, |
| 9 | ,, | 2 | ,, | 2-ம் | ,, |
| 10 | ,, | 1 | ,, | 6-ம் | ,, |
| 10 | ,, | 10 | ,, | 8-ம் | ,, |
| 11 | ,, | 6 | ,, | 9-ம் | ,, |

திருக்குறுந்தாண்டகம் 6, 14-ம் பாசுரங்கள்.
திருநெடுந்தாண்டகம் 17, 19 & 29-ம் ,,

சிறிய திருமடல் 73-ம் பாசுரம்.
பெரிய திருமடல் 114-ம் பாசுரம்.
திருவெழுகூற்றிருக்கை 1

பூதத்தாழ்வாரருளிச் செய்த இரண்டாந் திருவந்தாதி
70, 97-ம் பாசுரங்கள்.

பேயாழ்வாரருளிச் செய்த மூன்றாந் திருவந்தாதி
30, 62-ம் பாசுரங்கள்.

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி
5-ம் பத்து, 8-ம் திருமொழி 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—சாரங்கபாணிப்பெருமாள், ஆராவமுது, கோமளவல்லி, வைதிகவிமானம், ஹேமபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம், உத்யோகசயநம், ஹேமமஹரிஷிக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) திருமழிசையாழ்வார் திருநாட்டிற்கெழுந்தருளிய ஸ்தலம் இதுவே. இவர் அடக்கமான சந்நதி சாரங்கபாணி சந்நதிக்கு மேற்கே சுமார் 3 பர்லாங்கு தூரத்தில் கோமுட்டி வீதியில் ஓர் மூலையிலிருக்கிறது. இது தென்கலையார் வசத்திலிருக்கிறது. இவ்வாழ்வார் திருக்குடந்தைப் பெருமாளை மங்களாசாசனம் செய்கையில் (திருச்சந்த விருத்தம் 61-ம் பாசுரம்)

"கடந்தகால்பரந்தகாவிரிக்கரைக்குடந்தையுள்,
கிடந்தவா றெழுந்திருந்து பேசு, வாழி, கேசனே!"

என்பதில் கிடந்தவாரேழுந்திருக்கும் பெருமாளின் சேவை வெகு ஆனந்தமாயிருக்கும். வேறெந்த சந்நதியிலும் இம்மாதிரி சேவை கிடையாது. இத்தலத்தின் முக்கிய சிறப்பு என்னவென்றால் தென் தேசத்திய சில ஸ்ரீவைஷ்ணவ பிராமணர்கள் சிதம்பரம்

தாலூக்காவிலுள்ள காட்டுமன்னார் கோயிலென்னும் வீர நாராயணபுரம் சென்றபொழுது மன்னனுருகிய வீர நாராயணப் பெருமானை தரிசனம் செய்கையில் ஸ்ரீ சடகோபரென்னும் நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய திருவாய்மொழியின் 5-ம் பத்து 8-ம் திருமொழியின் ஆராவமுதே என்றாரம்பிக்கும் 11 பாசுரங்களையும் திருக்குடந்தையின் ஆராவமுதப்பெருமாளின் விஷயமாய் சேவாகாலம் செய்யும் சமயத்தில் அவ்விடமிருந்த ஸ்ரீமன்நாதனிகள் கேட்டு வெகுவும் பேரானந்தமடைந்தவராய் 11-ம் பாசுரத்தில் சொல்லியிருக்கும் "ஓராயிரத்துளிப்பத்தும்" என்பதைக் கவனித்து ஷை வைஷ்ணவர்களை ஓராயிரத்தின்பாக்கி பாசுரங்களையும் சொல்லும்படி இவரும் மன்றாடிக் கேட்டுக்கொண்டார். அவர்கள் தங்களுக்கு இந்த ஆராவமுதன் விஷயமாயுள்ள இந்த 11 பாசுரங்கள் மாத்திரம் தெரியுமே யொழிய மற்ற பாசுரங்கள் தெரியா வென்று சொன்னதின்பேரில் ஸ்ரீமந்நாதமுனிகள் மற்ற பாசுரங்களை யெல்லாம் தெரிந்துகொள்ள வேண்டுமென்னும் ஆவலுடன் "குருகூர் சடகோப"னுடைய ஸ்தலம் சென்று நாலாயிரம் பாசுரங்களையும் வெளியிட்ட விஷயங்களை ஸ்ரீமந்நாதமுனிகளின் சரித்திரத்திலும் அடியேன் முக்கிய கிரந்தத்தின் முகவுரையிலும் பார்க்கவும். ஆகையால் விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தில் மறைந்திருந்த தமிழ்மறைகளான 4,000 பாசுரங்களும் வெளிவந்ததற்குக் காரணம் இத்தலத்தின் ஆராவமுதன் விஷயமான குருகூர்ச் சடகோபனின் 11 பாசுரங்களேயாகும்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே மீடர்கேஜ் (S. I. Ry.) மெயின் லைனிலுள்ள கும்பகோணமென்னும் ஸ்டேஷன். ஸ்டேஷனிலிருந்து

சந்நதி மேற்கே 1-மைல் தூரத்திலுள்ளது. வண்டிகளுண்டு: சத்திரமும் ஆகார ஹோட்டல்களுமிருக்கின்றன. இது பெரிய ஊர். தாலூக்கா மற்றும் முனிசிபல் பட்டணம். ஊருக்குள் மின்சார விளக்குகளும், சிலவிடங்களில் குடிக்கும் தண்ணீர்க் குழாய்களுமிருக்கின்றன.

இத்தலத்திற்கு தெற்கே நெல் வரப்புகளின் மார்க்கமாய் 2 நதிகளைக்கடந்து 3 மைல் தூரத்தில் நாதன்கோயில் என்னும் நந்திபுரவிண்ணகரமென்னும் 14-வது திவ்யதேசமிருக்கிறது.

(கவனிப்பு) இத்தலத்தில் தங்க வசதிகளிருப்பதால் இவ்விடமே ஸ்தலம் செய்துகொண்டு, இவ்விடமிருந்து தெற்கே 3-மைல் தூரமுள்ள 14-வது திவ்ய தேசமாகிய நாதன்கோயிலென்கிற நந்திபுர விண்ணகரத்தையும், கிழக்கே திருநாகேஸ்வரம் என்னும் ரைல்வே ஸ்டேஷனிலிறங்கி ½ மைல் சென்றால் 16-வதாகிய திருவிண்ணகரேன்னும் உப்பிலியப்பன் சந்நதியையும், தெற்கில் 6 மைல் தூரத்திலுள்ள நாய்ச்சியார் கோயிலென்னும் 17-வதாகிய திருநறையூரையும், அவ்விடமிருந்து தெற்கே 3-மைல் தூரமுள்ள 18-வதாகிய திருச்சேறையையும் சேவிக்கலாம். கும்பகோணத்திலிருந்து திருவாரூர் போகும் மோட்டார் பஸ்வண்டியிலேறிச் சென்றால் 6-வது மைலிலுள்ள திருநறையூரையும் 9-வது மைலிலுள்ள திருச்சேறையையும் அணைக்கரை போகும் பஸ் வண்டியின் மூலியமாய் சென்று 15-வதாகிய திருவெள்ளியங்குடியையும் சேவித்துத் திரும்பலாம்.

---

## 14. நந்திபுரவிண்ணகரம் 21.

(நாதன்கோயிலென்றால்தான் சாதாரண
ஜனங்களுக்குத் தெரியும்.)

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
5-ம் பத்து, 10-ம் திருமொழி, 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—விண்ணகரப் பெருமாள், ஜகந்நாதர், நாதநாதப்பெருமாள், செண்பகவல்லி, மந்தாரவிமானம், நந்திதீர்த்தம், மேற்கேதிருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், நந்திக்கும், சிபி சக்ரவர்த்திக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இந்த க்ஷேத்திரத்திற்கு கிழக்கில் 1½ மைல் தூரத்தில் ஆற்றங் கரையின் தென்பாகத்தில் நந்தி வனமும் அதில் ஒரு சிதலமான விஷ்ணுகோயிலுமிருக்கிறது. ஆகையால்தான் நந்திபுரவிண்ணகரமென்ற பேராயிற்று போலும்.

மார்க்கமும் வசதியும்:—இத்தலத்திற்கு சரியான வண்டிப் பாதை வெகுவும் சுற்றாயிருக்கிறது. சுமார் 7-மைலுக்கு மேலாகும். கால் பாதை சுமார் 3-மைலுக்குள்ளிருக்கிறது. ஆனால் நெல் வரப்புகளின் மார்க்கமாயும், தண்ணீர்க்கால்வாய்களின் வழியாயும் இரண்டு நதிகளைக் கடந்தும் கும்பகோணத்திலிருந்து தெற்கில் சென்றால் இத்தலத்தை 1-மணி நேரத்தில் சாதாரணமாய் நடந்தாலும் சேரலாம். இது வெகு சிறிய கிராமம். சத்திரமில்லை. ஹோட்டல்களில்லை. சந்நதியை சேவித்துக்கொண்டு கும்பகோணம் திரும்புவதே நலம்.

---

## 15. திருவெள்ளியங்குடி 29.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரியதிருமொழி 4-ம் பத்து, 10-ம் திருமொழி 10-பாசுரங்கள்.

ப்ரபாவம்:—கோலவில்லிராமன், மரகதவல்லி நாய்ச்சியார், புஷ்பலாவர்த்தகவிமாநம், சுக்ரபுஷ்கரிணி, ப்ரஹ்மதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், புஜங்க சயநம், சுக்ரனுக்கும், பிரமனுக்கும், பராசருக்கும், இந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இச்சந்நதிக்குப் போகும் வழியில் பெரியவாச்சான்பிள்ளைஸ்வாமிகளின் அவதார ஸ்தலமாகிய சேங்கனூர் அல்லது செங்கநல்லூர் என்னும் கிராமத்தின் மார்க்கமாய்ப் போகவேண்டும். இவ்விடம் இவர் பிறந்தவிடமெனப்படுவது இப்பொழுது அக்கிஹார வீடுகளின் மத்தியில் ஒரு காலி மனையாக விருக்கிறது. இவர் ஐக்கியமான ஸ்தலத்தில் ஓர் ஸ்ரீனிவாச விக்கிரகத்தை ஸ்தாபித்து அவ்விக்கிரகத்தின் திருவடியில் சுவாமிகளின் ஓர் சிறிய விக்கிரகம் வைக்கப்பட்டிருக்கிறது. இந்த சேங்கனூரிலிருந்து (செங்கநல்லூர்) திருவெள்ளியங்குடி தென்திசையில் சுமார் ¾ மைலிலிருக்கிறது. நெல் வரப்புகளையும், நீர்க்கால் வாய்களையும் தாண்டிப்போகவேண்டும். இத்தலத்தின் பெருமாளான கோலவில்லிராமனைச் சேவித்தால் 106 திவ்யதேசங்களைச் சேவித்தாப்போலாகுமென்பர். ஆகையால்தான் இவ்விடத்திய கருடனுக்கு சங்குசக்ர ஹஸ்தங்களிருக்கின்றனபோலும்.

மார்க்கமும் வசதியும்:—(S. I. Ry.) கும்பகோணத்திலிருந்து அணைக்கரை (Lower anicut) போகும் மோட்டார் பஸ் வண்டியிலேறி (நபர் ஒன்றுக்கு சார்ஜு ரூ. 0-5-0), 9 மைல் தூரம் சென்றால் சேங்கனூர் போகும் பிரிவு பாதையில் இறங்கி அவ்விடமிருந்து மண் பாதை வழியாய் வலது பக்கம் சுமார் 1 மைல் சென்றால் சேங்கனூர் சேரலாம். அவ்விடமிருந்து மற்றும் $\frac{3}{4}$ மைல் தெற்கில் சென்றால் இத்தலத்தை யடையலாம். அல்லது 7-வது மைலில் சோளபுரம் என்னும் கிராமத்திலிறங்கி மாட்டுவண்டு அமர்த்திக்கொண்டு இத்தலத்திற்கு வரலாம். சத்திரமும் ஹோட்டல்களுமில்லை.

---

## 16. திருவிண்ணகர் 16.
## (உப்பிலியப்பன் சந்நதி)

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
6-ம் பத்து, 1-ம் திருமொழி, 10 பாசுரங்கள்.
„ 2 „ 10 „
„ 3 „ 10 „
10 „ 1 „ 8-ம் பாசுரம்.
திருநெடுந்தாண்டகம் 29-ம் பாசுரம்,
சிறிய திருமடல் 72-ம் பாசுரம்.

பொய்கையாழ்வாரருளிச் செய்த முதற்றிருவந்தாதி
77-ம் பாசுரம்.

பேயாழ்வாரருளிச் செய்த மூன்முந்திருவந்தாதி
61, 62-ம் பாசுரங்கள்.

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி
6-ம் பத்து, 3-ம் திருமொழி 11 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—உப்பிலியப்பன், பூமிதேவி நாய்ச்சியார், விஷ்ணு விமானம், ஆர்த்திபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், மார்க்கண்டேயருக்கும், பெரிய திருவடிக்கும், காவேரிக்கும், தர்மதேவதைக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இத்தலத்துப் பெருமாளுக்கு உப்பில்லாத பிரசாதங்களே தினமும் வினியோகமாகின்றன. இதைக் குறித்து ஒரு சிறு கதையுண்டு. இத்தலத்தின் பெயர் துளசீவன மென்றும் சொல்லப்படுகிறது. இவ்வனத்தில் மார்க்கண்டேயமுனிவர் தவம் புரிந்துகொண்டிருந்ததின் பயனுக லக்ஷ்மி தேவியைப் புதல்வியாகப் பெற்று வளர்த்து வருகையில் விஷ்ணு தன்

ரூபம் மாறி ஷ்டி கன்னிகையை தனக்கு விவாகம் செய்து கொடுக்க வேண்டுமென்று முனிவரைக் கேட்க, முனிவர் தன் புதல்வி சிறு பெண்ணுகையால் சமையல் பாகத்தில் உப்பிடத்தவறும்பக்ஷத்தில் அவளுக்கு பர்த்தாவிஞல் தொந்திரையுண்டாகிவிடுமென, பெருமாள் தன் நிஜரூபத்தோடு தோன்றி தான் உப்பில்லாமல் சாப்பிடத்தயாரென்றும், யாரும் தன் சந்நதிக்குள் உப்பைக் கொண்டுவரக் கூடாதென அருளிச்செய்ததி ஞிமித்தம், இச்சந்நதியில் எப்பதார்த்தத்திற்கும் உப்பை உபயோகப்படுத்துகிறதில்லே.

சாமானியமாய் ஜனங்கள் மூலஸ்தானப்பெருமாளே வேங்கடாசலபதி யென்றும், உற்சவரை ஸ்ரீநிவாச ரென்றும் வழங்குகிஞர்கள். ஆகையால் இது தஞ்சாவூர் ஜில்லாவுக்கு திருவேங்கிடமென்னும் வட திருப்பதிபோல் விளங்குகிறது. இத்தலத்திற்கு பிரார்த்தனே செலுத்த நூற்றுக்கணக்கான ஜனங்கள் எப்பொழுதும் வந்துகொண்டிருக்கிஞர்கள். சித்தூர் ஜில்லாவிலுள்ள பெரிய திருப்பதியாகிய திருவேங்கிடத்திற்கு பிரார்த்தனே செலுத்துபவர்கள் அவ்விடம் போக அனுகூலப்படாமல் போஞல் இத்தலத்தின் சுற்றிலுமுள்ள ஜனங்கள் பிரார்த்தனே முடிப்புகளே இச்சந்நதிக்கே கொண்டுவந்து அனேகர் செலுத்துகிஞர்கள்.

**மார்க்கமும் வசதியும்:**—தென் இந்தியா ரைல்வே (S. I. Ry.) மீடர்கேஜ் லேனிலுள்ள கும்பகோணத்திற்கு அடுத்த திருநாகேஸ்வரம் என்னும் ஸ்டேஷனிலிறங்கி 1 மைல் சென்ருல் இத்தலத்தை யடையலாம். கடைகளுண்டு. ஆகார ஹோட்டல்களுமுண்டு. ஸ்டேஷனிலிருந்தும் மாட்டு வண்டிகள் கிடைக்கும். நெல் வரப்பு வழியாய் நடந்து சென்ருல் சந்நதி $\frac{3}{4}$ மைல் தூரமிருக்கிறது.

---

## 17. திருநறையூர் 20.

(நாய்ச்சியார் கோயிலென்றால்தான் சாமானியமாய்த் தெரியும்.)

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2-ம் பத்து, | 4-ம் | திருமொழி, | 1-ம் | பாசுரம். | |
| 6 | ,, | 3 | ,, | 3 | ,, |
| | ,, | 4 | ,, | 10 | பாசுரங்கள். |
| | ,, | 5 | ,, | 10 | ,, |
| | ,, | 6 | ,, | 10 | ,, |
| | ,, | 7 | ,, | 10 | ,, |
| | ,, | 8 | ,, | 10 | ,, |
| | ,, | 9 | ,, | 10 | ,, |
| | ,, | 10 | ,, | 10 | ,, |
| 7 | ,, | 1 | ,, | 1 & 10-ம் | ,, |
| | ,, | 2 | ,, | 10 | ,, |
| | ,, | 3 | ,, | 1, 10-ம் பாசுரங்கள். | |
| | ,, | 7 | ,, | 4-ம் பாசுரம் | |
| 10 | ,, | 1 | ,, | 5-ம் பாசுரம் | |

பெரிய திருமடல் 73 & 133-ம் பாசுரங்கள்.

திருநெடுந்தாண்டகம் 16 & 17-ம் பாசுரங்கள்.

சிறிய திருமடல் 71-ம் பாசுரம்.

**ப்ரபாவம்:**—நம்பி, நம்பிக்கை நாய்ச்சியார், ஸ்ரீநிவாஸ விமாநம், மணிமுக்தாநதி, கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், மேதவமுனிக்கு அருள் செய்தவர்.

(குறிப்பு) இத்தலம் சுகந்தகிரி யென்று சொல்லப்படுகிறது. சுகந்தம் என்றால் தமிழில் நறை யெனப்

படும். ஆகையால் தமிழில் நறையூர் என்றாயிற்று. இவ்விடத்தில் ப்ரபாவத்தில் கண்டிருக்கும் நதி இப்பொழுது காண்கிறதில்லை. சந்நதிக்கு வடவண்டையிருக்கும் குளத்திற்கே மணிமுக்தாநதி யென்று பெயர். இத்தலத்தின் நம்பி நாதர் யென்னும் பெருமாளுக்கு நான்கு ஹஸ்தங்களின்றி இரண்டே ஹஸ்தங்களிருப்பதைக் கவனிக்கத்தக்கது. இவரே கலியனென்கிற திருமங்கையாழ்வாருக்கு பஞ்ச செளஸ்காரம் செய்த ஆசார்யனுதல்பற்றி இவர்மீது கலியன் 101 பாசுரங்களை திருவாய் மொழிந் தருளியிருக்கிறார். இத்தலத்தில் ஓர் கற்சிலா கருடனிருக்கிறது. மற்றெந்த திவ்யதேசத்திலுமிவ்வாறில்லை. இது பார்வைக்கு வெகுவும் அழகாயிருக்கிறது. இது மூலஸ்தானத்தின் பக்கல் ஓர் அறையிலிடப்பட்டிருக்கிறது. இதை உற்சவ காலத்தில் வாகன ரூபமாய்ச்செய்து திருவீதி பிரகாரம் கொண்டு வரப்படுகிறது.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே (S. I. Ry ) கும்பகோணம் ஸ்டேஷனிலிறங்கி திருவாரூர் செல்லும் மோட்டார் வண்டியின் மூலியமாய் 6 மைலிலுள்ள நாய்ச்சியார்கோயிலென்னும் ஊரில் வழியின்மீதிருக்கும் சந்நதி. இவ்விடம் சத்திரமுண்டு. அனேக ஆகார ஹோட்டல்களுண்டு. இது பெரிய ஊர். பித்தளைப் பாத்திர வியாபாரம் அதிகம். சரியான ஜல வசதி யில்லை. வீதிகளில் குழாய்க் கிணறுகளிருக்கின்றன.

---

## 28. திருச்சேறை (ஸார க்ஷேத்திரம்) 12.

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
7-ம் பத்து 4-ம் திருமொழி 10 பாசுரங்கள்
10 ,, 1 ,, 6-ம் பாசுரம்
சிறிய திருமடல் 72-ம் பாசுரம்
பெரிய திருமடல் 115-ம் பாசுரம்

ப்ரபாவம்:—ஸாரநாதன், ஸாரநாயகி, ஸாரவிமானம், ஸாரபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், காவேரிக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இதை 'பஞ்ச ஸார க்ஷேத்திர'மென்பர். ஸ்தலம், பெருமாள், தாயார், விமானம், புஷ்கரிணி, இவைகளுக்கு "ஸார" என்ற அடைமொழி முதலில் வருவதால் இப்பெயர். இத்தலத்தில் 5 நாய்ச்சியார்களிருக்கிறார்கள். ஸாரபுஷ்கரிணியின் தென்னண்டை மூலையில் ஒரு சிறு கோயிலில் காவேரியம்மன் என்னும் ஓர் விக்கிரகமிருக்கிறது. இக்காவேரிக்கே பெருமாள் ப்ரத்யக்ஷமென்பர்.

மார்க்கமும் வசதியும்:—(S. I. Rly.) கும்பகோணத்திலிருந்து திருவாரூர் போகும் மோட்டார் வண்டியிலேறி 9 மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம். நாய்ச்சியார்கோயிலிலிருந்து தெற்கில் 3 மைல் தூரத்திலிருக்கிறது. அவ்விடமிருந்தும் வண்டிகள் கிடைக்கின்றன. சத்திரமும் ஹோட்டலுமுண்டு.

---

## 19 திருக்கண்ணமங்கை 27

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
7-ம் பத்து 10-ம் திருமொழி 10 பாசுரங்கள்
10 „ 1-ம் „ 1-ம் பாசுரம்

ப்ரபாவம்:—பக்தவத்ஸலப் பெருமாள், அபிஷேக வல்லித்தாயார், உத்பலவிமானம், தர்ஸநபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், வருணனுக்கும் உரோமசனுக்கும் ப்ரத்யக்ஷம்.

இத்தலத்தின் தாயார் சந்நதியில் ஓர் தேன்கூடிருக்கிறது. இதற்கும் தினமும் பூஜை நடக்கிறது.

மார்க்கமும் வசதியும்:—(S. I. Rly.) கும்பகோணத்திலிருந்து திருவாரூர் போகும் மோட்டார் வண்டியிலேறினல் திருவாரூருக்கு 4 மைலுக்கு இப்பாலேயே இறங்கினல் இத்தலமகப்படுகிறது. அல்லது தென் இந்தியா ரைல்வே திருவாரூர் ஸ்டேஷனிலிறங்கி கும்பகோணம் போகும் மோட்டார் வண்டியிலேறி 4 மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம். மாட்டு குதிரை வண்டிகளும் கிடைக்கும். சத்திரமில்லே. ஆகார ஹோட்டல்களுண்டு.

---

## 20 திருக்கண்ணங்குடி 26

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
9-ம் பத்து 1-ம் திருமொழி 10 பாசுரங்கள்

ப்ரபாவம்:—ஷ்யாமளமேனிப்பெருமாள், அரவிந்தவல்லி நாய்ச்சியார், உத்பலவிமாநம், ராவண புஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், ப்ருகுசைத்யருக்கும் கௌதம முனிக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இச்சந்நதியின் கற்பக்கிரகத்தின் பின் ஒரு வகுள விருக்ஷமிருக்கிறது. இதனடியில் ரிஷிகள் தபஸ் செய்துகொண்டிருந்ததாக ஐதிகம். இதற்கு கிருஷ்ணாரண்யக்ஷேத்திரமென்றும் பெயர். மூலவரின் பெயர் லோகநாதன், நாய்ச்சியார் லோக நாயகி, உத்ஸவரின் பெயர் தாமோதர நாராயணர் என்று சாமானியமாய் இவ்விடம் வழங்குகிறார்கள்.

இவ்விடம் உறங்காப்புளி, ஊறாக்கிணர், காயா வகுளம், தோராவழக்கு, திருக்கண்ணங்குடி என்றொரு பழமொழியுண்டு. உறங்காப்புளி யென்றால் இரவில் மூடாத இலைகளையுடைய புளியமரம். இப்பொழுது இம்மரம் பட்டுப்போயிருப்பதால் காண்கிறதில்லை. வகுளவிருக்ஷம் புஷ்பம் காய்களை விட்டாலும் அதன் விரையை நட்டால் காய்க்கிறதில்லையாம். இதுவே காயாவகுளம்.

திருமங்கை மன்னன் திருநாகையினின்றும் ஓர் பொற் பிரதிமையை கொண்டுவந்து இத்தலத்தின் ஓர் வயலில் புதைத்து வைத்து பகல் முழுதும் அவ்வயலின் சொந்தக்காரனோடு வழக்காடியதினால் தோரா

வழக்கு கண்ணங்குடி யென்றும், தலையாரியான ஒருவனது விருப்பத்தின் பிரகாரம் திருமங்கை மன்னன் எறிந்த கல் விழுந்த இடத்தில் உண்டான நல்ல தீர்த் தக்குளத்திலன்றி வேறெங்கும் நல்லநீர் கிடைக்க வில்லையாதலால் ஊருக்கிணர் என்றும் பழமொழி ஏற்பட்டதென்பர்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே (S I. Ry) கிளை லைனாகிய திருவாரூர்-நாகப்பட்டணம் போகும் லைனில் கீவளூர் என்னும் ஸ்டேஷனிலிறங்கி ரைல் பாதையின் வடபுறத்தில் கிழக்கில் செல்லும் கற்சாலை மார்க்கமாய் 1 மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம். ஸ்டேஷனில் வண்டிகள் கிடைக்கும். திருவாரூரிலிருந்து நாகப்பட்டணம் போகும் மோட் டார் வண்டியிலேறி கீவளூர் தாண்டினதும் ஆழியூர் என்னும் கிராமத்திலிறங்கி தெற்கே ¾ மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம். இவ்வூரில் சத்திரமில்லை. சிறிய கிராமம். ஆகார ஹோட்டலில்லை. பெரிய கடைகளுமில்லை. நாகப்பட்டணத்திலிருந்து திருவா ரூர் போகும் மோட்டாரிலேறி 5 மைல் சென்றதும் ஆழியூர் என்னும் கிராமத்திலிறங்கி இத்தலமடைய வேண்டும்.

———

## 21. திருநாகை (நாகப்பட்டணம்) 19.

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி 9-ம் பத்து 2-ம் திருமொழி 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—ஸௌந்தர்யராஜர், ஸௌந்தர்யவல்லி, ஸௌந்தர்யவிமாநம், ஸாரபுஷ்கரிணி, கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், நாகராஜனுக்கும் திருமங்கையாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே (S. I. Rly.) தஞ்சாவூர் கிளை லைனிலுள்ள நாகப்பட்டணம் என்னும் ரைல்வே ஸ்டேஷனிலிறங்கி ஊருக்குள் மேற்கில் 1 மைல் தூரம் சென்றால் இச்சந்நிதியை யடையலாம். இது பெரிய ஊராதலின் சத்திரமும் ஆகார ஹோட்டல்களுமிருக்கின்றன. குடிக்கும் தண்ணீர்க் குழாய்களும் ஊரிலிருக்கின்றன.

(குறிப்பு) திருமங்கையாழ்வார் இவ்விடம் கோயில் விமாநத்துக்குள்ளே ஒருவருக்கும் தெரியாதெ மறையாயிருந்த ஸ்வர்ண புத்த விக்ரஹத்தை அபகரித்துக் கொண்டு திருக்கண்ணங்குடி மார்க்கமாய் ஸ்ரீரங்கம் சென்று அவ்விக்ரகத்தின் பொன்னைக்கொண்டு திருமதிள் கைங்கரியம் செய்ததாக குருபரம்பரா ப்ரபாவத்தில் காணலாம்.

---

## 22. திருக்கண்ணபுரம் 17.

மங்களாசாசனம்.

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி
1-ம் பத்து 6-ம் திருமொழி 8-ம் பாசுரம்

ஆண்டாளருளிச் செய்த நாய்ச்சியார் திருமொழி
முதலாயிரம் 4-ம் திருமொழி 2-ம் பாசுரம்

குலசேகராழ்வாரருளிச் செய்த பெருமாள் திருமொழி
முதலாயிரம் 8-ம் திருமொழி 11 பாசுரங்கள்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி

| | | | | |
|---|---|---|---|---|
| 8-ம் பத்து | 1-ம் | திருமொழி | 10 | பாசுரங்கள் |
| ,, | 2 | ,, | 10 | ,, |
| ,, | 3 | ,, | 10 | ,, |
| ,, | 4 | ,, | 10 | ,, |
| ,, | 5 | ,, | 9-ம் | பாசுரம் |
| ,, | 6 | ,, | 10 | பாசுரங்கள் |
| ,, | 7 | ,, | 10 | ,, |
| ,, | 8 | ,, | 10 | ,, |
| ,, | 9 | ,, | 3, 9, 10 | ,, |
| ,, | 10 | ,, | 10 | ,, |

திருநெடுந்தாண்டகம் 16, 27-ம் பாசுரங்கள்
சிறிய திருமடல் 72-ம் பாசுரம்
பெரிய திருமடல் 90, 133-ம் பாசுரங்கள்

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி
9-ம் பத்து 10-ம் திருமொழி 10 பாசுரங்கள்

ப்ரபாவம்:—சௌரிராஜர், கண்ணபுரிநாயகி, உற்பலாவர்த்தக விமாநம், நித்ய புஷ்கரிணி, கிழக்கே திரு

முகமண்டலம், நின்றதிருக்கோலம், கண்வமாமுனிக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இவ்விடம் ஜலவசதி கிடையாது. சந்நதியின் எதிரிலிருக்கும் குளத்தின் ஜலத்தைத்தான் ஊரின் ஜனங்கள் குடிக்கிறார்கள். அதிலேயே ஸ்நானமும் செய்கிறார்கள். சந்நதிக்குள்ளிருக்கும் இறை கிணற்றின் ஜலம் வெகு சுத்தமாயிருக்கிறது. ஆனால் பிராமணரல்லாதாரை அதில் ஜலம் எடுக்க சந்நதியார் விடமாட்டார்கள். இது வெகுவும் சிறிய கிராமம். கடைகளுண்டு.

இவ்விடமிருந்து $1\frac{1}{2}$ மைல் கிழக்கில் சென்றால் திருச்சங்காட்டூர் என்னும் பிரபல சிவஸ்தலமிருக்கிறது. இதுவே சிறுத்தொண்டர் சரிதையில் கண்ட ஸ்தலம். காடவர்கோன் மஹாராஜாவின் தலைமையில் வேலை செய்துகொண்டிருந்த சிறுத்தொண்டனென்னும் சிவ பக்தன் இருந்த ஊர். இவர் குமாரன் சீராளன். இவர் பாரியைகள் சந்திரநங்கையும், வெங்காட்டு நங்கை யென்பவர்கள். இவ்வூர் சிவாலயத்தினுள் சிவ பெருமான் அமர்ந்திருந்த ஆத்திமர மின்றுமிருக்கிற தென்கிறார்கள். இது ஓர் பழைய மரமாயிருக்கிறது. சிறுத்தொண்டன் சீராளனைக் கறியாக சமைத்து சிவ பெருமானுக்குப் புசிக்கப்படைத்த ஸ்தலமென்னு மிடத்தில் இப்பொழுது சிறுத்தொண்டர் கோயிலிருக் கிறது.

**மார்க்கமும் வசதியும்:**—தென் இந்தியா ரைல்வே யின் (S. I. Ry.) மீட்டர் கேஜ் மாயவரம், திருவாரூர் கிளை லைனிலுள்ள நன்னிலமென்னும் ஸ்டேஷனி லிறங்கி நாகூர் போகும் மோட்டார் வண்டியிலேறி

கிழக்கே 3¾ மைல் தூரமுள்ள திருப்புகலூர் என்னும் ஊரிலிறங்கி தெற்கில் கட்டுப்பாலம் வழியாய் ஆற்றைத் தாண்டி 1 மைல் தூரம் சென்றால் இத்தலத்தை யடையலாம். திருப்புகலூரிலிருந்து குதிரை மாட்டு வண்டிகளும் கிடைக்கும். மற்றும் நாகூரிலிருந்து நன்னிலம் போகும் மோட்டார் வண்டியிலேறி 11 மைல் மேற்கில் வந்தால் திருப்புகலூரை யடையலாம். திருப் புகலூரிலிருந்து நன்னிலம் ரைல்வே ஸ்டேஷனுக்கு குதிரை, மாட்டு வண்டிகள் கிடைக்கின்றன. இந்த ஊரில் ஓர் இராமாநுஜகூட மிருக்கிறது. சிறு கடைக ளுண்டு-ஆகார ஹோட்டல்களில்லை. இராமாநுஜகூட மும் சிறியதே. இதைவிட்டால் வேறே சத்திரங்க ளில்லை. வீடுகளில் கொடைக்கூலிக்கு உற்சவ காலங் களில் இடம் அமர்த்திக் கொள்ளலாம்.

---

## 23. சிறுபுலியூர் 11.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
7-ம் பத்து, 9-ம் திருமொழி 10 பாசுரங்கள்

ப்ரபாவம்:—அருமாகடல், திருமாமகள் நாய்ச்சியார், நந்தவர்த்தநவிமாநம், அநந்தஸரஸ்ஸு, மாநஸ புஷ்கரிணி, தெற்கே திருமுகமண்டலம், புஜங்க சயநம், வியாஸ மஹாமுனிக்கும் வியாக்ரமருக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இத்தலத்தின் மூலவரின் பெயர்—அருமாகடல் அமுதன், திருமாமகள் நாய்ச்சியார்.

உற்சவரின் பெயர்:—கிருபாசமுத்திரப்பெருமாள் தயாநாயகி, என்று இவ்விடம் வழங்குகிறார்கள்.

இந்த சந்நதி வெகுவும் சிதலமடைந்திருந்ததால் இதன் டிரஸ்டிகள் வெகுவும் புத்திசாலித்தனமாய் கோயிலின் உற்சவங்களை யெல்லாம் சிறப்பாய் நடத்தாமல் தேவஸ்தானத்தின் பணத்திலிருந்து சுமார் ரூ. 20,000த்திற்கு மேல்பட்டு இதுவரையிலும் சிலவு செய்து கோயிலின் கட்டிடத்தை வெகுவாய்ப் புதுப்பித்திருக்கிறார்கள். சீக்கிரத்தில் கோயில்பணிகள் முடிந்துவிடலாம். இப்பொழுது சந்நதி பார்க்கப் புதிதாய்க்காண்கிறது. சந்நதியின்முன் கோபுரவாசலின் வலதுபுறம் கோயிலைச் சேர்ந்த ஒரு பங்களாவைப்போன்ற கூடமிருக்கிறது. இதில் யாத்ரீகர்கள் தங்கலாம். இதைவிட வேறே சத்திரங்கள் இவ்விடம் கிடையாது. இவ்வூரில் சிறு கடைகளிருக்கின்றன.



இந்தளூர் (சுகந்தவனம்-பரிமளரங்கர் சந்நதி)

**Indalur Temple**

சாப்பாட்டு சாமான்கள் கிடைக்கும். ஆகார ஹோட்டல்கள் கிடையாது. வெகு சிறிய கிராமம்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வேயின் (S. I. Rly.) மீடர்கேஜ் மாயவரம், திருவாரூர் கிளை லைனிலுள்ள கொல்லுமாங்குடி என்னும் ரைல்வே ஸ்டேஷனிலிறங்கி கிழக்கில் வரப்பு மார்க்கமாய் 1 மைலிலிருக்கும் ஸ்தலம். வண்டி மார்க்கம் 3 மைலிருக்கிறது. ஸ்டேஷனில் கட்டைவண்டிகள் சுலப வாடகைக்குக் கிடைக்கும். ஸ்டேஷனருகில் ஒரு பிராமணாள் ஆகாரக் கடை யிருக்கிறது.

---

## 24. இந்தளூர் (மாயவரம் ஸ்டேஷன்) 22.

மங்களாசாஸனம்:

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
4-ம் பத்து 9-ம் திருமொழி 10 பாசுரங்கள்
பெரிய திருமடல் 126-ம் பாசுரம்

ப்ரபாவம்:—சுகந்தவநநாதன், மருவினியமைந்தன், புண்டரீகவல்லி, சந்திரசாபவிமோசநவல்லி, வேதசக்ரவிமாநம், இந்துபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம், வீரசயநம், சந்திரனுக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இத்தலத்திற்கு சுகந்தவன மென்றும் பெயருண்டு. இவ்விடம் சந்திரனின் சாபவிமோசன மாயிற்றென்று சொல்லுவதால் நாய்ச்சியாரின் பெயர் சந்திரசாபவிமோசநவல்லி யென்று பெயரானதுபோல் காண்கிறது. இத்தலத்தின் மூலவரை சகஜமாய் ஜனங்கள் பரிமள ரங்கநாத ஸ்வாமி யென்பர். இவ்வூ

ரையே அந்த்யரங்க மென்கிறார்கள். ஆதிரங்கமென்பது ஸ்ரீரங்கமேன்றும், மத்யரங்கமென்பது திருக்குடந்தை யின் (கும்பகோணத்தின்) ஆராவமுதனென்றும் அந்த்யரங்கம் இந்த ஊரின் பரிமளரங்கனென்றும் சொல்லுகிறார்கள். பூதத்தாழ்வார் இரண்டாந் திருவந்தாதி 70-ம் பாசுரத்தில் ஸ்ரீரங்கத்தைத் தலையரங்க மென்கிறார். மற்றும் மேல்நாட்டில் சிலர் ஆதிரங்க மென்பது மைசூர் பக்கத்திலுள்ள ஸ்ரீரங்கப்பட்டணத் தின் இரங்கநாதரென்றும், மத்யரங்கமென்பது சிவ சமுத்திரமென்னும் ஜமீன் கிராமத்திலுள்ள இரங்க நாதரென்றும், அந்த்யரங்கமென்பது ஸ்ரீரங்கமென்றும் சொல்லுகிறார்கள். பூதத்தாழ்வாரின் மங்களாசாசனமா கிய தலையரங்கமே ஆதிரங்கமெனக் கொளல் வேண்டும்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே மீடர்கேஜ் (S. I. Rly.) மெயின் லைனிலுள்ள மாயவரம் ஜங்ஷன் ஸ்டேஷனிலிறங்கினால் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்காய் 3 மைல் சென்றால் காவேரி நதியைக் கடந்ததும் இச்சந்நதியைக்காணலாம். இது மாயவரம் முனிசிபல் டவுனுக்குள்ளேயே வடகோடியிலிருக்கும் ஸ்தலம். துலாகாவேரி ஸ்நாந கட்டத்திலிருந்து ½ மைல் தூரம்தான். ஸ்டேஷனிலிருந்து குதிரை மாட்டு வண்டிகள் கிடைக்கின்றன. ஊருக்குள் சத்திர முண்டு. ஆகார ஹோட்டல்கள் வெகுவாயிருக்கின் றன. இது ஒரு முனிசிபல் பட்டணம். மற்றும் யாத்ரா ஸ்தலம். சந்நதி காவேரியின் வடபுறத்தி லிருக்கிறது.

---



திருவழுந்தூர் சந்நதி (தேரழுந்தூர்)    **Thiruvazundur**

## 25. திருவழுந்தூர் 10.

(தேரழுந்தூரென சாமானியமாய்ச்சொல்லப்படுகிறது)

(வடகலை சந்நதி)

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
7-ம் பத்து, 5-ம் திருமொழி, 10 பாசுரங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | ,, | 6 | ,, | 10 | ,, |
| | ,, | 7 | ,, | 10 | ,, |
| | ,, | 8 | ,, | 10 | ,, |
| 10 | ,, | 1 | ,, | 7-ம் பாசுரம் | |

திருநெடுந்தாண்டகம் 15, 26-ம் பாசுரங்கள்.

சிறிய திருமடல் 72-ம் பாசுரம்.

பெரிய திருமடல் 123-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—ஆமருவியப்பன், செங்கமலவல்லித் தாயார், கருடவிமாநம், தர்ஸநபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், உபரிசரவஸு ராஜாவுக்கும், காவேரிக்கும் தர்மதேவதைக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) உபரிசரவஸு என்னும் அரசனின் ஆகாயத் தேர் முனிவர்களின் சாபத்தால் இவ்விடம் விழுந்து சந்நதியின் முன்னிருக்கும் குளத்தில் அழுந்தி மூழ்கிப்போனதினால் 'தேர் அழுந்தூர்' என பெராயிற்றென்பர். இச்சந்நதியின் மூலஸ்தானத்திற்குள் பெருமாளின் இடதுபுறம் கருடன் நின்றிருப்பது காணத்தக்கது.

சந்நதிக்கு தென்புறமாய் 1 பர்லாங்கு தூரத்தில் ஒரு மேடான காலி நிவேசனமிருக்கிறது. இதையே

'கம்பன் மேடு' என்கிறார்கள். கவிப்புலவரான கம்பரென்னும் கம்பநாட்டாழ்வார் இவ்வூரில் பிறந்ததாகவும் இப்பொழுது மேடாயிருக்குமிடத்தில் அவர் வீடிருந்ததாகவும் சொல்லுகிறார்கள்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே மீடர்கேஜ் (S. I. Rly.) மெயின் லைன் மாயவரம் ஜங்ஷனிலிறங்கி இவ்விடமிருந்து கும்பகோணம் போகும் மோட்டார் வண்டியிலேறி 5 மைல் தூரம் சென்று க்ஷேத்ரபாலபுரமென்னும் ஊரிலிருந்து சிவனுக்குப் பிரியும் சந்திப்பாதையண்டை யிறங்கி அதே பிரிவு பாதையில் தெற்கே 2 மைல் தூரம் சென்றால் இத்தலத்தை யடையலாம். க்ஷேத்ரபாலபுரத்திலிருந்து இந்த ஸ்தலத்திற்குப் போக கட்டை வண்டிகள் சுலப வாடகைக்குக் கிடைக்கும். அல்லது மாயவரம் ஜங்ஷனுக்கு மேற்கேயுள்ள குற்றாலம் ஸ்டேஷனிலிறங்கினாலும் அவ்விடமிருந்து கிழக்கே 1 மைல் க்ஷேத்ரபாலபுரம் வந்து இச்சந்நதிக்குப் போகவேண்டும். மல்லியம் என்னும் ரைல்வே ஸ்டேஷனிலிறங்கினாலும் 1 மைல் மேற்கே க்ஷேத்ரபாலபுரம் வந்தே போகவேண்டும். இவ்வூரில் ஆகாரக் கடைகளுண்டு. சத்திரமில்லை.

---

# 26. தலைச்சங்கநாண்மதியம் (தலைச்சங்காடு) 13.

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரிய திருமடல் 132-ம் பாசுரம்.

ப்ரபாவம் —நாண்மதியப்பெருமாள், வெண்சுடர்ப்பெருமாள், தலைச்சங்கநாய்ச்சியார், செங்கமலவல்லி, சந்திரவிமாநம், சந்திரபுஷ்கரிணி. கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், தேவப்ருந்தங்களுக்கும், சந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) அடியேன் சேவித்த 105 திவ்யதேசங்களில் காஞ்சீபுரத்திலிருக்கும் 47-வது திவ்யதேசமாகிய வேளுக்கை யென்னும் திவ்யதேசத்தில் சந்நதியே கிடையாது. மூலவர்மாத்திரம் வெட்டார வெளியில் ஓர் குளத்தின் மத்தியில் தண்ணீரில் நிற்கிறார். தாயார், விமாநம் முதலானவைகள் கிடையாது. அதற்கு அடுத்தாப்போல் இச்சந்நதி வெகுவும் ஜீர்ணஸ்திதியிலிருக்கிறது. மூலவருக்கு மாத்திரமுள்ள கற்பக்கிரகமும் அதன்முன்மண்டபமுமிருக்கிறது. மற்ற கட்டிடங்களெல்லாம் பாழாய்க்கிடக்கின்றன. இது ஊருக்கு மேல்புறமாய் வயல்களின் மத்தியில் ½ மைல் தூரத்திலிருக்கும் சந்நதி. கோயில் அர்ச்சகர் பகல் பொழுதில் எப்பொழுதும் சந்நதியிலேயே இருந்து கொண்டிருக்கிறார். சந்நதிக்கு வரும்படி வெகுவும் குறைவு. சந்நதிக்குச்சேர்ந்த பூர்வ மாணியகிராமங்கள் மற்றும் ஜமீன்களை யெல்லாம் குடிகள் அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். சந்நதிக்கு அவர்கள் மாசூல்

ஒன்றும் கொடுக்கிறதில்லை. இச்சந்நிதி கும்பகோணத்தின் ஆராவமுதனென்கிற சாரங்கபாணிப் பெருமாள் சந்நிதியின் டிரஸ்டிகளின் மேல்பார்வையிலிருந்தாலும் அவர்கள் இச்சந்நிதி தாரித்திரஸ்திதியிலிருப்பதால் இதைக் கவனிப்பதாகக் காண்கிறதில்லை. இவ்வூரின் கிராம பஞ்சாயத்தார் கவனிப்பிலிருப்பதால் தினமும் பூஜையாகிலும் சுலபமாய் நடக்கிறது.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே (S. I. Rly.) மாயவரம்-தரங்கம்பாடி கிளை லைனிலுள்ள செம்பனார்கோயில் என்னும் ரைல்வே ஸ்டேஷனிலிறங்கி ஒரு மாட்டுவண்டியை அமர்த்திக்கொண்டால் (சார்ஜு 0-6-0) இத்தலத்தை யடையலாம். சுமார் 4 மைல் தூரம். பக்கத்திலுள்ள ஆக்கூர் ஸ்டேஷனிலிறங்கினால் வடக்கே 2 மைல் தூரமிருக்கிறது. அவ்விடமிருந்து வண்டிகள் கிடைப்பது நிச்சயமில்லை. செம்பனார்கோயில் ஸ்டேஷனில் ஒரு வண்டியை யமர்த்திக்கொண்டால் இச்சந்நிதியைத் தரிசினம் செய்துகொண்டு அப்படியே காவிரிப்பூம்பட்டினமென்னும் காவேரி நதியின் சங்குமுகத்திலும் ஸ்நானம் செய்து அன்றே ஸ்டேஷனுக்குத் திரும்பிவிடலாம். இவ்வூரில் சத்திரமில்லை, பெரிய கடைகளுமில்லை. ஆகையால் தங்கும் வசதி கிடையாது. ஆகார ஹோட்டல்களுமில்லை.

---



காழிச்சீராம விண்ணகரம் (தாடாளன் சந்நதி-சீர்காழி)
**Thadalam Temple-Shiyali**

## 27. காழிச்சீராமவிண்ணகரம் (சீர்காழி) 24.

(தாடாளன் சந்நதி யென்றும் பெயர்)

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரிய திருமொழி 3-ம் பத்து, 4-ம் திருமொழி, 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—தாடாளன், திருவிக்கிரமமூர்த்தி, மட்டவிழுங்குழலி, புஷ்கலாவர்த்தகவிமாநம், சக்ர தீர்த்தம், சங்குபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம் நின்ற திருக்கோலம், அஷ்டகோண மகரிஷிக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே (S. I. Rly.) மீடர்கேஜ் மெயின் லைனிலுள்ள சீயாழி (சீர்காழி) ஸ்டேஷனிலிறங்கவேண்டும். ஸ்டேஷனிலிருந்து சந்நதி சுமார் ½ மைல் தூரத்திலிருக்கிறது. இது பெரிய வூராகையால் அநேக ஆகார ஹோட்டல்களிருக்கின்றன. சத்திரங்களுமுண்டு. சந்நதியின் முன்புரத்தில் சந்நதி வீதியில் ஓர் புதிய அநுகூலமான சத்திரமுண்டு, கடைவீதிக்குச் சமீபம்.

## 28. திருவாலி 18.

(இதையே திருவாலி திருநகரி யெனப்படும்)

**மங்களாசாசனம்.**

திருமங்கையாழ்வாருளிச் செய்த பெரிய திருமொழி

| | | | | |
|---|---|---|---|---|
| 2-ம் பத்து, | 4-ம் | திருமொழி, | 1-ம் பாசுரம். |
| 3 | ,, | 5 | ,, | 10 பாசுரங்கள். |
| ,, | ,, | 6 | ,, | 10 ,, |
| ,, | ,, | 7 | ,, | 10 ,, |
| 7 | ,, | 3 | ,, | 10-ம் பாசுரம். |
| 8 | ,, | 9 | ,, | 6, 8-ம் பாசுரங்கள். |
| 11 | ,, | 8 | ,, | 6-ம் பாசுரம். |

திருநெடுந்தாண்டகம் 12-ம் பாசுரம்
சிறிய திருமடல் 71-ம் பாசுரம்
பெரிய திருமடல் 115-ம் பாசுரம்

ப்ரபாவம்:—வயலாலி மணவாளன், அம்ருதகட வல்லி, அஷ்டாக்ஷர விமாநம், இலாக்ஷணி புஷ்கரிணி, அலாதநிபுஷ்கரிணி, மேற்கே திருமுகமண்டலம், வீற் றிருந்த திருக்கோலம், அலாதநிகஞ்சமப்ரஜாபதிக்கும், திருமங்கையாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இவ்விடம் திருவாலி யென்றும் திரு நகரி யென்றும் இரண்டு ஸ்தலங்களிருக்கின்றன. திருநகரி யென்பது திருவாலியிலிருந்து சுமார் இரண்டு மைல் தூரம்—வயலாலிமணவாளன் சந்நதியும் திரு மங்கையாழ்வார் சந்நதியும் திருநகரியிலிருக்கின்றன. இதுவே திவ்யதேசம். சுமார் இரண்டு மைல் தூரத்தி லுள்ள திருவாலியில் நரசிம்மஸ்வாமி சந்நதி யிருக்கி றது. இவ்விரண்டையும் ஒரே திவ்யதேசமாய் எடுத்

னுக்கொண்டு திருவாலி யெனப்படுகிறது. திருநகரியில் திருமங்கையாழ்வாரின் சந்நதியிலிருக்கும் மூலவர் உற்சவர் விக்கிரகங்கள் வெகுவும் அழகாயும், மனதைக் கவரத்தக்கதாயுமிருக்கின்றன. திருமங்கை மன்ன னென்கிற பெயரும் வெகுவும் பொருந்தும். மூலவர் மல்லனென்கிற ஜெட்டியைப்போல் வெகு பராக்ரம சாலியாய்ப்பெரிய கண்களும் பதிந்த நெற்றியுடன் திரண்ட தோளும் வீரக்கழலுடன் தரிசினம் தருவது வெகுவும் ஆனந்தமாயிருக்கும். ஆழ்வார் உற்சவரின் மார்பில் சடகோபரும் பாதத்தில் இராமாநுஜருமிருக் கிறதைக் கவனிக்கவும். இவ்விடமிருந்து (திருநகரியி லிருந்து) தெற்கே ½ மைல் தூரம் சென்றால் அதாவது காவளம்பாடி செல்லும் மார்க்கத்தில் வேதராஜபுர மென்னும் ஓர் சிறிய கிராமமிருக்கிறது. அவ்விடம் ஒரு மைதானத்தில் ஓர் சிறு மண்டபமிருக்கிறது. அதற்கு வடக்கில் சுமார் 50 கெஜத்தில் கொள்ளிட நதியின் சிறு கால்வாய் ஒன்று ஓடுகிறது. கால்வாயின் பக்கத்தில் வடகரையில் ஒரு மண்டபமும் கால்வா யின் இக்கரையில் ஒரு அரசமரமுமிருக்கிறது. ஊம் மைதானத்தில்தான் பங்குனி மாதத்தில் பௌர்ணமி யில் திருமங்கையாழ்வார் வேடுபறி உற்சவம் நடக்கி றது. மைதானத்தில் காணும் மண்டபம் அழகிய மணவாளனின் மண்டபம். கால்வாய்க் கரையிலிருக் கும் பெரிய மண்டபம் திருமங்கையாழ்வாரின் மண்ட பம். அரசமரத்தினடியில்தான், களவுசெய்த திருமங்கை மன்னன் பதிந்திருந்தவிடமென்கிறார்கள். இவ்விடம் தான் திருமங்கைமன்னனுக்கு நம்பெருமாள் ஜாய மானகடாக்ஷம்பண்ணி இவர் செவியில் திருமந்தி ரார்த்தத்தை உபதேசித்து திவ்யசேவை சாதித்ததும்

"வாடினேன் வாடி" என்று ஆழ்வார் பாடத்தொடங்கி னதும். (பெரிய திருமொழியின் முதற்பத்தின் முதல் பாசுரம்). இவர் குறையலூர் என்னும் ஸ்தலத்தில் திருவவதரித்தவர்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே (S. I. Ry.) மீட்டர்கேஜ் மெயின் லைனில் சீயாழி என் னும் ஸ்டேஷனிலிறங்கி தென்கிழக்கே கற்சாலை மார்க்கமாய் 6 மைல் சென்றால் இத்தலத்தை யடைய லாம். ஸ்டேஷனிலிருந்து சுலப வாடகைக்கு மாட்டு வண்டிகள் கிடைக்கின்றன. திருநகரியில் இரண்டு சத்திரங்களிருக்கின்றன. ஊரில் கடைகளுண்டு. சாப்பாட்டு ஹோட்டல்களில்லை. திருவாலியில் சத் திரமில்லை, கடைகளுமில்லை. வெகு சிறிய கிராமம்.

(முக்கிய கவனிப்பு):—சீர்காழியில் ஓர் இரட்டை மாட்டு வண்டியை (ரூ. 1-8-0—2-0-0) வாடகைபேசிக் கொண்டால் முதலில் திருநகரிக்குப் போய் தரிசினம் செய்துகொண்டு வேதராஜபுரம் மார்க்கமாய் 2 மைலி லுள்ள (24) காவளம்பாடியில் தரிசினம் செய்து கொண்டு அவ்விடமிருந்து 2 மைலிலுள்ள திருவாலி யைத் தரிசித்து மற்றும் ½ மைல் தெற்கேயுள்ள 30-வது கீழைச்சாலை யென்கிற திருத்தேவனார்தொகை யைச் சேவித்துவிட்டுப் பின்பு 1 மைல் தூரமுள்ள 31-வது அண்ணன்கோயிலென்கிற திருவெள்ளக் குளம் என்னும் இந்த 5 ஸ்தலங்களையும் தரிசனம் செய்துகொண்டு சாயந்திரம் அவ்விடமிருந்து 1 மைல் தூரமுள்ள திருநாங்கூர் சேர்ந்துவிடலாம்.

காவளம்பாடி ஒன்றொழிய மற்றைய சந்நதிகளில் அர்ச்சகர்கள் எப்பொழுதும் தயாராய் இருந்துகொண் டிருப்பார்கள். காவளம்பாடியின் சந்நதியின் அர்ச்ச கர் 1½ மைல் தூரமுள்ள திருமணிக்கூடத்திலிருந்து வந்து பூஜை செய்துவிட்டுப் போய்விடுவார். ஆகை யால் அர்ச்சகருடன் வந்தால்தான் இச்சந்நதியாகிய காவளம்பாடி கண்ணனைச் சேவிக்க முடியும்.




## 29. காவளம்பாடி (38.)

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரியதிருமொழி

4-ம் பத்து, 6-ம் திருமொழி 10-பாசுரங்கள்.

ப்ரபாவம்:—கண்ணன், கோபாலகிருஷ்ணன், மடவரல் மங்கை, செங்கமல நாய்ச்சியார், சுவயம்பு விமானம், தடமலர்ப்பொய்கை, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், சேனைத்தலைவருக்கும், மித்ரதேவருக்கும், ருத்திரனுக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இத்தலத்திற்குக் கிழக்கே 1 மைல் தூரத்தில் திருமங்கையாழ்வாரின் அவதாரஸ்தலமாகிய குறையலூர் என்னும் கிராமமும், மேற்கே 3 பர்லாங்கு தூரத்தில் ஆழ்வார் ததியாராதனம் நடத்திய இடமாகிய மங்கைமடமென்னும் கிராமமும் இருக்கின்றன.

இச்சந்நதி வெகுவும் சிறியதாயிருந்தாலும், சரியானபடி ரிப்பேர் கிடையாது. சிறிய கிராமம். கோயிலில் காலை 10 மணி சுமாருக்கு ஒரே தடவை தான் பூஜை நடக்கிறது. கோயிலுக்கு மடப்பள்ளியுங் கிடையாது, அர்ச்சகரும் இவ்வூரில் குடியிருப்பதில்லை. மேற்கே $1\frac{1}{2}$ மைல் தூரமுள்ள 38-வது திவ்ய தேசமாகிய திருமணிக்கூடமென்னும் சந்நதியின் அர்ச்சகரே இவ்விடம் ஒரு வேளை வந்து பூஜை செய்கிறார். அவருடன் வந்தால்தான் தரிசினம் கிடைக்கும்.

இவ்வூர் ஒரு சிறிய ஜமீன் கிராமம். ஜமீன்தாரரின் மானேஜராகிய ஒரு ஸ்மார்த்தப் பிராமணர் இவ்வூரில் சந்நதியின் பக்கத்தில் குடியிருக்கிறார். அவருக்கும் இச்சந்நதியின் அர்ச்சகருக்கும் எப்பொழு

தும் சண்டை த்வேஷம். கண்டு விசாரிக்கும் பொழுது இந்த மானேஜர் சொல்லுகிறதாவது சந்நதியின் அர்ச்சகர் தினமும் சரியாக பூஜை செய்ய வந்தாலும் வருவார், வராவிட்டாலு மில்லை யென்கிறார். இதைக் குறித்துத்தான் இவர்களிருவருக்கும் மனஸ்தாபம். அர்ச்சகரைக்கேட்டால் கோயிலுக்கு வரும்படியில்லை என்ன செய்கிற தென்று சொல்லுவதைப் பார்த்தால் அவரிஷ்டம்போல் பூஜை நடத்துவதாகக் காண்கிறது. சரியான மேல் பார்வை இச்சந்நதிக்குக் கிடையாது. ஏனென்றால் வரும்படியில்லாத எழிய சந்நதியாகிய ஏழை திவ்ய தேசம். யாரும் கவனிக்கிறதில்லைபோல் தெரிகிறது. அர்ச்சகருக்கும் சந்நதியின் பூஜையை வேறொருவருக்கு விட்டுக்கொடுக்க இஷ்டப்படவில்லை. இவ்வூரில் வேறு ஸ்ரீ வைஷ்ணவர்கள் யாரும் குடியில்லை.

**மார்க்கமும் வசதியும்:**—திருநகரியிலிருந்து தெற்கே மட்சாலை மூலியமாய் சுமார் 2 மைல் தூரத்திலிருக்கிறது. இத்தலம் திருநாங்கூருக்குச் சமீபமாயுள்ள 38வது திவ்ய தேசமாகிய திருமணிக்கூடத்திலிருந்து வண்டி மார்க்கமாய் 3 மைல். நெல் வறப்பு மார்க்கமாய் சுமார் $1\frac{1}{2}$ மைலாகிறது.

---

## 30. திருத்தேவனூர் தொகை 33.

(கீழைச்சாலை)

**மங்களாசாசனம்:**

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி 4-ம் பத்து, 1-ம் திருமொழி, 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—தெய்வநாயகப்பெருமாள், கடல்மகள் நாய்ச்சியார், சோபநவிமாநம்—சோபநபுஷ்கரிணி—தேவஸபாடஷ்கரிணி, மேற்கே திருமுகமண்டலம்—நின்ற திருக்கோலம்—வசிஷ்டருக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:—இது திருவாலியிலிருந்து தெற்கில் ½ மைல் தூரத்திலுள்ளது. திருவெள்ளக்குளம் (அண்ணன்கோயில்) என்னும் திவ்ய தேசத்திலிருந்து 1 மைல் கிழக்கே யுள்ளது.

(குறிப்பு) இச்சந்நதியின் அர்ச்சகர் அண்ணன் கோயிலில் பூஜை செய்கிறவர். தினமும் அவ்விட மிருந்தே இங்கு பூஜைக்கு வருகிறார். ஆனால் சந்நதியின் சாவி திருவாலியிலிருக்கும் இச் சந்நதியின் பரிச்சாரகரிட மிருக்கிறது. திருவாலி நரசிம்மனைச் சேவித்ததும் அந்த அர்ச்சகரிடம் சொன்னால் உடனே இச் சந்நதியின் பரிச்சாரகருக்குச் சொல்லியனுப்பி அவர் சாவியை யெடுத்துக்கொண்டு வந்து இச்சந்நதியின் பெருமாளை தரிசிக்க வைப்பர்.

---

## 31. திருவெள்ளக்குளம் 39

(அண்ணன் கோயில்)

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி 4-ம் பத்து, 7-ம் திருமொழி, 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—கண்ணன்நாராயணன் — பூவார் திருமகள்—தத்வதோதகவிமாநம்—வெள்ளக்குள தீர்த்தம்—கிழக்கே திருமுகமண்டலம்—நின்ற திருக்கோலம்—ஸ்வேதராஜனுக்கும், ருத்ரனுக்கும் ப்ரத்யக்ஷம்.

குறிப்பு:—இச்சந்நதியின் எதிரிலிருக்கும் திருக்குளத்தில் திருமாமகள் ஒரு அப்ஸரஸ்ஸு வேஷத்தைத் தரித்துக் கொண்டு அப்ஸரஸ்ஸுக்கள் கூட வந்து குமுதமலர் அறுத்துக்கொண் டிருக்கையில் கூட வந்தவர்கள் இவளை விட்டுப்போனமையால் இவள் மனித சரீரத்தைக் கொண்டு தனித்து நினறபொழுது திருநாங்கூரின் மருத்துவரான பாகவதர் கண்டு தனக்குப் பிள்ளை யில்லாததினால் இப்பெண்மகளை கூட்டிப்போய் குமுதவல்லியாரென்று திருநாமம் சாத்தி தன் குமாரத்தியைப்போல் வளர்த்து வந்து பின்னர் திருமங்கை மன்னனுக்கு விவாகம் செய்து கொடுத்ததினால் குமுதவல்லியார் இக்குளத்தில் ஜென்மித்தாரென சொல்லப்படுகிறது. மேலும் இச்சந்நதியை தென்திருப்பதியாக பாவித்து அநேக யாத்ரீகர்கள் சதாவந்து தலைமுடியை இறக்குகிறார்கள். இச்சந்நதியின் அர்ச்சகரே திருத்தேவனார்தொகை யென்னும் 30 வது திவ்ய தேசத்தின் அர்ச்சகர்.

மார்க்கமும் வசதியும்:—இது திருத்தேவனார் தொகையிலிருந்து மேற்கே கால்வழி மார்க்கமாய் ½ மைலிலும் வண்டி மார்க்கம் 1 மைலிலு மிருக்கிறது. (S I. Ry) வைதீஸ்வரன்கோயிலென்னும் ரைல்வே ஸ்டேஷனுக்கு கிழக்கே மட்சாலை மார்க்கம் 7 மைலிலிருக்கிறது. ஸ்டேஷனிலிருந்து கட்டை மாட்டு வண்டிகள் கிடைக்கும். இவ்வூரில் சத்திரமும் ஹோட்டல்களும். கிடையாது.பெரிய கடைகளுமில்லை.

## திருநாங்கூர்

மேலே சொன்ன 27-வது திவ்ய தேசமாகிய தாளாடன் சந்நதி யென்கிற காழிச் சீராம விண்ணகர மென்னும் திவ்ய தேசம் முதல் கொண்டு அதன் பின் சொல்லி யிருக்கும் திவ்ய தேசங்களை யெல்லாம் வரிசையாய்ச் சேவித்துக்கொண்டு திருநாங்கூர் சேர்ந்தால் இவ்விடம் நான்கு பிரகார வீதிகளிலும் 6 திவ்யதேசங்களிருக்கின்றன. இவைகளை யெல்லாம் ஒரே நாளில் சேவிக்கலாம். இவ்வூர் பார்க்கப்பெரியதாயிருந்தாலும் வெகு ஏழைகள் வசிக்கும் கிராமமாயிருக்கிறது. சுலபமான கடைகளுண்டு. தங்குவதற்கு ஓர் இராமாநுஜகூடமிருக்கிறது. மற்ற வசதிகள் கிடையாது. வண்டிகளுண்டு. தென் இந்தியா ரைல்வே (S. I. Ry.) மெயின் லைன் மீடர்கேஜ் வைதீஸ்வரன் கோயிலுக்கு கிழக்கே 7 மைலிலிருக்கிறது. இவ்வூரின் 6 திவ்ய தேசங்களாவன:—(32 to 37)

---

## 32. மணிமாடக் கோயில் 30.

(திருநாங்கூர்)

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி

3-ம் பத்து, 8-ம் திருமொழி, 10 பாசுரங்கள்.

4 ,, 6 ,, 10 ,,

பெரிய திருமடல் 132 & 133-ம் பாசுரங்கள்.

ப்ரபாவம்:—நந்தாவிளக்குப் பெருமாள், நரநாராயணர், புண்டரீகவல்லி, ப்ரணவவிமானம், இந்திர புஷ்கரிணி, ருத்ரபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், ஏகாதசருத்ரருக்கும் இந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம்.

இச்சந்நதி இவ்வூர் இராமாநுஜகூடத்திற்கு எதிரிலிருக்கிறது. ஊரின் தென் பிரகார வீதியின் தென்மேற்கு மூலையிலிருக்கிறது. இக்கோயிலுக்கு வரும்படி அதிகம். இந்தப் பெருமாளுக்கும், வண்புருடோத்தமம் சந்நதியின் பெருமாளுக்கும் திரவிய மதிகமுண்டு. மற்றைய நான்கு சந்நதிகளுக்கும் திரவிய மதிகமா யில்லை. அம்மாதிரியே பூஜைகளும் நடக்கின்றன. அதாவது இவ்விரண்டு சந்நதிகள் தவிர மற்ற சந்நதிகளுக்கு வரும்படி அதிகமாயில்லை.

வண்புருடோத்தமம் மற்றும் வைகுண்ட விண்ணகரம் என்னும் இரண்டு சந்நதிகளுக்கும் ஒருவரே அர்ச்சகர். அவர் எப்பொழுதும் வண்புருடோத்தமம் சந்நதியிலேயே இருப்பார். வைகுந்த விண்ணகரம் சேவிக்க வேண்டுமானால் இவரைக் கையுடன் அழைத்துப் போனால்தான் சேவையாகும். ஓரே அர்ச்சகரே



மணிமாடக் கோயில் (திருநாங்கூர்)

**Manimadakkoil Temple at Thirunangoor**



அரிமேய விண்ணகரம் (திருநாங்கூர்)

**Arimeya Vinnagaram Temple at Thirunangoor**

இவ்விடத்திய இரண்டு மூன்று சந்நதிகளுக்கு ஆரா தனை செய்வதால் அவரைக் கண்டு பிடிப்பது கஷ்ட மாகும். ஆகையால் அவருடன் சென்றே மற்ற சந் நதிகளைச் சேவிக்கவேண்டும்.

மார்க்கமும் வசதியும்:—இது திருநாங்கூரிலுள்ள திவ்யதேசம். (S. I. Rly.) ஸ்டேஷனாகிய வைதீஸ் வரன் கோயிலிலிருந்து இவ்விடம் சுமார் 7 மைல் தூரம் வர இரட்டை மாட்டு வண்டிகள் கிடைக்கும். இவ்வூரில் ஆகார ஹோட்டல்களில்லை. சந்நதிகளில் பிரசாதம் கிடைக்கும். மற்றும் பிராமணர்கள் வீட் டில் சொன்னால் கிரயத்திற்கு பிரசாதம் சாதிப்பார்கள்.

---

## 33. அரிமேயவிண்ணகரம் 32.
## (திருநாங்கூர்)

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி.
3-ம் பத்து 10-ம் திருமொழி 10 பாசுரங்கள்

ப்ரபாவம்:—குடமாடுகூத்தர், அம்ருதகட வல்லி, உச்சச்ருங்க விமானம், கோடி தீர்த்தம், அமுத தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், உதங்கமகரிஷிக்கு ப்ரத்யக்ஷம்.

இச்சந்நதி இவ்வூர் இராமானுஜ கூடத்திற்கு கிழக்கே ½ பர்லாங்கு தூரத்திலிருக்கிறது. ஊரின் தென்பிராகாரத்திலிருக்கிறது.

---

## 34. திருத்தெற்றியம்பலம் 36.
## (திருநாங்கூர்)

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரியதிருமொழி
4-ம் பத்து, 4-ம் திருமொழி, 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—செங்கண்மால், செங்கமலவல்லி, வேதவிமாநம், சூர்யபுஷ்கரிணி, கிழக்கே திருமுக மண்டலம், புஜங்கசயநம், செங்கமலவல்லிநாய்ச்சியாருக்கும் அநந்தனுக்கும் ப்ரத்யக்ஷம்.

இச்சந்நதி இவ்வூர் இராமாநுஜகூடத்திற்கு வடவண்டை ½ பர்லாங்கு தூரத்தில் ஊரின் மேல்பிரகாரத்திலுள்ளது.

---

## 35. வண்புருடோத்தமம் 34.
## (திருநாங்கூர்)

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
4-ம் பத்து, 2-ம் திருமொழி 10 பாசுரங்கள்

ப்ரபாவம்:—புருஷோத்தமர், புருஷோத்தமநாயகி, ஸஞ்சீவிக்ரஹவிமாநம், திருப்பாற்கடல் தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், உபமந்யுவுக்கு ப்ரத்யக்ஷம்.

இக்கோயிலுக்கு வருமானம் அதிகமுண்டு. இராமாநுஜகூடத்திற்கு வடவண்டை 1 பர்லாங்கு தூரத்தில் ஊரின் வடப்பிரகாரத்தின் மேற்குமூலையிலுள்ளது. இச்சந்நதியின் அர்ச்சகரே 36-வது வைகுந்தவிண்ணகரமென்னும் சந்நதிக்கும் அர்ச்சகர். ஆனால் இவர் பெருவாய் இச்சந்நதியிலேயே எப்பொழுதும் இருப்பார்.

## 36. வைகுந்தவிண்ணகரம் 31

(திருநாங்கூர்)

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
3-ம் பத்து, 9-ம் திருமொழி 10 பாசுரங்கள்

ப்ரபாவம்:—வைகுந்தநாதன், தாமரைக்கண் ணெடியபிரான், வைகுந்தவல்லி, அநந்தஸதய வர்த்தக விமாநம், லக்ஷ்மிபுஷ்கரிணி, உதங்கபுஷ்கரிணி விரஜை, கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், உபரிசரவஸு ராஜாவுக்கும், உதங்க மஹரிஷிக்கும் ப்ரத்யக்ஷம்.

இது ஊரின் வடப் பிரகாரத்தின் மத்தியிலுள்ள சந்நதி. 35-வது வண்புருடோத்தமம் சந்நதிக்குச் சமீபமாயுள்ளது. அக்கோயிலின் அர்ச்சகரே இதற்கும் அர்ச்சகர்.

---

## 37. செம்பொன் செய்கோயில் 35

(திருநாங்கூர்)

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
4-ம் பத்து 3-ம் திருமொழி 10 பாசுரங்கள்

ப்ரபாவம்:—பேரருளாளர், அல்லிமாமலர்நாய்ச்சியார், கநகவிமாநம், கநகதீர்த்தம், நித்யபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், ருத்ரனுக்கு ப்ரத்யக்ஷம்.

இச் சந்நதி ஊரின் கீழ்ப்பிராகாரத்தின் மத்தியிலிருக்கிறது.

## 38. திருமணிக்கூடம் 37

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
4-ம் பத்து 5-ம் திருமொழி 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—மணிக்கூடநாயகன், திருமாமகள் நாய்ச்சியார், கநகவிமாநம், சந்திரபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், பெரிய திருவடிக்கும் சந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:— இது திருநாங்கூருக்குக் கிழக்கே ½ மைல் தூரத்திலுள்ளது, சத்திரம் கடைகள் கிடையாது. வேறெந்த வசதியுமில்லை. சந்நதியில் தரிசித்துக்கொண்டு திருநாங்கூர் திரும்பி விடவேண்டும். இச்சந்நதியின் அர்ச்சகரே கிழக்கே 1½ மைல் தூரமுள்ள 26 வது திவ்ய தேசமாகிய காவளம்பாடி யென்னும் கண்ணன் சந்நதியின் அர்ச்சகர். இவர்பின் சென்றால்த்தான் அவ்விடம் தரிசினமாகும். இச் சந்நதியின் அர்ச்சகர் சந்நதியின் பக்கத்திலேயே வசிக்கிறார்.

---

## 39. பார்த்தன்பள்ளி 40.

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
4-ம் பத்து 8-ம் திருமொழி 10 பாசுரங்கள்

ப்ரபாவம்:—தாமரையாள் கேள்வன், தாமரைநாயகி, நாராயணவிமாநம், சங்கஸரஸ்ஸு, மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், பார்த்தனுக்கும், வருணனுக்கும், ஏகாதசருத்ரருக்கும் ப்ரத்யக்ஷம்.



திருமணிக்கூடம் சந்நதி - Thirumanikkudam Temple



பார்த்தன்பள்ளி – **Parthanpalli Temple**

மார்க்கமும் வசதியும்:—இது திருநாங்கூரி லிருந்து கால்பாதை வழியாய் $1\frac{1}{2}$ மைல் தூரமிருக் கிறது. வண்டிகளில் மண்சாலைமார்க்கம் தென்கிழக்கே சுமார் $2\frac{1}{2}$ மைல் தூரம் போகவேண்டும். இச்சந்நதி யின் கோபுரம் வெகுவும் பெரியது. இவ்விடம் சத்திர மில்லை, கடைகளுமில்லை. சாப்பாட்டு சௌகரியங்களு மில்லை. இவ்விடமிருந்து திருமணிக்கூடம் வடக்கே சுமார் $\frac{3}{4}$ மைல் தூரம் செல்லவேண்டும் காலையில் திருநாங்கூரிலிருந்து பார்த்தன்பள்ளி சென்று சேவை செய்துகொண்டு பின்பு திருமணிக்கூடம் சென்று தரிசித்துக்கொண்டு சாப்பாட்டிற்கு திருநாங்கூர் திரும்பலாம். இதன் அர்ச்சகர் சந்நதியருகிலேயே வசிக்கிறார்.

---

## 40. சித்திரகூடம்—இதையே தில்லை சித்திரகூடமென்பர் (சிதம்பரம்) 23.

மங்களாசாசனம்.

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி
2-ம் பத்து 6-ம் திருமொழி 7-ம் பாசுரம்

குலசேராழ்வாரருளிச் செய்த பெருமாள் திருமொழி
முதலாயிரம் 10-ம் திருமொழி 11 பாசுரங்கள்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
3-ம் பத்து 2-ம் திருமொழி 10 பாசுரங்கள்
,, 3 ,, 10 ,,
பெரிய திருமடல் 124-ம் பாசுரம்

ப்ரபாவம்:—கோவிந்தராஜர், புண்டரீகவல்லி, ஸாத்விகவிமாநம், புண்டரீகசரஸ்ஸு, கிழக்கே திருமுக

ரண்டலம், போகசயநம், சிவன் முதலிய தில்லை மூவா யிரவர்க்கும் கன்வர்க்கும் ப்ரத்யக்ஷம். தேவர்கள் கொலுவீற்றிருந்தவிடம்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே (S. I. Rly.) மீடர்கேஜ் மெயின் லைனிலுள்ள சிதம்ப ரம் என்னும் ஸ்டேஷனிலிறங்கவேண்டும். ஸ்டே ஷனிலிருந்து சந்நதி மேற்கே 1 மைல் தூரத்தி லுள்ளது. சிதம்பரத்தில் கனகசபை யென்னும் நடராஜாவின் சந்நதியிலிருக்கிறது. வண்டிகளுண்டு, அநேக சத்திரங்களும் ஆகார ஹோட்டல்களுமிருக் கின்றன. பெரிய முனிசிபல் பட்டணம். குடிக்கும் தண்ணீர்க் குழாய்களும் மின்சாரவிளக்குகளுமிருக் கின்றன. சிதம்பரம் பிரபல சிவஸ்தலம். சிவனுக்குப் பக்கத்திலேயே பெருமாளெழுந்தருளியிருக்கிறார். இரு வரையும் நின்றவிடத்திலிருந்தே ஒரேதடவையில் தரிசிக்கலாம்.

## காட்டுமன்னார் கோயிலென்னும் வீரநாராயணபுரம்

(குறிப்பு) இவ்வூரிலிருந்து தென்மேற்கே 16 மைல் தூரம் மோட்டார் பஸ் வண்டி மார்க்கம் சென் றால் காட்டுமன்னார்கோயிலென்னும் ஸ்தலம் சேரலாம். இது ஸ்ரீமந்நாதமுனிகளின் அவதார ஸ்தலம். இவ ரால்தான் மறைந்திருந்த தமிழ்மறைகளான 4,000 பாசுரங்களும் வெளி வந்து தெய்வகான ராக தாளத் தோடு இந்நாலாயிரப்ரபந்தம் வெளியிடப்பட்ட தென்பர். இவருடைய பேரன் ஆளவந்தாரென்னும் யாமுனாசாரியார் எனப்படுமவர். இவ்வெமுனாசாரி யரே விசிஷ்டாத்வைத மதத்தை சீர்திருத்துங்கால் இவருக்குப் பின்னர் ஸ்ரீ பாஷ்யகாரரென்னும் இராமா



குருகைக்காவலப்பன் சந்நதி
(Near Jayankonda Cholapuram)



காட்டுமன்னார் கோயில் (வீரநாராயணபுரம்)
Kattumannar Coil (Veeranarayanapuram Temple)

நுஜர் இவர் மடத்திற்கு அதிபதியாய் ஸ்ரீரங்கத்தில் அமர்ந்த பின்னர் ஸ்ரீ பாஷ்யம் மற்றும் அநேக க்ரந்தங்களை யெழுதி இம்மதத்தை வெகுவாய் சீர்திருத்தி எங்கும் பரவச் செய்தவர். யமுனசாரியர், ஆளவந்தா ரென்னும் திருநாமத்தோடு சோழராஜனின் தேசத்தில் பாதியை அரசாண்டவிடம் கங்கைகோண்டான் சோளபுரம் இவர் அவ்வூருக்கு வெளியில் 3 பர் லாங்கு தூரத்தில் வீரநாராயணரென்னும் ஒரு விஷ்ணு சந்நதியைக் கட்டி குளங்கள் வெட்டியிருக்கிறார். (போட்டோ படத்தைப் பார்க்கவும்) இதற்குத்தான் தற்பொழுது குருகைக்காவலப்பன் சந்நதியென்று பெயரானாலும் இவ்விடம் வீரநாராயணனின் சந்நதியிருக்கிறது. ஸ்ரீமந் நாதமுனிகளின் 5 சிஷ்யர்களில் ஒருவரான குருகைக்காவலப்பனென்பவர் அரசனாகிய ஆளவந்தாரின் தரிசனம் தனக்குக் கிடைப்பதறிதானதுபற்றி இச்சந்நதியின் யிடப்பக்கத்தில் காணுமிடத்திலமர்ந்து யோகாப்பியாசம் செய்துகொண்டிருந்து பின்னர் அவ்விடமே சமாதியாயினர். ஆளவந்தாருக்கு குருகைக்காவலப்பன் பரமபதமடைந்த பின்னர் விஷயம் தெரிந்து ஷை இடத்தில் வீரநாராயணஸ்வாமி சந்நதியை கட்டி முடித்தாரென்ற வரலாறு. பூரா விவரங்களை ஸ்ரீமந் நாதமுனிகள் ஆளவந்தார் சரித்திரங்களில் தெரிந்து கொள்ளவும். காட்டுமன்னார் கோயிலிலிருந்து கங்கை கொண்டான் சோளபுரமென்பது 12-மைல் தூரம். பஸ்வண்டிகளும் மாட்டு வண்டிகளும் கிடைக்கும். இது பெரிய ஊர். ஆகாரஹோட்டல்களுண்டு.

ஸ்ரீ முஷ்ணம்—: இது சிதம்பரத்திற்கு மேற்கே 25 மைல் தூரத்திலுள்ளது. மோட்டார் பஸ் வண்டி

கள் சிதம்பரத்திலிருந்து இவ்வூருக்குப் போகின்றன. இவ்விடம்ஸ்ரீபூவராகஸ்வாமியின்சந்நதியிருக்கிறது. மூலஸ்தான விக்கிரகம் சாலக்கிராம சிலை யென்கிறார்கள். இது சுயம் விக்தஸ்தலமெனப்படுகிறது. வடநாட்டார் சொல்லும் 8 வைகுண்டங்களில் இந்தஸ்தலம் ஒன்றாகும். மற்ற 7 வைகுண்டங்களின் விவரம் அடியேன் கிரகத்தின் 103 திவ்யதேசமாகிய நைமிசாரண்யம், 82 வது திவ்ய தேசமாகிய சிரிவரமங்கை (வானமாமலை) என்னும் திவ்ய தேசங்களின் குறிப்பில் பார்க்கவும். ஆனால் இதுவும் காட்டுமென்னார் கோயிலும் ஆழ்வார்களாள் மங்களாசாசனமான திவ்ய தேசங்களல்ல.

இத்தலத்தின் மூலவர் வராக ரூபத்துடனிருந்தாலும் யஜ்யவராகஸ்வாமி யென்னும் உற்சவர் புருஷ ரூபமாயிருப்பதை கவனிக்கவும்.

இவ்வூரின் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குள் சந்நதி விஷயமாய் எப்பொழுதும் சண்டை சச்சரவுண்டு. அநேக மார்த்தவ பிராமணர்களும் இவ்வூரில் வசிக்கிறார்கள். பெரியவூர். ஹோட்டல்கள் சத்திரமுண்டு. முன்புர கோபுரம் வெகும் பெரியது. புராதான புராணஸ்தலம்.

சோழநாட்டுத் திருப்பதிகள் 40 முற்றுப் பெற்றன

---

## இரண்டாம்பாகம்

---

விஷயம். விஷய ஸூசிகை பக்கம்.

விஷயம். விஷய ஸூசிகை பக்கம்



---

## இரண்டாம்பாகம்.

# நடுநாட்டுத் திருப்பதிகள் 2.

# தொண்டை நாட்டுத் திருப்பதிகள் 22.

---

பன்னிரு ஆழ்வார்கள் மங்களாசாசனம்
செய்தருளிய நூற்றெட்டுத் திருப்பதிகளின்
விவரங்களடங்கிய பாசுரம்.

"ஈரிருப தாஞ்சோழ மீரொன்ப தாம்பாண்டி
ஓர் பதின்மூன்றுமலைநா டோரிரண்டாம்—சீர் நடுநா
டாறோடீ ரெட்டு தொண்டை யவ்வடநா டாறிரண்டு
கூறுதிரு நாடொன்றாக் கொள்."

இரண்டாம் சீர் நடுநாடு=2.

ஆறோ டீரெட்டு தொண்டை=6+2×8=22.

இந்த 24 திவ்யதேசங்களிருக்குமிடங்களின் விவரங்கள் :—

(மதராஸ்-செங்கல்பட்டு, மற்றும் தென் ஆர்க்காடு ஜில்லாக்கள்;)

(1) தென் ஆற்காடு ஜில்லா திருப்பாபுலியூர் பக்கத்திலுள்ளது. 1—41-வது.

(2) தென் ஆற்காடு ஜில்லா-திருக்கோவலூர்—42-வது.

(3) காஞ்சீபுரத்தில் 14 திவ்யதேசங்கள். இக்கிரந்தத்தின் 43 முதல் 56 முடிய உள்ளவைகள்.

(4) காஞ்சீபுரத்திற்கு 7 மைல் மேற்கிலுள்ள—திருப்புட்குழி—57-வது.

(5) சோளிங்கபுரத்திலிருக்கும் நரசிங்கர்மலை—(திருக்கடிகை)—58-வது.

(6) திருவள்ளூர் வீரராகவப்பெருமாள் (திருவெவ்வுள்)—59-வது.

(7) தின்னனூர் (திருநின்றவூர்) 60-வது.

(8) மதராஸ்-திருவல்லிக்கேணி (ப்ருந்தாரண்ய க்ஷேத்திரம்)—61-வது.

(9) மதராஸ்-பல்லாவரம் சமீபத்திலிருக்கும் திருநீர்மலை 62-வது.

(10) செங்கல்பட்டு ஜில்லாவைச்சேர்ந்த திருப்போரூர் சமீபத்திலிருக்கும்—திருவிடவெந்தை (நித்ய கல்யாணர்)—63-வது.

(11) ஷை ஜில்லாவைச் சேர்ந்த மஹாபலிபுரமென்னும் திருக்கடல்மல்லை.—64-வது.

இந்த 24 திவ்ய தேசங்களையெல்லாம் ஒரே வாரத்தில் சேவிக்கலாம். நிதானமாய் 10 நாட்களுக்குள் கண்டிப்பாய் சேவைசெய்யலாம். திருவிடவெந்தை தவிர மற்ற விடங்களுக்கெல்லாம் வண்டிசவாரி வசதியுண்டு.

யாத்ரீகர்களின் அனுகூலத்தின் பொருட்டு அடியேன் தயாரிக்கும் 108 திவ்யதேச யாத்ரா ப்ரபாவ சந்திரோதயம் என்னும் கிரந்தத்தை தனித்தனி பாகங்களாய்ப் பிரித்து சுலப விலைக்கு வெளியிடப்பட்டிருக்கிறது.

பெங்களூர். }
1—7—35. }

ஜி. கே. (105) பலிஜ,
வக்கீல்.

# நடுநாட்டுத் திருப்பதிகள் 2.

ஒவ்வொரு ஸ்தலத்தின் கடைசியில் கண்டிருக்கும் நெம்பர் இந்த ஸ்தலம் நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தின் 108 திவ்ய தேச திருப்பதிகளின் அட்டவணையில் எத்தனையாவது என்று குறிப்பிடுகிறது.

41. திருவயிந்திரபுரம். (வடகலை சந்நதி) 72.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரியதிருமொழி
3-ம் பத்து 1-ம் திருமொழி 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—தெய்வநாயகப்பெருமாள், வைகுண்ட நாயகி, சந்திரவிமாநம், கருடநதி, ஸேவைதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், சந்திரனுக்கும் கருடனுக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இச்சந்நதி கருட நதியின்பேரில் வெகுவும் அழகாய்க் கட்டப்பட்டிருக்கிறது. பக்கத்திலுள்ள ஔஷத மலையின்மேல் ஹயக்கிரீவர் சந்நதியிருக்கிறது. இவ்வூரிலேயே ஒரு மண்டபத்தில் ஸ்ரீவேதாந்ததேசிகர் சுமார் 30 வருஷகாலம் வசித்துக்கொண்டிருந்ததாகவும் அவரே தன் கையால் வெட்டின ஓர் கிணறும் அம்மண்டபத்திலிருக்கிறதாகவும் சொல்லப்படுகிறது. இவ்விடம் வசித்துக்கொண்டே இவர் அநேக கிரந்தங்களை யெழுதியும் வடகலை மார்க்கத்தைப் பிரசுரம் செய்திருக்கிறார். இவர் சுமார் நூறு வருஷங்களுக்கு அதிகப்பட்டு ஜீவித்திருந்ததாகக் காண்கிறது. இராமாநுஜரைப்போல் இவர் மகம்மதிய அரசர்களின் படையெடுப்புக் காலத்தில் அவர்கள்

கொடுமைகளை தப்பித்துக்கொண்டு மைசூர் ராஜ்யம் வந்துபோனதாகவும் சரித்திரமிருக்கிறது.

மார்க்கமும் வசதியும் :—தென் இந்தியா ரெயில்வே (S. I. Rly.) மீடர்கேஜ் மெயின் லைனிலுள்ள (திருப்பாபுலியூர் என்கிற) கடலூர்-நியூ-டவுன் என்னும் ரயில்வே ஸ்டேஷனிலிறங்கி மேற்கே 3 மைல் தூரம் சென்றால் இத்தலத்தை யடையலாம். ஸ்டேஷனிலிருந்து சுலப வாடகைக்கு வண்டிகள் கிடைக்கும். இவ்விடம் சத்திரங்கள் ஆகார ஹோட்டல்களிருக்கின்றன. சந்நதியைத்தவிர இவ்வூரின் விசேஷம் ஒன்றும் கிடையாது. இச்சந்நதியின் உற்சவமூர்த்தி வெகு விசேஷமாயிருப்பதைக் கவனிக்கவும். இம்மூர்த்தியில் பிரம்மா, விஷ்ணு, சிவன் இவர் மூவர்களுடைய சின்னங்களையும் காணலாம். வலது உள்ளங்கையில் (ஹஸ்தத்தில்) பிரம்மாவின் சின்னமாகிய தாமரை மலரும், நெற்றில் சிவசின்னமாகிய நெற்றிக்கண்ணும் சிரசில் ஜடையும், இரு கரங்களிலும் விஷ்ணுவின் சின்னங்களாகிய சங்கு சக்கரங்களையும் நன்றாய்க் கவனிக்கத்தக்கது. ஆனால், மூலஸ்தானத்தில் இப்பேர்ப்பட்ட சின்னங்கள் கிடையா.

---

# 42. திருக்கோவலூர் 73.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி

2-ம் பத்து 4-ம் திருமொழி 1-ம் பாசுரம்
2 „ 10 „ 10 பாசுரங்கள்
6 „ 10 „ 5-ம் „
7 „ 3 „ 2-ம் „

திருநெடுந்தாண்டகம் 6, 7, 17-ம் பாசுரங்கள்
சிறிய திருமடல் 69-ம் பாசுரம்
பெரிய திருமடல் 122-ம் பாசுரம்

பொய்கையாழ்வாரருளிச் செய்த முதற் றிருவந்தாதி
86-ம் பாசுரம்

பூதத்தாழ்வாரருளிச் செய்த இரண்டாந் திருவந்தாதி
70-ம் பாசுரம்.

ப்ரபாவம் :—திருவிக்கிரமன், ஆயனார், பூங்கோவல் நாய்ச்சியார், ஸ்ரீகரவிமானம், க்ருஷ்ணதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், மிருகண்டுமுனிக்கும் பலிச்சக்ரவர்த்திக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) பூர்வத்தில் இவ்வூர் ஓர் ஆரணியமாயிருந்தது. பெண்ணையாற்றின் நதிக்கரையில் ஓர் துர்க்கா தேவியின் சந்நதியின் பக்கல் மிருகண்டு முனிவரும் அவரது பத்னியும் ஒரு சிறு குடிசையில் வாழ்ந்துகொண் டிருக்குங்கால், முதலாழ்வார்களெனும் பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார் இம்மூவர்களும் சுத்த சத்வகுணமுடையவர்களாய் அன்னபானுதிகளை விட்டு பாலப்பிராயந் தொடங்கி பகவத் குணங்களையே தாரகமாகவிருந்துகொண்டு ஒரு நாளிருந்த

விடத்தில் மறுநாளிராமல் கிராமத்திற்கு ஓரிராத்திரி யாக இம்மூவர்களும் ஒருவரை யொருவர் அறியாதே தனித்தனியே வர்த்தித்துக்கொண்டு தற்செயலாய் ஒருநாளிரவில் இம்மிருகண்டு வசிக்கும் அரண்யத் திற்கு வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது பெரு மழையும் பெருங்காற்றும் வர அவற்றைக் கண்டு மழைக்கு ஒதுங்க இம்முனிவர் குடிசையின் ஒரு தாழ்வாரமாகிய (இடைகழியிலே) ஒருவர் புகுந் திருக்க மற்றையவர் வந்து திறக்கவேணும் என்ன, உள்ளிருந்தவர் ஒருவர் மாத்திரம் படுத்துக்கொள்ள இடமிருக்கிறதென, வந்தவர் ஒருவர் கிடந்த விடம் இருவர் இருக்கலாங்காணும் திறவும் என்று சொல்ல அவரும் திறக்க, இவ்விருவரும் இருக்கிறவளவில் மூன்றுவதானவரும் வந்து திறக்கச் சொல்ல உள்ளி ருந்த இருவர்களும் எங்களிருவருக்கும் இருக்க விடம் மாத்திரமுண்டென, வந்தவர் இருவரிருந்த விடம் மூவர்க்கு நிற்கலாம் திறவும் என்ன, அவர்கள் கதவைத் திறக்க மூவரும் இடைகழியிலே சேர்ந்து வந்தனபர ராய் நீரார் நீரார் என்று ஒருவர்க்கொருவர் கேட்க ஒவ் வொருவரும் தான் பகவானுக்கு சேஷபூதன் என்று ஒருவர்க்கொருவர் தெரிவித்துக்கொண்டிருக்கும் பொழுது சர்வேஸ்வரன் இத்தருணம் பார்த்துத் தானும் இவ்விடைகழியிலே இவர்களருகே புகுந்து நெருக்கி நின்றார். இவர்களும் நம்மூவரை யொழிய வேறு புகுந்து நெருக்கிறவர்களாரென்று விளக்கேற் றிப் பார்க்க வேணும் என்ன அவ்வளவில் இவர்கள் மூவரும் பரபத்தி பரஜ்ஞானங்களால் தர்சித்து சொன் மாலையாகிய விளக்கேற்றி திருமகளுடன் நிற்கிற ஸ்ரீமந்நாராயணனுடைய வடிவழகைக் கண்டு அனுப வித்து அவ்வனுபவத்தாலுண்டான பிரீதியின் மிகுதி

யாலே "வையந்தகளியா" என்று ஆரம்பிக்கும் திவ்யப் பிரபந்தபாகிய முதற்றிருவந்தாதி யென்னும் 100 பாசுரங்களை பொய்கையாழ்வாரும், "அன்பே தகளியா" என்றாரம்பிக்கும் திவ்யப் பிரபந்தமாகிய இரண்டாந் திருவந்தாதி யென்னும் 100 பாசுரங்களை பூதத்தாழ்வாரும் 'திருக்கண்டேன், பொன்மேனி கண்டேன்' என்று ஆரம்பிக்கும் திவ்யப் பிரபந்தமாகி மூன்றாந் திருவந்தாதி யென்னும் 100 பாசுரங்களை பேயாழ்வாரும் சம்சாரிகள் அதிகரித்து அஞ்ஞானம் நீங்கி உஜ்ஜீவிக்குமாறு வாழ்வித்தருளினார்கள். இம்மூவரும் திருநாட்டுக் கெழுந்தருளிய ஸ்தலமுமிதுவே. இவ்விடைகழியே பெருமாளின் கற்பக்கிரகமாயிருக்கிறது. பெருமாளின் வலது கால் ஆகாயத்தில் நீண்டிருக்கிறது. இடது கையிலுள்ள திருச்சங்கு வலது கையிலிருப்பதைக் கவனிக்கவும். முதலில் சொன்ன துர்க்கை இப்பொழுது சந்நதிக்குள்ளேயே யிருக்கிறது. இதற்கும் தினப்பூஜை பிரபலம். சந்நதி பிரகாரத்திற்குள் நுழைந்ததும் இடது புறத்திலேயே ஸ்தாபனமாகப்பட்டிருக்கிறது.

மார்க்கமும் வசதியும்:—திருவயிந்திரபுரம் சேவித்துக் கொண்டு (திருப்பாபுலியூரென்கிற) கடலூர் நியூ-டவுனுக்கு வந்தால் மோட்டார்பஸ் வண்டிகள் 45 மைல் தூரமுள்ள திருக்கோவிலூரான இத்தலத்திற்குச் செல்லுகின்றன-மற்றும் தென் இந்தியா ரைல்வே மீடர் கேஜ் (S. I. Rly) காட்டுப்பாடி வில்லுபுரம் கிளையனிலுள்ள திருக்கோவலூர் என்னும் ஸ்டேஷனிலிறங்கி தெற்கே 2 மைல் தூரம் பெண்ணையாற்றைக் கடந்தால் இத்தலத்தை யடையலாம். ஸ்டேஷனிலிருந்து வண்டிகள் கிடைக்கும். ஊர் தாலூக்கா பட்டணமாதலால் கடைகளும் ஆகார ஹோட்டல்களுமுண்டு. சந்நதியின் பக்கத்தில் சத்திரமுண்டு. இராமாநுஜ கூடமிருக்கிறது.

நடுநாட்டுத் திருப்பதிகள் 2 முற்றுப் பெற்றன.

# தொண்டைநாட்டுத் திருப்பதிகள் 22.

---

## 43. திருக்கச்சி(அத்திகிரி)வடகலைசந்நதி 74.

(பெருமாள் கோயிலென்றும் பெயர்)

மங்களாசாசனம்

பூதத்தாழ்வாரருளிச்செய்த இரண்டாந் திருவந்தாதி 96-ம் பாசுரம்.

பேயாழ்வாரருளிச்செய்த மூன்றாந் திருவந்தாதி 26-ம் பாசுரம்.

திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரிய திருமொழி 6-ம் பத்து 10-ம் திருமொழி 4-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—வரதாராஜப்பெருமாள், பெருந்தேவித் தாயார், புண்யகோடி விமானம், ஸத்யவ்ரத க்ஷேத்ரம், அநந்தஸரஸ்ஸு, சேஷதீர்த்தம், வராஹ தீர்த்தம், பிரஹ்மதீர்த்தம், பத்மதீர்த்தம், அக்நிதீர்த்தம், குசல தீர்த்தம், வேகவதிநதி, மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், ப்ருகுமஹரிஷிக்கும்-நாரதருக்கும், திருவநந்தாழ்வானுக்கும், கஜேந்த்ராழ்வானுக்கும், ப்ரஹ்மாவுக்கும் ப்ரத்யக்ஷம்.

கீழ்மாடியில் :—வாரணகிரி.

அழகியசிங்கப்பெருமாள், அரித்ராதேவித்தாயார், குகவிமாநம், வீற்றிருந்த திருக்கோலம், ப்ருஹஸ்பதிக்கு ப்ரத்யக்ஷம். [வைகாசிமீ திருவோண நக்ஷத்திரம் முதற்கொண்டு 10 நாள் பிரம்மோற்சவம். மூன்றாம்நாள் பௌர்ணமியன்று கருடசேர்வை.]



அத்திகிரி–வரதராஜர் சந்நதி (Conjeevaram Temple)

விசேஷக்குறிப்பு :—இந்த சந்நதிக்குச் செல்லும் போது கவனிக்கும் விசேஷமாவது : வாரணகிரி என்னும் நரசிங்கப்பெருமாளின் சந்நதி புராதானமா யிருந்திருக்கவேண்டுமென்றும் அதின் மேல்மாடியில் பிரதிஷ்டையாயிருக்கும் வரதராஜரின் ஆலய கட்டிடம் பின்னர் உண்டாயிருக்க வேண்டுமென்றும் காணப்படுகிறது. ஏனென்ருல், மேல் சந்நதிக்குப் போகும் படிக்கட்டுகள் அழகியசிங்கரின் கோயிலுக்குப் பின்னண்டை கட்ட யாதொரு நிமித்தியமுமில்லை இரண்டு சந்நதிகளும் ஒரேகாலத்தில் கட்டப்பட்டிருந்தால் இம்மாதிரியான கட்டிட வித்தியாசங்கள் காணப்படமாட்டா. வரதராஜப்பெருமாள் சந்நதி ஏற்பட்டதற்குக் காரணம் பலர் பலவாருகக் கூறுகின்றனர். அதாவது கி. பி. பதினேராம் நூற்ருண்டில் இக்காஞ்சியின் அதிபதியாயிருந்த கோபால்ராவ் என்பவர் தமது மனேவி மலடியாயிருந்ததினிமித்தம் புத்திரவாஞ்சையினுல் அநேக தெய்வங்களிடம் பிரார்த்தனே செய்தும் ஒன்றும் பலிதமாகாமல் போக, ஒரு நன்பரின் வற்புறுத்துதலின்பேரில் தான் வீரசைவனு யிருந்தபோதிலும் தனக்கு ஒரு புத்திரன் ஜெனித்தால், வரதராஜப் பெருமாளுக்கு ஒரு ஆலயம் கட்டுவதாகப் பிரதிக்ஞை செய்துகொண்டனராம். அவரது விருப்பத்திற்கேற்றவாறு புத்திரப் பேறுண்டானதினிமித்தம், ஒரு சைவக்கோயிலே இடித்து அதன் தளவாடங்களேக்கொண்டு இவ்வாலயத்தைக் கட்டி முடித்ததாகக் கூறுகின்றனர். காலத்தை நோக்கின் இது உண்மையா யிருக்கலாமென்று நம்ப ஏதுவுண்டு. ஏனெனில் ஸ்ரீ பாஷ்யகாரர் என்கிற இராமாநுஜரும் இக்காலத்திலேயே தமது சமயப்பிரசாரம் செய்துவந்தபடியினுல், இக்கூற்று உண்மையென விளம்பல் மிகையாகாது.

இவ்வாலயமானது சுமார் 1200 அடி நீளமும் 800 அடி அகலமும் உள்ளது. விஜயநகரத்தரசர்களில் ஒருவர் இங்கு தன் குடும்ப சகிதமாய் வந்து வரதராஜரைத் தரிசித்துப் போனதாகவும் பொன், வெள்ளி நகைகளேயன்றி இக்கோயிலின் நிர்வாகத்துக்கென்று 17 கிராமங்களையும் சர்வ மானியமாகக் கொடுத்ததாகவும் கூறப்படுகிறது. மற்றும் அச்சுத தேவராயலு மகாபூதகடதானம் அல்லது ஸ்தூலபார தானமென்றும் சொல்லப்படும் (தன் எடைக்கு ஏற்ற அளவு பொன்னை நிறுத்தி) தானம் இவ்விடம் செய்ததாகக் கூறப்படுகின்றது. கி. பி. 1515 வருஷம் விஜய நகரத்தரசனுகிய கிருஷ்ணதேவராயலு இங்கு விஜயஞ்செய்து புண்யகோடி விமானத்தில் சித்திரவேலைகள் செய்து புதுப்பித்ததாகத் தெரியவருகிறது.

இங்கு பெருமாள் அத்திகிரியென்று சொல்லப்பட்ட ஓர் சிறு குன்றின் பேரில் எழுந்தருளியிருக்கின்ருர். இக்கோயிலின் முகப்பிலுள்ள நூற்றுக்கால் மண்டபம் விசேஷித்தது. அதில் விஷ்ணுவின் பல அவதாரங்களும், மற்றும் புராண சம்பந்தமான சித்திரங்களும் சித்தரிக்கப்பட்டுள்ளன. ஒரே கல்லிலிருந்து கோர்வையாக செய்யப்பட்ட விசித்திர சங்கிலித்தொடர்கள் அம்மண்டபத்தின் நான்கு மூலைகளிலும் தொங்குகின்றன. இவ்வாலயத்தின் ஒரு கல்வெட்டு சாசனத்தில் கீழ்க்கண்ட விஷயங்கள் கூறப்பட்டுள்ளன.

"மகம்மதியர் இவ்வூரைச் சூறையாடின காலத்தில் இங்குள்ள விக்கிரகங்களைப் பாடைகளின்மீது வைத்து பிணங்களைப்போல் பிரேத அலங்காரம் செய்து ஊருக்கு வெளியில் கொண்டுபோய்,பின் தஞ்சாவூருக்கும், திருச்

சிராப்பள்ளியைச் சேர்ந்த உடையார்பாளையம் ஜமீனுக்கும் கொண்டுபோனதாகவும், அந்த ஜமீன்தார் சமாதானம் ஆன பின்னிட்டு அவைகளைத் திருப்பியனுப்ப மறுத்ததாகவும், பின் கி. பி. 1799-ம் ஆண்டு இங்கு கொணரப்பட்டதாகவும் தெரியவருகின்றது. அதன் ஞாபகார்த்தமாக இப்போதும் உடையார் பாளைய உற்சவம் என்று ஒரு விழாவும் இங்கு கொண்டாடப்படுகின்றது. இவ்விடம் மர்க்கட நியாயத்தைப் பாராட்டும் வடகலையாருக்கும் மார்ஜால நியாயத்தைப் போற்றும் தென்கலையாருக்கும் உற்சவ நாட்களில் பல தர்க்கங்கள் ஏற்பட்டு முடிவில் அடிதடியாகிறபடியால் போலீஸ் பாதுகாவல் உண்டாகி யிருக்கும்படியான சந்தர்ப்பம் வருடாவருடம் ஏற்படுவதால் சாதாரணமாக உற்சவகாலங்களில் போலீஸ்படைகள் கூட வருவது சகஜமாகிவிட்டது. இவ்வூரில் வடகலையார் நாமம் விசேஷம். விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தின் 108 திருப்பதிகளுள் 14 திருப்பதிகள் இவ்வூருக்குள்ளிருக்கின்றன. அவசரமாய் எல்லா திருப்பதிகளையும் ஓரேநாளில் சேவிக்கலாம்.

சின்னகாஞ்சீபுரத்தில் 5 திருப்பதிகளிருக்கின்றன. (1) அத்திகிரி (2) திருவெஃகா அல்லது யதோத்தகாரி சந்நதி (3) அட்டபுயகம் (4) திருத்தாண்கா (அல்லது விளக்கொளி கோயில்) (5) வேளுக்கை.

பெரிய காஞ்சிபுரத்தில் 9 திருப்பதிகளிருக்கின்றன. (1) பாடகம் அல்லது பாண்டவர் தூதர் சந்நதி (2) நிலாத்திங்கள் துண்டம் (3) திருக்கள்வனூர் (4) பச்சைவண்ணம்-பவளவண்ணர் (5) ஊரம் (உலகளந்த பெருமாள் சந்நதி) (6) காரகம் (7) நீரகம் (8) கார்வா

னம் (9) பரமேச்சுர விண்ணகரம் (வைகுண்டப் பெரு மாள் சந்நதி.)

மார்க்கமும் வசதிக்கும்:—இது (S. I. Rly.) தென் இந்தியா ரையில்வேயின் அரக்கோணம் - செங் கல்பட்டு கிளைலைனில் மத்தியிலுள்ள ஓர் ரயில்வே ஸ்டேஷன். ரயில்வே ஸ்டேஷனிலிருந்து விஷ்ணு சந் நதி சுமார் 2 மைல் தூரத்திலிருக்கிறது. சின்ன காஞ் சிபுரம் அல்லது விஷ்ணுகாஞ்சி என்பர். கட்டை, குதிரை மற்றும் மோட்டார்பஸ் வண்டிகள் சுலப வாடகைக்குக் கிடைக்கும். இவ்வூரில் 26 சத்திரங் களும் மடங்களும் பிரயாணிகள் தங்குவதற்கு உண்டு. அனேக பிராமண சைவாள் ஆகார ஹோட்டல் களும் உண்டு. பெரிய ஊர். சுமார் 80,000 ஜனத் தொகை உள்ளது. புராணீகர் கூற்றின்படி 1000 லிங் கங்களும், ஆயிரம் கோயில்களும் இவ்வூரில் இருப்ப தாகக் கணக்கிடப்படினும் இப்போது இங்கிருப்பவை 108 சிவாலயங்களும் 18 விஷ்ணுவாலயங்களுமாம். ஆனால், ஒவ்வொரு தெருவிலும், வீதியிலும் குறைந் தது 3 அல்லது 4 கோயில்களுள்ளன. அவைகளில் சிறந்து விளங்குபவை ஏகாம்பரேசுவரர் ஆலயம், வரத ராஜப் பெருமாள் என்று அழைக்கப்பெறும் தேவாதி ராஜன் கோயில், காமாட்சியம்மன் கோயில், யதோத்த காரி என்னும் சொன்னவண்ணம் செய்த பெருமாள் கோயில், கைலாசநாதர் கோயில், வைகுண்டப் பெரு மாள் கோயில், சித்ரகுப்தர் கோயில், கச்சப்பேஷ்வரர் கோயில் ஆகியவைகளே. ஊருக்குள் குடிக்கும் நீர்க் குழாய்களும் மின்சார விளக்குகளும் உண்டு.

---



அட்டபுயகரம் (அஷ்டபுஜம் சந்நதி) (Conjeevaram)

## 44. அட்டபுயகரம் (அஷ்டபுஜம்) 75.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
2-ம் பத்து 8-ம் திருமொழி 10 பாசுரங்கள்.
பெரிய திருமடல் 128-ம் பாசுரம்.

பேயாழ்வாரருளிச் செய்த மூன்றாந் திருவந்தாதி
99-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—ஆதிகேசவப் பெருமாள், சகராதரர், அலர்மேல்மங்கை, ககநாக்ருதி விமாநம், கஜேந்த்ராபுஷ்கரிணி, மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், கஜேந்த்ராழ்வானுக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:—இது சின்ன காஞ்சீபுரத்திலுள்ள திருப்பதி. ஹட்சன் பேட்டை தோடியின் சமீபத்திலுள்ளது. வரதராஜப் பெருமாள் சந்நிதிக்கு மேற்கே $\frac{3}{4}$ மைல் தூரத்தில் ராஜ வீதியின் தென்புறத்திலுள்ளது. அர்ச்சகர்கள் கோயிலில் எப்பொழுதும் இருப்பதில்லை. காலை 10 மணிக்குள்ளும், மாலை 6 மணிக்கு மேலும் கோயில் வாசல் திறந்திருக்கும், அப்பொழுதே தரிசினஞ் செய்ய முடியும்.

---

## 45. திருவெஃகா (யதோத்தகாரி சந்நதி) 82.

(சொன்னவண்ணஞ்செய்த பெருமாள் சந்நதி)

மங்களாசாசனம்

திருமழிசையாழ்வாருளிச் செய்த திருச்சந்த
விருத்தம் 63, 64-ம் பாசுரங்கள்.
நான்முகன் திருவந்தாதி 36-ம் பாசுரம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
10-ம் பத்து 1-ம் திருமொழி 7-ம் பாசுரம்.
திருநெடுந்தாண்டகம் 8, 13, 14-ம் பாசுரங்கள்.
சிறிய திருமடல் 70-ம் பாசுரம்.
பெரிய திருமடல் 127-ம் பாசுரம்.

பொய்கையாழ்வாரருளிச் செய்த முதற் றிருவந்தாதி
77-ம் பாசுரம்.

பேயாழ்வாரருளிச் செய்த மூன்றாந் திருவந்தாதி
62, 64, 76-ம் பாசுரங்கள்.

ப்ரபாவம் :—சொன்னவண்ணஞ் செய்த பெருமாள் (யதோத்தகாரி), கோமளவல்லிநாய்ச்சியார், வேதஸாரவிமாநம், பொய்கைப் புஷ்கரிணி, மேற்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், பொய்கையாழ்வாருக்கும், கணிகண்ணருக்கும், ப்ரஹ்மாவுக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இந்த சன்னதிக்கு வடபுறமாயுள்ள பொய்கைப் புஷ்கரிணியில் பொற்றாமரை மலரில் முதலாழ்வார்களில் முதல்வரான பொய்கையாழ்வார் திருவவதரித்தனரென்பர். பின்னர் திருமழிசையாழ்வார் மைலாப்பூரில் பேயாழ்வார் திருவவதரித்தருளின



திருவஃகா -(யதோத்காரி) சொன்னவண்ணஞ் செய்த
பெருமாள் சந்நதி Thiruvekka (Conjeepuram)

கைரவ தீர்த்தக் கரையில் சில காலம் யோகத்தில் எழுந்தருளி முதலாழ்வார்கள் மூவரும் இவருடைய அனுமதிகொண்டு பூசஞ்சாரார்த்தனமாக எழுந்தருளி யபின் திருமழிசைக்கு எழுந்தருளி சில நாள் சென்ற பின்பு ஸத்யவ்ரதம் என்று பேர் பெற்ற கச்சித்திரு வெஃகாவுக்கெழுந்தருளி இப்பொய்கைப் புஷ்கரிணிக் கரையில் 700 வருஷங்கள் யோகத்திலெழுந்தருளி யிருந்து பின்னர் திருக்குடந்தைக்கு எழுந்தருளி ஆராவமுதனைச் சேவித்ததாகத் தெரிகிறது. இத் திருமழிசையாழ்வாரின் சிஷ்யர் கணிகண்ணன் என் பவர் தினந்தோறும் உபாதாநம் பண்ணி வருகை யில் அந்நாட்டில் அரசனான பல்லவராய னென்ப வர் இவரைப் பார்த்துத் தன்னைப் பாடவேணுமென்று அபேக்ஷித்தார். இவர் நான் பகவத்பாகவத விஷய மொழிய நரஸ்துதி பண்ணி ஒருவரையும் பாடுவ தில்லை என்றார். அவன் மிகவும் கோபங்கொண்டு நம்ராஜ்யத்தினின்றும் போம் என்றான். கணிகண் ணர் தம்மாசாரியரான பக்திஸார முனிகளான திரு மழிசையாழ்வார் திருமுன்பே சென்று தண்டம் ஸமர்ப்பித்து நடந்த செய்தியை விண்ணப்பஞ் செய்து "அடியேன் இவ்விடத்தினின்றும் விடை கொள்ளுகிறேன்" என்ன, ஆழ்வாரும் நீர் போகிறீரா கில் நாமிங்கிருக்கப் போகிறோமோ? நாம் புறப்பட் டால் எம்பெருமான் இங்குக் கண்வளரப் போகிறானோ? என்றருளிச் செய்து "வெஃகாவில் துயிலமர்ந்த வெம் பெருமானை யெழுப்பிக் கொண்டு வருகிறோம் என்று சொல்லி திருவெஃகா நாயினார் திருமுன்பே யெழுந் தருளி அவரைப் பார்த்து,

"கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டா—துணிவுடைய
செந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்"

என்று விண்ணப்பஞ் செய்ய, அப்படியே சொன்ன வண்ணம் செய்து இவர் பின்னே யெழுந்தருள, மற்றும் அத்தேசத்தில் ஆலயங்களின் தேவதைகளும் பின் தொடர எழுந்தருளினதால் காஞ்சீமஹாநகரில் மரங்களும் நதி தடாகங்களும் மிகவும் வாடி வடிவழகடங்கி வற்றித் தவிப்பதையும் அந்தந்த ஆலயங்களில் தேவதைகள் ஒருவருமின்றி இருள் மூடி உதிப்பது அஸ்தமிப்பது தெரியாதே நீளிரவான படியையும் ராஜாவும் மந்திரிகளும் கண்டு மிகவும் துக்கித்து இவர்களின்பின் தொடர்ந்து ஓரிரவிருக்கை என்றவூரிலே இவர்களைக்கண்டு காலில் விழுந்து கணிகண்ணரை வேண்டிக்கொண்டார்கள். கணிகண்ணரும் ஆழ்வாரை வேண்டிக்கொள்ள ஆழ்வாரும் சொன்ன வண்ணம் செய்த பெருமாளைப் பார்த்து,

"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டும்—துணிவுடைய
செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்படுத்துக் கொள்"

என்று விண்ணப்பஞ் செய்தார். அப்படியே சொன்ன வண்ணஞ் செய்த பெருமாளும் இடத்திருக்கையைக் கிழாகக் கண்வளர்ந்தருளினார்.

மேற்படி காரணத்தினால் இப்பெருமாளுக்கு சோன்னவண்ணஞ் செய்த பெருமாளென்று திருநாமமாயிற்று.

புஜங்க சயநமாய் ஸ்ரீமந்நாராயணன் அண்டபிண்ட சராசரங்களை யெல்லாம் தன் வயிற்றில் வைத்துக் கொண்டு அவைகள் ஜீரணமாகாமலிருக்கும் பொருட்டு வலது கையைத் தன் தலையின் கீழ் வைத்து சயனிக்கிறதாக வேதம் உண்டு. ஆனால், இச்சந்நதியில் புஜங்க சயநமாயிருக்கும் பெருமாள் சொன்னவண்ணஞ் செய்யுனிமித்தம் அவசரத்தில் தான் இடத்திருக் கையை கீழாக வைத்து கண்வளர்ந்திருப்பது கவனிக்கத்தக்கது.

மார்க்கமும் வசதியும் :—இது சின்ன காஞ்சிபுரத்தில் அஷ்டபுஜம் கோயிலுக்கு எதிரில் வரதராஜப் பெருமாள் சந்நதிக்குப் போகும் ரோட்டிற்கு வடக்கே இடது புறமாயுள்ளது. ஹட்சன் பேட்டை தோடிக்குச் சமீபமாய் 1 பர்லாங்குக்குள் உள்ளது. இவ்விடமிருந்து வரதராஜர் சந்நதி சுமார் முக்கால் ($\frac{3}{4}$) மைல் கிழக்கேயுள்ளது. பங்குனி மாதத்தில் பிரமோத்ஸவம் நடைபெறுகிறது.

சந்நதியில் அர்ச்சகர் பூஜை காலந்தவிர இதர காலங்களிலிருக்கமாட்டார்.

---

## 46. திருத்தண்கா (விளக்கொளிகோயில்) 76.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி 10-ம் பத்து 1-ம் திருமொழி 2-ம் பாசுரம்.

திருநெடுந்தாண்டகம், 14-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—விளக்கொளி, தீபப்ரகாசர், திவ்யப்பிரகாசர், மரகதவல்லித்தாயார், ஸ்ரீகரவிமானம், ஸரஸ்வதிதீர்த்தம், மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், ஸரஸ்வதிக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:—இது சின்ன காஞ்சிபுரத்திலுள்ள திருப்பதி. ஹட்சன்பேட்டை தோடியின் தென்மேற்கே $\frac{1}{4}$-மைல் தூரத்திலும், அட்டபுயகரம் கோயிலுக்கு மேற்கே ஊருக்குள் $\frac{1}{2}$-மைல் தூரத்திலுமுள்ளது. இக்கோயிலுக்கு வெளியில் இடதுகைப் பக்கத்தில் தேசிகர் சந்நதி உளது. இவ்விடத்தைத்தான் ஸ்ரீவேதாந்த தேசிகரின் ஜன்மஸ்தானமென்பர்.

---



திருத்தண்கா (விளக்கொளி கோயில்)
Thiruthanga (Conjeevaram)

## 47. வேளுக்கை 77.

மங்களாசாசனம்

பேயாழ்வாரருளிச்செய்த மூன்றாந்திருவந்தாதி
26, 34-62-ம் பாசுரங்கள்.

திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரியதிருமடல்
127-ம் பாசுரம்.

ப்ரபாவம் :—முகுந்தநாயகன், வேளுக்கைவல்லி, கநகவிமாநம், கநகசரஸ்ஸு, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், ப்ருகுமஹரிஷிக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இப்பொழுது இச்சந்நதி கிடையாது. மூலவர் விக்கிரகம் ஒன்று மாத்திரம் ஒரு ஏரியின் மத்தியிலிருக்கின்றது. ஏரியில் ஜலம் நிறைந்திருந்தால் விக்கிரஹத்தின் பக்கத்திற்குப் போவது கஷ்டம். இதற்குப் பூஜை கிடையாது. சாதாரணமாய் ஜனங்களுக்கு இத்தலம் தெரியாது. பரம வைஷ்ணவர்களுக்கும் சில ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மாத்திரம் இதன் விஷயம் தெரியும். இக்குளமும் ஒரு கிரகஸ்தனுடைய ஜமீனில் சேர்ந்திருக்கிறது.

மார்க்கமும் வசதியும் :—இது சிறிய காஞ்சீபுரத்திலுள்ள திருப்பதி. இது ஊருக்கு ½-மைல் தென்புறமாய் உத்திரமேரூர் போகும் கற்சாலையின் வலதுபுறத்தில் சுமார் 1 பர்லாங்கிலுள்ள குளம். ஊருக்குத் தென்னண்டையுள்ள வேகவதி நதியைத் தாண்டி 2 பர்லாங்கு சென்றால் ஷை குளக்கரையைச் சேரலாம்.

---

## 48. பாடகம் 78.

## (பாண்டவர் தூதர் சன்னதி)

மங்களாசாசனம்

திருமழிசையாழ்வா ரருளிச்செய்த திருச்சந்த விருத்தம் 63-64-ம் பாசுரங்கள்.

திருமங்கையாழ்வா ரருளிச் செய்த பெரிய திருமொழி 6-ம் பத்து 10-ம் திருமொழி 4-ம் பாசுரம்.
பெரிய திருமடல் 127 பாசுரம்.

பூதத்தாழ்வா ரருளிச்செய்த இரண்டாந் திருவந்தாதி 94-ம் பாசுரம்.

பேயாழ்வா ரருளிச் செய்த மூன்றாந் திருவந்தாதி 30-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—பாண்டவதூதர், ருக்மிணி தேவி, ஸத்யபாமை, பத்ரவிமாநம், மத்ஸ்ய தீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், ஹரீத மகாமுனிக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:—இது பெரிய காஞ்சீபுரத்திலுள்ள திருப்பதி. இது ஏகாம்பரேஸ்வரர் சந்நதித் தெருவில் சற்று மேற்கே 1 பர்லாங்கு தூரத்திலிருக்கிறது. கற்பக்கிரகம் வெகுவும் இருட்டாயுள்ளது. மூலஸ்தானம் வெகுவும் பெரியது. உயரமாயுள்ள பெரிய தீவட்டியைக் கொண்டு திருமுகமண்டலத்தை அர்ச்சகர்கள் தரிசிக்க வைக்கிறார்கள்.

---

## 49. நிலாத்திங்கள் துண்டம் 80.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த திருநெடுந்தாண்டகம் 8-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—நிலாத்திங்கள்துண்டத்தான் (சந்திரசூடப் பெருமாள்), நேரொருவரில்லா வல்லி, புருஷ ஸூக்த விமாநம், சந்திர புஷ்கரிணி, மேற்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், சிவனுக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும் :—இது பெரிய காஞ்சீபுரத்தி லுள்ள திருப்பதி. இது ஏகாம்பரீஸ்வரர் ஆலயத்தில் உள் பிரகாரத்தில் வலதுகைப் புறத்தில் அமைக்கப் பட்டுள்ள வெகு சிறிய சந்நதி. தினமும் பூஜை நடக்கிறது. மற்ற விஷயங்களுக்கு 50-வது திவ்யதேசமான திருக்கள்வனூர் குறிப்பின் விவரத்தில் பார்க்கவும். ப்ரபாவத்தில் கண்டிருக்கும் விவரங்கள் காணப்படுகிறதில்லை.

---

## 50. திருக்கள்வனூர் 85.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச்செய்த திருநெடுந்தாண்டகம் 8-ம் பாசுரம்.

ப்ரபாவம் :—ஆதிவராஹப் பெருமாள், அஞ்சிலை வல்லி நாய்ச்சியார், வாமந விமாநம், நித்யபுஷ்கரிணி, மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், அஸ்வத்த நாராயணனுக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) பெரிய காஞ்சீபுரத்திலுள்ள காமாக்ஷியம்மன் சந்நதியின் கற்பக்கிரகத்திற்குள் நுழையும் பொழுது வாசலுக்கு இடதுகைப்புறமாய் ஓர் சிறு விக்கிரகமும் எதிரில் வலதுகை மூலையில் வராஹாவதாரமாயிருக்கும் ஓர் விக்கிரகமும் இப்பெருமாளென்பர். இதற்கு நாச்சியார் விமாநம் புஷ்கரிணி முதலானவைகள் இல்லாமலிருப்பதாகக் காண்கிறது. இது சந்நதியாய் பாவிக்கப்படாமல் சாமானிய விக்கிரகங்களிலொன்றாய்க் காண்கிறது. சகஜமாய் அவ்விடம் வரும் ஜனங்களுக்கு இது விஷயம் தெரியாது. காமாக்ஷியம்மன் தேவஸ்தானத்தில் பூஜைசெய்யும் குருக்கள் அல்லது மற்ற பூஜையினிமித்தமிருக்கும் தொழிலாளிகளைக் கேட்டால் காண்பிப்பார்கள். பெருமாளின் ஸ்தானபேதமும் காண்கிறது.

இக்கோயில் குளத்தின் ஈசான்ய மூலையில் இப்பொழுது புதிதாய் ரிப்பேர் செய்திருக்கும் 'நின்றான்' 'இருந்தான்' 'கிடந்தான்' என்கிற சந்நதி ஒன்றுளது. மூன்று மாடிகளில் மூவருளர். திருமழிசையாழ்வாரருளிச் செய்த திருச்சந்த விருத்தத்தின் 64-ம் பாசு

ரத்திலும், திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி 2-ம் பத்து 4-ம் திருமொழி 1-ம் பாசுரத்திலும், பொய்கையாழ்வாரருளிச் செய்த முதற்றிருவந்தாதியின் 77-ம் பாசுரத்திலும் புகழ்கின்ற 'நின்றானிருந்தான் கிடந்தான்' என்னும் பெயர்கொண்ட பெருமாளிவரோ?

மார்க்கமும் வசதியும்:—இது பெரிய காஞ்சீபுரத்திலுள்ள காமாக்ஷியம்மன் சந்நதிக்குள்ளிருக்கும் திருப்பதி.

(குறிப்பு) நிலாத்திங்கள்துண்டம் என்னும் திருப்பதி பெரிய காஞ்சீபுரத்திலுள்ள ஏகாம்பரேசுவரர் ஆலயத்தின் உட்பிராகாரத்திலிருக்கும் திருப்பதி.

வீரவைஷ்ணவர்கள் சிவன் கோயிலுக்குப் போகமாட்டார்கள். அப்படிப் போகாதவர்களுக்கு இந்த இரண்டு திருப்பதிகளையும் சேவிக்க முடியாது. ஆனால், முற்காலத்தில் இவ்விரண்டு திருப்பதிகளையும் மங்களாசாசனம் செய்துள்ள திருமங்கையாழ்வாருக்கு சிவத்வேஷ முண்டாயிருந்தால் இந்தத் திருப்பதிகளுக்கு மங்களாசாசனம் செய்ய சிவன் கோவில்களுக்குள் சென்றிருப்பாரோ என்னும் கேள்வி உண்டாகிறது. ஸ்ரீ பாஷ்யகாரரான இராமாநுஜருக்கு முன்னும் வைஷ்ணவ மதமுண்டு. அவ்வைஷ்ணவர்களுக்கு சிவன் விஷ்ணு என்னும் பேதங்கிடையாது. இராமாநுஜர் காலத்தில் சைவ அரசர்களான சோழர்கள் வைஷ்ணவர்களான இராமாநுஜரின் சிஷ்யர்களை "சிவாத் பரதரம் நாஸ்தி" சிவனுக்கே பரத்துவம் உண்டென சொல்லுமாறும், அவ்வாறான சாசன ஓலைகளுக்குக் கையெழுத்து போடுமாறும் வைஷ்ணவர்களையெல்லாம்

னிர்பந்தித்து கடினமான சிக்ஷைகள் செய்துவந்தமை யால் இராமாநுஜர்காலம் முதற்கொண்டும், பின்னிட் டும் இவ்வைஷ்ணவமதத்தார் சைவமதஸ்தர்களை த்வே ஷிக்கவாரம்பித்துவிட்டார்கள். இதுவே இன்றும் பழக்கமாய்விட்டது.

அக்காலத்திலேயே இராமாநுஜர் என்ற ஸ்ரீபாஷ்ய காரர் சுமார் 80 வயதுள்ளவரா யிருந்தாலும் சைவர்க ளான சோழ மன்னர்களின் கொடுமைகளுக்குப் பயந்து மைசூர் ராஜ்ஜியத்தின் தொண்டனூர் சேர்ந்து, அவ் விடமிருந்த பிட்டிதேவ அல்லது விட்டலதேவராய னேனும் ஜைனராஜனை வைஷ்ணவனாகச் செய்து, அவ னுக்கு விஷ்ணுவர்த்தனராயனேனுந் திருநாமம் சாற்றி அவனுதவியால் சிதலமாயிருந்த யதுகிரி யென்னும் திருநாராயணபுரமென்பதை மறுபடியும் புதுப்பித்துக் கட்டியருளினர். அச்சமயத்திலேயே இவர் சிஷ்யரான கூறத்தாழ்வார் காஞ்சியில் சோழமன்னனின் சபையில் கண்களை யிழந்தது.

---



பவளவண்ணம் Pavalavannam (Conjeevaram)



பச்சைவண்ணர் Pachaivannar (Conjeevaram)

## 51. பவளவண்ணம் 86.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த திருநெடுந்தாண்டகம் 9-ம் பாசுரம்.

ப்ரபாவம் :—பவளவண்ணப்பெருமாள், பவளவல்லி நாய்ச்சியார், ப்ரவாளவிமாநம், சக்ரதீர்த்தம், மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், அசுவனி தேவதைகளுக்கும் பார்வதிக்கும் ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும் :—இது பெரிய காஞ்சீபுரத்திலுள்ள திருப்பதி. இது ஏகாம்பரேஸ்வரர் கோயிலுக்கு கிழக்கே ½ மைலிலும் காமாக்ஷியம்மன் சந்நதிக்கு வடகிழக்கே ½ மைலிலும் பச்சைவண்ணர் சந்நதிக்கு நேர்கிழக்கே 2 பர்லாங்கிலுமுள்ளது.

(குறிப்பு) பவளவண்ணம் சந்நதி வீதியின் நேர் மேற்கே பச்சைவண்ணர் என்னும் சந்நதி ஒன்றிருக்கிறது. இப்பின்சொன்ன சந்நதி ஆழ்வார்கள் மங்களாசாசனமாகப் பெற்ற சந்நதியாகக் காணவில்லை. புராணங்களில் சேர்க்கப்பட்டிருக்கும் சந்நதியாகவும் பழக்கத்தில் பச்சைவண்ணர்—பவளவண்ணம் என்று வழங்கும்படியான சந்நதியாகக் காண்கிறது. ஆனால், அக்கோயிலின் அர்ச்சகர்கள் இதுவும் ஆழ்வார் மங்களாசாசனம் செய்த சந்நதியென்று தமக்குத் தெரிந்த ஓர் பாசுரத்தைச் சொல்லுவார்கள். நாலாயிரப் பிரபந்தத்தில் இந்த சந்நதியைப்பற்றிய பாசுரம் ஒன்றும் காணப்படவில்லை.

---

# 52. பரமேச்சுர விண்ணகரம்

## (பரமபதநாதன் அல்லது வைகுண்டப் பெருமாள் சந்நதி) 87.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி. 2-ம் பத்து 9-ம் திருமொழியின் 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—பரமபதநாதன், வைகுந்தவல்லி, முகுந்த விமாநம், அயிரம தீர்த்தம், மேற்கே திருமுக மண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், பல்லவராயற்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) :—இச்சந்நதியின் விமாநம் இரண்டு அந்தஸ்துள்ளது. கீழ்ச் சந்நதியில் வைகுண்டநாதனும், முதல் அந்தஸ்தில் சயநத் திருக்கோலமாகவும், அதற்கு மேல் அந்தஸ்தில் நின்ற திருக்கோலமாகவும் பெருமாள் சேவை சாதிக்கிறார். இம்மாதிரி திருக்கோட்டியூரிலுமுண்டு சந்நதியின் உள் பிரகாரச் சுவர்களில் சிற்ப சாஸ்திர விதிப்படி அதிக புராதன சுத்தமில்லாத கல்வெட்டுப் பிரதிமைகள் செதுக்கப் பட்டிருக்கின்றன.

மார்க்கமும் வசதியும்:—இது பெரிய காஞ்சீபுரத்திலுள்ள திருப்பதி. காஞ்சீபுரம் ரெயில் ஸ்டேஷனுக்கு 2 பர்லாங்கிலுள்ள சந்நதி.

---

## 53. ஊரகம் (உலகளந்தப் பெருமாள் சந்நதி) 81.

மங்களாசாசனம்

திருமழிசையாழ்வாரருளிச்செய்த திருச்சந்த விருத்தம் 63, 64-ம் பாசுரங்கள்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த திருநெடுந் தாண்டகம் 8, 13-ம் பாசுரங்கள்.

சிறிய திருமடல் 70-ம் பாசுரம்.

பெரிய திருமடல் 128-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—உலகளந்தபெருமாள், திருவிக்கிரமன், அமுதவல்லிநாய்ச்சியார், ஸாரஸ்ரீகரவிமாநம், நாகதீர்த்தம், மேற்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், ஊரகமென்ற ஆதிசேஷனுக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும், வசதியும் :—இது பெரிய காஞ்சீபுரத்திலுள்ள திருப்பதி. இப்பொழுது ஏற்படுத்தப் பட்டிருக்கும் மோட்டார் பஸ் ஸ்டேண்டுக்குச் சமீபத்திலுள்ளது. இந்தச் சந்நதியின் பிரகாரத்திற்குள்ளேயே மற்றும் 3 திருப்பதிகளாகிய (54) நீரகம் (55) காரகம், (56) கார்வானம் என்னும் சிறு சிறு சந்நதிகளிருக்கின்றன. ஆகையால், இந்த சந்நதிக்குச் சென்றால் ஓரே தடவையில் 4 திருப்பதிகளைச் சேவிக்கலாம். ஆனால், அர்ச்சகர்கள் எப்பொழுதும் மற்ற மூன்று சந்நிதிகளையும் பூட்டுப் போட்டே வைத்திருப்பார்கள். சாதாரண ஜனங்களுக்கு இந்த 3 சந்நிதிகளின் விசேஷம் தெரியாது. சாமானிய ஜனங்கள் இந்த சந்நிதிகளுக்கு தரிசினார்த்தம் போகிறதில்லை. மற்றும் இச்சிறு சந்நதிகளின் ப்ரபாவத்தில் கண்டிருக்கும்படியான விமாந தீர்த்த முதலான விசேஷங்கள் இப்பொழுது காணப்படுகிறதில்லை.

## 54. நீரகம் 79.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த திருநெடுந்தாண்டகம் 8-ம் பாசுரம்.

ப்ரபாவம் :—ஜகதீசப்பெருமாள், நிலமங்கை வல்லி, ஜகதீச்வர விமானம், அக்ரூர தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், அக்ரூரமகா முனிக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும் :—இது பெரிய காஞ்சீ புரத்திலுள்ள திருப்பதி. வெகு சிறிய சந்நிதி. 53-வது திருப்பதியாகிய ஊரகம் (உலகளந்தப் பெருமாள்) சந்நிதியின் பிரகாரத்தில் வடபுரமுள்ளது. இச்சந்நதி பூஜை காலம் தவிர மற்ற காலங்களில் எப்பொழுதும் மூடப்பட்டேயிருக்கும். ஸ்ரீவைஷ்ணவர்களைத் தவிர இதரர்களுக்கு இது மங்களாசாசனமான சந்நதி யென்ற விவரம் தெரியாது.

## 55. காரகம் 83.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த திருநெடுந்தாண்டகம் 8-ம் பாசுரம்.

ப்ரபாவம் :—கருணாகரப்பெருமாள், பத்மாமணி நாய்ச்சியார், வாமநவிமானம், அக்கிராய தீர்த்தம், தெற்கேதிருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், கார்ஹ ரிஷிக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும் :—இது ஒரு சிறிய சந்நதி. இது பெரிய காஞ்சீபுரத்திலுள்ள 53-வது திருப்பதியாகிய ஊரகம் (உலகளந்த பெருமாள்) சந்நதியின் உட்பிரகாரத்திலுள்ளது.

## 56. கார்வானம் 84.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த திருநெடுந்தாண்டகம் 8-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—கள்வர், கமலவல்லி நாய்ச்சியார், புஷ்கலவிமாநம், கௌரி தடாகம், மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், பார்வதிக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:—இது பெரிய காஞ்சீபுரத்திலுள்ள 53-வது திருப்பதியாகிய ஊரகம் (உலகளந்தப் பெருமாள்) என்னும் சந்நதியின் பிரகாரத்திலிருக்கும் ஓர் சிறிய சந்நதி.

---

## 57. திருப்புட்குழி 88.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வா ரருளிச் செய்த பெரிய திருமொழி 2-ம் பத்து, 7-ம் திருமொழி, 8-ம் பாசுரம்; பெரிய திருமடல் 117-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—விஜயராகவப்பெருமாள், மரகதவல்லி நாய்ச்சியார், விஜயகோடி விமாநம், ஜடாயுதீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், ஜடாயுவுக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு):—இந்தச் சந்நதியின் அர்ச்சகர் இந்த ஊரில் குடியிருப்பதில்லை. சுமார் இரண்டு மைல் தூரமுள்ள ஒரு கிராமத்தில் குடியிருந்துகொண்டு காலை மாலை பூஜை செய்துவிட்டுத் தன் கிராமத்திற்குச் சென்றுவிடுகிறார். ஆகையால், காலை 10 மணிக்குள்

ளும் மாலை 6 மணிக்கு மேலும் இச்சந்நிதிக்கு சேவை செய்யப் போனால் சேவை கிடைக்கும்.

மார்க்கமும் வசதியும்:—இந்த ஊர் பெரிய காஞ்சீபுரத்திற்கு மேற்கே கற்சாலை மார்க்கமாய் 7 மைலிலிருக்கிறது. காஞ்சிபுரம் பஸ்ஸ்டான்டிலிருந்து அடிக்கடி வேலூருக்கு பஸ் வண்டிகள் போகவும் வரவுமிருக்கின்றன. அந்த வேலூர் போகும் பஸ் வண்டியில் நபர் ஒன்றுக்கு 0-4-0 (நாலணா) சார்ஜு கொடுத்து வழியிலிருக்கும் திருப்புட்குழி என்னும் கிராமத்திலிறங்கி தென்னண்டை 1 பர்லாங்கு சென்றால் சந்நிதி சேரலாம். இவ்வூரில் அனுகூலமான சத்திரங்கள் கிடையாது. சிறிய கிராமம். பஸ் இறங்கும் ரோட்டின்பேரில் பானு செட்டியாருடைய ஒரு சிறிய சத்திரமுண்டு. இது குடும்பஸ்தர்கள் தங்குவதற்கு சரியான இடமன்று. யாத்ரீகர் தங்குவதற்கு ஊருக்குள் இட வசதி செய்துகொள்ள வேண்டும். ஆனால், சமையல் பதார்த்தங்கள் கிடைக்கக்கூடிய கடைகள் உண்டு. இதுவரையிலும் பிராமணர்கள் ஹோட்டல்கள் இவ்விடம் வைக்கப்படவில்லை. காஞ்சிபுரத்திலிருந்து குதிரை, மாட்டு வண்டிகள் கிடைக்கும்.

---

## 58. திருக்கடிகை (சோளசிங்கபுரம் அல்லது சோளிங்கபுரம்) 95.

மங்களாசாசனம்

பேயாழ்வாரருளிச் செய்த மூன்றாந்திருவந்தாதி
61-ம் பாசுரம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த சிறிய திருமடல்
73-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—யோகநரசிம்ஹர், அம்ருதவல்லித் தாயார், சிங்ககோட்டத்திவிமாநம், அம்ருததீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக் கோலம், சிறிய திருவடிக்கு ப்ரத்யக்ஷம். தக்கான் அக்காரக் கனிப் பெருமாள், தக்கான் குளம்.

(குறிப்பு):—இந்த யோகநரசிம்மர் சந்நதி 320 அடி உயரமுள்ள செங்குத்தான ஒரு கற்பாறைக் குன்றின்மீதுளது. அடிவாரத்திலிருந்து சந்நதிக்கு 1056 படிக்கட்டுகளுண்டு. குன்றின் மேல்பாகத்தி லேற வெகுவும் கடினம். பகல் 12 மணிக்குத்தான் சந் நதி திறக்கப்பட்டு பூஜையாகிறது. அதற்குமுன் சென் றால் 12 மணிவரையில் தரிசனத்திற்குக் காத்துக் கொண்டிருக்க வேண்டும். அர்ச்சகரும் மற்று கோயில் சிப்பந்திகளும் அடிவாரத்திலிருந்துதான் மேலே வர வேண்டும். இக்குன்றுக்குக் கீழ்புறமாய் சுமார் 200 அடி உயரமுள்ள ஒரு சிறிய குன்றிருக்கிறது. அதின்மேல் சிறிய திருவடி யென்கிற ஆஞ்சநேயர் சந்நதி யிருக்கிறது. இது மேற்கே நரசிம்ஹரைப் பார்த்தாப் போலிருக்கிறது. அடிவாரத்திலிருந்து சந்நதிக்கு 500 படிக்கட்டுகளிருக்கின்றன. இது கடினமான வழியல்ல.

பெரிய குன்றின் அடிவாரத்திற்கும் இந்த சிறிய குன்றின் அடிவாரத்திற்கும் சுமார் 2 பர்லாங்கு தூரமிருக்கிறது. இவ்விரண்டுவிடங்களிலும் அநேக சத்திரங்களுண்டு. சாமானிய ஜனங்களின் நம்பிக்கையாவது, யாருக்காகிலும் பெண்களுக்கு பிசாசு பிடித்திருந்தால் இத்தலம் தரிசித்தமாத்திரத்தில் பிசாசு ஓடிப்போய் மக்கட்பேறடைவார்கள் வியாதியஸ்தர்கள் தங்கள் வியாதியினின்றும் சுகமாய்விடுகிறார்கள் என்ற நம்பிக்கையுடன் எப்பொழுதும் இந்த ஸ்தலத்திற்கு வந்து மாதகாலங்கள்வரையிலும் அந்தச்சத்திரங்களில்குடியிருந்து கொண்டு சந்நதியில் சேவை செய்கிறார்கள். மற்றும் தங்கள் தங்களுக்கு பிசாசுவிட்டதென்றும் வியாதி தீர்ந்ததென்றும் தங்களுக்கு இராக்கனவு உண்டாகிறதென்றும், அப்படி கனவு காணும்வரையிலும் வருஷாந்திர காலவரையிலும், இத்தலத்திலிருந்துவிடுகிறார்கள். இவ்விடத்திய காற்றும் ஆரோக்கியமானது. மலையடிவாரத்தில் கொண்டபாளையம் யென்னும் ஓர் சிறிய கிராமமிருக்கிறது. அதிலுள்ள ஜனங்கள் எப்பொழுதும் வரும் பிரயாணிகளுக்குப் பால் தயிர் விற்றே ஜீவனம் செய்துகொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு வீட்டிலும் எப்பொழுதும் பால் தயிர் கிடைக்கும். அவ்வூரில் இரண்டு சில்லரைக் கடைகளுண்டு. மாட்டுவண்டிகளைப் பிரயாணிகளின் சவுகரியத்தின் பொருட்டு வாடகைக்கு வைத்திருக்கிறார்கள். இம்மலையடிவாரத்திலிருந்து சோளிங்கபுர மென்னும் தாலூகா ஊர் மேற்கில் $1\frac{1}{2}$ மைல் தூரத்திலுள்ளது. ஊருக்குள் ஆதிகேசவப் பெருமாளென்னும் ஓர் சந்நதியுண்டு. இதில் ஒரு விசேஷமுண்டு. பூர்வத்திலிருந்த.

சந்நதியின் முன்புறத்தில் ஓர் புதிய சந்நதியைக் கட்டியிருக்கிறார்கள். காரணம் விளங்கவில்லை. மலைமேலிருக்கும் உற்சவரை இந்தச் சந்நதியில் வைத்திருக்கிறதாகக் கூறுகிறார்கள். இந்த ஆதிகேசவப் பெருமாளென்று அழைக்கப்படுபவரே ப்ரபாவத்தில் கண்டிருக்கும் தக்கான் அக்காரக்கனிப் பெருமாளோ ?

**மார்க்கமும் வசதியும்:**—மதராஸ் தென் மராட்டா ரெயில்வே (M & S. M. Rly.) மெயின் லைனில் ஷோலிங்கர் (Sholingar) என்று சொல்லும் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து மோட்டார்பஸ் வண்டிகள் சோளிங்கபுரத்திற்கு ஓடுகின்றன. அவ்விடமிருந்து மாட்டு வண்டிகள் 1½ மைல் தூரமுள்ள மலையடிவாரத்திற்கு சுலபவாடைக்குக் கிடைக்கும். மலை, ஸ்டேஷனிலிருந்து ஊருக்குப் போகும் கற்சாலையில் இடபுறமாய் ¾ மைல் தூரத்திலிருக்கிறது. ஊரில் சத்திரமும் ஹோட்டலுமுண்டு. மலையடிவாரத்தில் சத்திரங்களுண்டு ஹோட்டல்களில்லை.

---

## 59. திருவெவ்வுள் (திருவள்ளூர்) 90.

மங்களாசாசனம்

திருமழிசையாழ்வாருளிச் செய்த நான்முகன் திருவந்தாதி 36-ம் பாசுரம்.

திருமங்கையாழ்வா ரருளிச் செய்த பெரிய திருமொழி 2-ம் பத்து 2-ம் திருமொழி 10 பாசுரங்கள்; பெரிய திருமடல் 116-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—வீரராகவப் பெருமாள், கநகவல்லித் தாயார், விஜயகோடி விமாநம், ஹ்ருத்தாபநாச தீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், புஜங்க சயநம், தீக்ஷாரண்ய க்ஷேத்ரம், ஈகாரண்யவநம், சாலிஹோத்ர முனிவருக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு):—இங்குள்ள ஹ்ருத்தாபநாச தீர்த்தம் என்னும் குளத்தில் ஒவ்வொரு அமாவாசைகளிலும் நூற்றுக்கணக்கான ஜனங்கள் வந்து ஸ்நானம் செய்கிறார்கள். வெகு புண்ணிய தீர்த்தமென்று நம்புகிறார்கள். இதைப்பற்றி யொருபுராணக் கதையுமுண்டு. வருஷத்தில் 2 பிரம்மோற்சவங்கள் நடைபெறுகின்றன. கோயிலின் கட்டிடங்கள் புதிப்பிக்கப்பட்டிருக்கின்றன. சாமானிய ஜனங்கள் இத்தலத்தின் பெருமாளை வைத்திய வீரராகவரென்று சொல்லுவார்கள்.

மார்க்கமும் வசதியும்:—மதராஸ் தென்மராட்டா ரெயில்வேயின் (M. &. S. M. Ry.) மெயின் லைனில் அரக்கோணம் ஸ்டேஷனுக்கு கிழக்கேயுள்ள திருவள்ளூர் என்னும் ஸ்டேஷனிலிருந்து வடக்கே கற்சாலை மார்க்கமாய் 2½ மைல் தூரத்திலிருக்கும் சந்நதி. குதிரை வண்டிகள் சுலப வாடகைக்கு 4-அணாவிற்கு கிடைக்கும். ஸ்டேஷனிலிருந்து டிராம் வண்டிகள் நபர் ஒன்றுக்கு 1 அணாவுக்கு ஏற்றிக்கொண்டு போகின்றன.



திருவெவ்வுள் (திருவள்ளூர்) (Trivellore)



திருநின்றவூர் (தின்னனூர்) (Thinnanur Temple)

## 60. திருநின்றவூர் (தின்னனூர்) 89.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வா ரருளிச் செய்த பெரிய திருமொழி
2-ம் பத்து 5-ம் திருமொழி 2-ம் பாசுரம்;
7-ம் பத்து 10-ம் திருமொழி 5-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—பக்தவத்ஸலர், பத்தராவிப்பெருமாள், என்னைப்பெற்றதாயார், ஸ்ரீனிவாஸ விமாநம், வருண புஷ்கரிணி, வ்ருத்தக்ஷீர நதி, கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், வருணனுக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:—மதராஸ் தென் மராட்டா (M & S. M. Ry.) ரெயில்வே மெயின் லைனில் மதராசுக்கும் திருவள்ளூர் ஸ்டேஷனுக்கும் மத்தியிலுள்ள தின்னனூர் என்னும் ரெயில்வே ஸ்டேஷன். சந்நதி ஸ்டேஷனிலிருந்து 3/4 மைல் தூரத்தில் தெற்கிலுள்ளது. ஸ்டேஷனிலிருந்து போக வர குதிரை மாட்டு வண்டிகள் சுலப வாடகைக்குக் கிடைக்கும். இவ்விடம் சத்திரமும் பிராமணாள் ஹோட்டல்களும் உண்டு.

---

## 61. திருவல்லிக்கேணி (ப்ருந்தாரண்ய க்ஷேத்ரம்) 94.

மங்களாசாசனம்

பேயாழ்வாரருளிச்செய்த மூன்றாந்திருவந்தாதி 16-ம் பாசுரம்.

திருமழிசையாழ்வாரருளிச் செய்த நான்முகன் திருவந்தாதி 35-ம் பாசுரம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி 2-ம் பத்து 3-ம் திருமொழி 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—பார்த்தசாரதி, ருக்மிணிப்பிராட்டி, அநிருத்ரர், ப்ரத்யும்நர், பலராமர், ஸாத்யகி, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், (வ்யாஸ மஹரிஷியினால் பிரதிஷ்டை செய்யப்பட்டு ஆத்ரேய மஹரிஷியினால் ஆராதிக்கப்பட்டவர்), ஸுமதி யென்னும் ராஜாவுக்கும், தொண்டைமான் சக்ரவர்த்திக்கும், அர்ஜுநனுக்கும் ப்ரத்யக்ஷம்.

மந்நாதன் (ரங்கநாதன்)
புஜங்கசயநம்.
வேதவல்லித்தாயார்
கிழக்கே திருமுகமண்டலம்

ப்ருகு மஹரிஷியினால் கன்னிகாதாநம் பண்ணப் பெற்றவர்.

தெள்ளியசிங்கர் (நரசிம்ஹர்)
மேற்கே திருமுகமண்டலம்.
வீற்றிருந்த திருக்கோலம்

அத்ரி ஜாலி மஹரிஷிகளுக்குப் ப்ரத்யக்ஷமாய் மோக்ஷம் தந்தவர்.

சக்ரவர்த்தித்திருமகன் (ஸ்ரீராமர்)
பரதாழ்வான்
சத்ருக்நாழ்வான்
இளையபெருமாள் (லக்ஷ்மணர்)
மைதிலி (சீதை)
தெற்கே திருமுகமண்டலம்
நின்றதிருக்கோலம்
மதுமான் மஹரிஷிக்கு ப்ரத்யக்ஷம்
தேவப்பெருமாள்
கிழக்கே திருமுகமண்டலம்
கருடாரூடர்
ஸப்த ரோமாவுக்கு ப்ரத்யக்ஷம்
சேஷவிமாநம்.

இந்திர தீர்த்தம், ஸோம தீர்த்தம், மீந தீர்த்தம், அக்நி தீர்த்தம், விஷ்ணு தீர்த்தம், இவ்வைந்து தீர்த்தங்களால் சூழப்பட்ட கைரவணி என்னும் ஸரஸ்ஸு. ப்ருகு, அத்ரி, மரீசி, மார்க்கண்டேயர், ஸுமதி, சப்த ரோமா, ஜாலி என்னும் 7 மஹரிஷிகளும் தவம்புரிந்தவிடம்.

(குறிப்பு) இந்த ஸ்தலத்திற்கு அருகில் சுமார் 2 மைலிலுள்ளது மைலாப்பூர் என்னும் ஸ்தலம். அவ்விடமுள்ள கேசவப் பெருமாள் சந்நதியின் அருகிலுள்ள திருக்கிணற்றில் செவ்வல்லிமலரில் முதலாழ்வார்களில் மூன்றவதான பேயாழ்வார் திருவவதரித்தருளினதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் மேல் கண்ட கேசவப் பெருமாள் மங்களாசாசமாகப் பெற்றவராகத் தெரியவில்லை. பக்கத்திலுள்ள திருவல்லிக்கேணியை "மாடமாமயிலைத் திருவல்லிக்கேணி கண்

டேனே" யெனத் திருமங்கையாழ்வாரும் "திருவல்லிக் கேணியான்" என்று பேயாழ்வாரும், "மாமயிலைமாவல் லிக்கேணியான்" என திருமழிசையாழ்வாரும் மங்களா சாசனம் செய்திருக்கின்றனர். இந்தக் கோயிலுக்குள் 5 சந்நதிகளிருக்கின்றன.

மார்க்கமும் வசதியும்:—மதராஸ் தென்மராட்டா ரெயில்வே (M. &. S. M) ஸ்டேஷனுகிய மதராஸ் சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து தெற்கே 2 மைலிலும், தென்னிந்தியா ரெயில்வே (S. I. Rly) ஸ்டேஷனுகிய மதராஸ் எழும்பூர் ஸ்டேஷனிலிருந்து தென் கிழக்கே 2 மைலிலும் இந்த சந்நதியிருக்கிறது. குதிரை, மாட்டு, மோட்டார், டிராம் வண்டிகள் ஏராளமாய்க் கிடைக்கும். பெரிய பட்டணமாகையால் சகல செள கரியங்களுமுண்டு.

---

## 62. திருநீர்மலை 91.

மங்களாசாசனம்

பூதத்தாழ்வாரருளிச்செய்த இரண்டாந் திருவந்தாதி
46-ம் பாசுரம்.

திருமங்கையாழ்வா ரருளிச் செய்த பெரிய திருமொழி
2-ம் பத்து 4-ம் திருமொழி 10 பாசுரங்கள்.
6-ம் பத்து 8-ம் திருமொழி 4-ம் பாசுரம்.
7-ம் பத்து 1-ம் திருமொழி 7-ம் பாசுரம்.
8-ம் பத்து 2-ம் திருமொழி 3-ம் பாசுரம்.
10-ம் பத்து 1-ம் திருமொழி 1-ம் பாசுரம்.
திருநெடுந்தாண்டகம் 18-ம் பாசுரம்.
சிறிய திருமடல் 73-ம் பாசுரம்.
பெரிய திருமடல் 130-ம் பாசுரம்.




ப்ரபாவம்:—நீலமுகில்வண்ணன், ரங்கநாயகன், நீர்வண்ணன், அரங்கநாதன், அணிமாமலர் மங்கை, தோயகிரி விமாநம், மணிகர்ணிகதீர்த்தம், தெற்கே திருமுகமண்டலம், மாணிக்க சயநம், தொண்டைமான் சக்ரவர்த்திக்கும், ப்ருகு, மார்க்கண்டேயருக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு):—இவ்வூரில் சுமார் 200 அடி உயரமுள்ள ஓர் சிறிய மலையிருக்கிறது. மலையின் அடிவாரத்தில் நீலமுகில்வண்ணப்பெருமாளின் பெரிய சந்நதியும், மலையின்பேரில் 3 சந்நதிகளுமிருக்கின்றன. அதாவது, ரங்கநாதன், சாந்த நரசிம்மன், சக்ரவர்த்தித் திருமகன் சந்நதிகள் ஒன்றின்பின் ஒன்றாயும் வெகு இருட்டாயுமிருக்கின்றன. மேல் சந்நதிக்கும் கீழ் சந்நதிக்கும் ஒரே அர்ச்சகரிருக்கிறதினால் மேல் சந்நதிகளில் ஸ்தல சுத்தமில்லை.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரெயில்வேயின் (S. I. Rly) மெயின் லைனில் எழும்பூருக்குத் தெற்கிலுள்ள பல்லாவரம் என்னும் ரெயில் ஸ்டேஷனிலிறங்கி கற்சாலை மார்க்கமாய் $3\frac{1}{2}$ மைல் செல்ல வேண்டும். ஊருக்குள் குதிரை, மாட்டுவண்டிகள் போக வர ரூ. 0-6-0 அல்லது 0-8-0 வுக்குக் கிடைக்கும். இது சிறிய கிராமமாயிருந்தாலும் சத்திரங்களும், கடைகளும், ஜலவசதியு மிருக்கின்றன.

---

## 63. திருவிடவெந்தை 92.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரியதிருமொழி
1-ம் பத்து 8-ம் திருமொழி 4-ம் பாசுரம்.
2-ம் பத்து 7-ம் திருமொழி 10 பாசுரங்கள்.
சிறிய திருமடல் 73-ம் பாசுரம்.
பெரிய திருமடல் 119-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—நித்யகல்யாணர், கோமளவல்லி நாய்ச்சியார், கல்யாண விமாநம், கல்யாண தீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், மார்க்கண்டேயருக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இது கீழ் சமுத்திரக் கரையின் மீதுள்ள ஓர் சிறிய கிராமம். மணல் மேட்டிலுள்ளது. இக்கிராமத்திற்கு மேல்புரம் வயல்கள் நிறைந்த ஜமீன்களுண்டு. மதராசிலிருந்து வரும் பக்கிங்ஹாம் கனல் இக்கிராமத்திலிருந்து சுமார் ¾ மைல் மேலண்டை தெற்காக மஹாபலிபுரத்திற்கு ஓடுகிறது. சந்நதியிலிருந்து கிழக்கே இரண்டு பர்லாங்கில் சமுத்திரமிருக்கிறது. மூலஸ்தானம் நித்ய கல்யாணர், வராகரூபி, இடது புஜத்தில் திலவல்லி நாச்சியாருடன் தரிசினமாகிறது. வைஷ்ணவ 108 திருப்பதிகளுக்குள் இந்த சந்நதியின் மூலஸ்தானம் மாத்திரம் வராகரூபம். (கால வரிஷியின் சரித்திரத்தைப் பார்த்தால் இப்பெருமாளுக்கு நித்ய கல்யாணரெனப் பெயர் வந்ததின் காரணம் அறியலாம்.) இவ்வூரில் சத்திரம் ஹோட்டலில்லை.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரெயில்வே (S. I. Rly) மீட்டர்கேஜ் மெயின் லைனிலுள்ள செங்கல்பட்டு ஸ்டேஷனிலிறங்கி திருப்போரூர் போகும் மோட்டார் வண்டியிலேறி திருப்போரூர் சேர

வேண்டும். அவ்விடம் பிராமணர் ஹோட்டல்களும் சத்திரங்களும் உண்டு. பெரிய சிவஸ்தலம், சுப்ரமண்ய க்ஷேத்திரம். திருப்போரூரிலிருந்து மதராஸ் போகும் மோட்டாரிலேறி சுமார் 3½ மைல் தூரமுள்ள செங்கம்மால் என்னும் கிராமத்திலிறங்கி கிழக்கே 1½ மைல் தூரம் கால்பாதையின் வழியாய் சென்றால் இத்தலத்தை அடையலாம். ஆனால், இவ்வழி சுலபமான தல்ல. இது கேலம்பாக்கத்தைச் சேர்ந்த உப்பக்கழியின் பேரிலும் சதா ஜலம் நிறைந்திருக்கும் சேற்றுப் பிரதேசங்களின் மேலும் நடக்க வேண்டும். வழி தெரிந்தவர்களுடன் தான் போகவேண்டும், தனியாய்ப் போக முடியாது. வழியில் பக்கிங்ஹாம் கனலையும் கடக்கவேண்டும். வண்டிகள் இவ்வழி போகா. ஒரு வேளை வெய்யல் காலத்தில் பிரயாசையுடன் வண்டிகள் போகலாம். இவ்வழி தப்பினால் மதராஸ் போகும் மோட்டார் வண்டியிலேயே திருப்போரூரிலிருந்து 5 மைல் தூரமுள்ள கேலம்பாக்கம் என்னும் கிராமத்திலிறங்கி, கிழக்கே சர்க்கார் உப்பு பேக்ட்டரி (Salt Factory) மூலமாயுள்ள கால் பாதையின் வழியாய் நடந்து பால்கட்டு மூலியமாக உப்புக்கழிகளையும் கனலையும் கடந்து சுமார் 2 மைல் தூரமுள்ள கோவளத்தை யடைந்து, பின்பு தென்புறமாய் நெல்வறப்புகளின் மார்க்கமாய் 1½ மைல் நடந்தால் இத்தலத்தை யடையலாம். சாதாரணமாய் இந்தத் திருப்பதிக்குப் போக வண்டிகள் கிடையாது. குழந்தைகளுடன் போக வேண்டுமென்றால் மேலே சொன்ன கஷ்ட மார்க்கங்களின் வழியாய்ச் செல்லவேண்டும். மூன்றாவது வழி, மதராஸ் மைலாப்பூர் பாப்பான் சாவடியிலிருந்து பக்கிங்ஹாம் கனல் மார்க்கமாய் படகுகளில் புறப்பட்டு நேராய் இத்தலத்தை யடையலாம். சுமார் 16 மைல் தூரம். எதிர்க்காற்று காலங்களில் படகுகள் வெகு நிதானமாய்ச் செல்லும். திருப்போரூரிலிருந்து கேலம்பாக்கத்திற்கு மோட்டார்சார்ஜு 0-2-0.

## 64. திருக்கடல்மல்லை 93.

(மஹாபலிபுரம்)

மங்களாசாசனம்

பூதத்தாழ்வாரருளிச் செய்த இரண்டாந் திருவந்தாதி 70-ம் பாசுரம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி 2-ம் பத்து 5-ம் திருமொழி 10 பாசுரங்கள்.

2ம் பத்து 6-ம் திருமொழி 10 பாசுரங்கள்.
3 ,, 5 ,, 8-ம் பாசுரம்.
7 ,, 1 ,, 4-ம் பாசுரம்.

திருக்குறுந்தாண்டகம் 19-ம் பாசுரம்.
திருநெடுந்தாண்டகம் 9-ம் பாசுரம்.
சிறிய திருமடல் 73-ம் பாசுரம்.
பெரிய திருமடல் 120-ம் பாசுரம்.

ப்ரபாவம் :—தலசயநத்துறைவார், நிலமங்கை நாய்ச்சியார், ககநாக்ருதி விமாநம், கருடநதி, கிழக்கே திருமுகமண்டலம், புஜங்கசயநம், புண்டரீக ரிஷிக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இப்பொழுது இத்தலத்தில் நதி கிடையாது. மறைந்திருப்பதாகக் காண்கிறது. ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்தருளிய சந்நதி. திருக்குறுந் தாண்டகத்தின் 19-ம் பாசுரம்.

"பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணும்
உண்டியான் சாபந்தீர்த்த வொருவனூர்—உலகமேத்தும்
கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று
மண்டினார், உய்யலல்லால் மற்றையார்க் குய்யலாமே."

இதில் கண்டிருக்கும் சந்நதி ஓர்காலத்தில் கடலில் முழுகிப்போய் இப்பொழுது கடல் ஜலத்தின் சமீபமாயுள்

ளது. முன்புறத்தில் சிவன் கோயிலும், அதாவது லிங்கமும், அதற்கு அடுத்தாப்போல் பின்புறத்தில் புஜங்க சயனமாயிருக்கும் பெருமாளின் சந்நதியும் இப்பொழுது பூஜையில்லாமல் பாழாயிருக்கின்றன. சிதலமாயிருக்கும் லிங்கத்தையும் சயனத்துறைவாரையும் இப்பொழுதும் பார்க்கலாம். இந்தக் கோயிலே இப்பொழுது மஹாபலிபுரம் ஷோர் டெம்பில் (Shore Temple) எனப்படுகிறது.

பின்னிட்ட காலத்தில் ஊருக்குள் இப்பொழுதிருக்கும் பெருமாள் சந்நதியைக்கட்டி பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். இதிலிருக்கும் பெருமாளுக்கு மங்களாசாசனம் ஆகவில்லை யென்று சொல்லலாம். ஆனால், ஆழ்வார்களின் மங்களாசாசனமான பெருமாளின் சந்நதி பாழாயிருக்கிறது. அவர் பெயரால் இந்தப் புதிய சந்நதி கட்டப்பட்டிருக்கிறது. இந்தச் சந்நதிக்குக் கிழக்கே ½ பர்லாங்கு தூரத்திலுள்ள புஷ்கரிணியின் வடபாகத்தில், அதாவது சமுத்திரக்கரை (Shore Temple) போகும் வழியின் இடதுபுறத்தில் இப்பொழுது கோயிலின் புஷ்ப நந்தவனமாய் உபயோகப்படுத்துமிடம், முதலாழ்வார்களெனப்படும் மூவரில் இரண்டாவதான பூதத்தாழ்வாரின் ஜென்மஸ்தானமெனப்படுகிறது. மற்றும் இவ்வூரில் மஹாமல்லன் என்னும் பல்லவ அரசன்காலத்து சிற்பிகளால் கற்குன்றுகளைக் குடைந்து செய்துள்ள பஞ்சபாண்டவர் ரதங்களென்று சொல்லப்படும் தனித்தனி ஐந்து ரதங்களும், அர்ச்சுனன் தபசு என்னும் கற்பாறையில் செதுக்கியுள்ள சித்திரங்களும், கல்லில் குடைந்து கட்டப்பட்டுள்ள மண்டபங்களும் பார்க்கத்தகுந்தன. இவைகளை

(Ancient Monument Act) என்ஷியன்ட் மான்யு மெண்ட் ஆக்டின்பிரகாரம் கவர்ன்மெண்டார் காப்பாற்றி யுள்ளார். வெளிநாட்டு ஐரோப்பியர் முதலானோர் இந்த அரிய சிற்பவேலைகளைப் பார்க்க வருகிறார்கள். இவ் விடமும் ஒரு லைட் ஹவுஸ் சமுத்திரத்தில் செல்லும் கப்பல்களினிமித்தம் கட்டப்பட்டிருக்கிறது. இச் சந்நிதியின் தென்னண்டைப் பக்கத்தில் ஓர் ஜமீன் தாரரின் பங்களாவும் தோட்டமுமுண்டு. கௌரவ முள்ளவர்கள் போனால் ஆதரிக்கிறார்.

மார்க்கமும் வசதியும்:—தென்னிந்தியா ரெயில்வே (S. I. Rly.) மெயின் லைனிலுள்ள செங்கல்பட்டு ஸ்டேஷனிலிறங்கி தென்கிழக்கே 9 மைல் தூரத்தி லுள்ள திருக்கழுக்குன்றத்தை மோட்டார் வண்டியின் மூலியமாயடைந்து, கிழக்காக கற்சாலை மார்க்கமாய் மற்றும் 9 மைல் தூரம் சென்றால் இத்தலத்தை அடை யலாம். திருக்கழுக்குன்றத்திலிருந்து குதிரைவண்டிகள் சுலப வாடகைக்கு போகவர கிடைக்கும். (ரூ. 1-8-0 அல்லது ரூ. 1-12-0 கொடுத்தால் போதும்). இவ்வூரில் சத்திரமுண்டு, சிறிய கடைகளும் உண்டு. இவ்விட முள்ள பிராமணர்கள் வீட்டில் சொன்னால் சாப்பாட் டிற்கு அநுகூலப்படுத்துவார்கள். வெகு சிறிய கிரா மம். மைலாப்பூர் பாப்பான் சாவடியிலிருந்து கனால் மார்க்கமாயும் படகுகளில் திருவிடவெந்தையைத் தாண்டி 6 மைல் தெற்கு சென்றால் இத்தலத்தை யடையலாம்.

தொண்டைநாட்டுத் திருப்பதிகள் 22 முற்றுப்பெற்றன.

---

# Errata.

| | விஷயம் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | ஆழ்வார் திருநகரி (திருக்குருகூர்) | 25 | 26 |
| 7 | ஸ்ரீவில்லிபுத்தூர் | 16 | 17 |
| 8 | ஸ்ரீ வைகுந்தம் | 21 | 22 |
| 11 | திருக்குளந்தை (பெருங்குளம்) | 24 | 25 |
| 12 | திருக்குருகூர் (ஆழ்வார் திருநகரி) | 25 | 26 |
| 14 | திருக்கூடல் (தென்மதுரை) | 9 | 10 |
| 17 | திருக்கோளூர் | 30 | 31 |
| 19 | திருப்புல்லாணி (தர்ப்பசயநம்) | 7 | 8 |
| 27 | நல்லதங்காள் | 18 | 19 |

## மூன்றும்பாகம்.

---

விஷயம். விஷய ஸூசிகை பக்கம்.



(குறிப்பு) நம்மாழ்வார் மற்றும் மதுரைகவியாழ்வார் திருநாட்டிற்கெழுந்தருளிய ஸ்தலம் ஆழ்வார் திருநகரி யென்னும் திருக்குருகூர்.

பெரியாழ்வாரென்னும் விஷ்ணு சித்தர் திருநாட்டிற்கெழுந்தருளிய ஸ்தலம்-ஸ்ரீவில்லிபுத்தூர்.

---

மூன்றும்பாகம்.

# பாண்டியநாட்டுத் திருப்பதிகள் 18.

---

## முகவுரை.

பன்னிரு ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்தருளிய நூற்றெட்டுத் திருப்பதிகளின்

விவரங்களடங்கிய பாசுரம்.

" ஈரிருப தாஞ்சோழ மீரொன்ப தாம்பாண்டி
ஓர்பதின்மூன் றுமலைநா டோரிரண்டாம்—சீர் நடுநா
டாறோடீ ரெட்டுதொண்டை யவ்வடநா டாறிரண்டு
கூறுதிரு நாடொன்றுக் கொள்."

ஈரொன்பதாம்பாண்டி $= 2 \times 9 = 18$.

இந்த 18 திவ்யதேசங்களிருக்குமிடங்களின் விவரம்:—
(மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்கள் மற்றும் புதுக்கோட்டை சமஸ்தானம்.)

(1) புதுக்கோட்டை சமஸ்தானத்தில்-1
65-வது சந்நதி.

(2) மதுரை ஜில்லா திருப்பத்தூர் தாலூகாவில்-1
66-வது.

(3) இராமநாதபுரம் பக்கலிலுள்ள திருப்புல்லாணி-1
67-வது.

(4) மதுரையும் சுற்றிலுமுள்ள 3 சந்நதிகள்-
68 முதல் 70 முடிய.

(5) இராமநாதபுரம் ஜில்லாவில் - 2 திருப்பதிகள் 71—72.

(6) திருநெல்வேலி ஜில்லாவில் 2 திருப்பதிகள்-73 மற்றும் 82-வது.

(7) திருநெல்வேலி ஜில்லா, ஸ்ரீவைகுண்டம் தாலூக்காவிலுள்ள நவதிருப்பதிகளென்னும் 8 சன்னதிகள்; 74 முதல் 81 முடிய.

இந்த 18 சந்நதிகளையும் ஒரே வாரத்தில் சேவிக்கலாம். நிதானமாய் 10, 12 நாட்களில் சேவித்து முடிக்கலாம். எல்லா விடங்களுக்கும் சவாரி வசதியுண்டு. யாத்ரீகர்களின் அநுகூலத்தின் பொருட்டு அடியேனுடைய முக்கிய கிரந்தமாகிய 108 திவ்ய தேசயாத்ரா ப்ரபாவ சந்திரோதயம் என்பதை தனித் தனி பாகங்களாய்ப் பிரித்து சுலப விலைக்கு வெளியிடப்பட்டிருக்கிறது.

பெங்களூர்.<br>1—6—35

ஜி. கே. (105) பஜலி,<br>வக்கீல்.

# பாண்டியநாட்டுத் திருப்பதிகள் 18.

---

ஒவ்வொரு ஸ்தலத்தின் கடைசியில் கண்டிருக்கும் நெம்பர் இந்த ஸ்தலம் நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தின் 108 திவ்ய தேச திருப்பதிகளின் அட்டவணையில் எத்தனையாவது என்று குறிப்பிடுகிறது.

## 65. திருமெய்யம் 43.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரியதிருமொழி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 3-ம் பத்து | 6-ம் திருமொழி | 9-ம் பாசுரம் |
| 6 ,, | 8 ,, | 7 ,, |
| 8 ,, | 2 ,, | 3 ,, |
| 9 ,, | 2 ;, | 3 ,, |
| 10 ,, | 1 ,, | 5 ,, |

திருக்குறுந்தாண்டகம் 19-ம் பாசுரம்
பெரிய திருமடல் 126-ம் பாசுரம்

ப்ரபாவம் :—ஸத்யகிரிநாதன், உய்யவந்தாள், ஸத்தியகிரிவிமாநம், ஸத்தியகிரி, ஸத்யதீர்த்தம், கதம்பபுஷ்கரிணி, பலாவிருக்ஷம், கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், ஸத்ய தேவதைகளுக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) ஸார க்ஷேத்திரம்போல் இது ஸத்திய க்ஷேத்திரம். பெருமாள், விமாநம், கிரி, தீர்த்தம் முதலானவைகளுக்கு ஸத்ய என்னும் அடைமொழி முன் சேர்த்துக் கூப்பிடப்படுகின்றன. சத்திய மென்றால்

தமிழில் மெய் என்று பெயரானதால் திருமெய்யம் எனப் பெயர் பெற்றது. இச்சந்நிதியில் புஜங்கசயந மாயுள்ள ஒரு பெருமாளின் சன்னதியுமுண்டு.

மார்க்கமும், வசதியும்:—தென் இந்தியா ரயில்வே மீடர்கேஜ் (S. I. Rly.) திருச்சி—மானமதுரை கார்டு லைனிலுள்ள ஓர் ரெயில்வே ஸ்டேஷன். ஸ்டேஷனி லிருந்து ஊர் சுமார் $\frac{3}{4}$ மைல் தூரமுள்ளது. வண் டிகள் கிடைக்கும். ஊர் பெரியதானதால் ஆகார ஹோட்டல்களும், சத்திரங்களுமிருக்கின்றன. இவ் விடமிருந்து நேராய்த் திருப்பத்தூருக்குப் போக பஸ் வண்டிகளுண்டு. மற்றும் காரைக்குடிக்கு ஏராள மாய் பஸ் வண்டிகள் ஓடுகின்றன. காரைக்குடி வண் டியிலேறினால் காரைக்குடி சேர்ந்து அவ்விடம் வேறே பஸ்வண்டி மாறி திருப்பத்தூர் சேரவேண்டும். அவ் விடமிருந்து மானமதுரை போகும் பஸ் வண்டியி லேறினால் தெற்கே 6 மைலில் திருக்கோட்டியூ ரென் னும் திவ்ய தேசத்தை யடையலாம்.

## 66. திருக்கோட்டியூர் 42.

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி

1-ம் பத்து 2-ம் திருமொழி 1&10-ம் பாசுரங்கள்.
2 ,, 6 ,, 2-ம் ,,
4 ,, 4 ,, 11 பாசுரங்கள்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி

7-ம் பத்து 1-ம் திருமொழி 3-ம் பாசுரம்
9 ,, 10 ,, 10 பாசுரங்கள்.
10 ,, 1 ,, 9-ம் ,,
பெரிய திருமடல் 125-ம் பாசுரம்.

பூதத்தாழ்வாரருளிச் செய்த இரண்டாந் திருவந்தாதி
46-ம் பாசுரம்.

பேயாழ்வாரருளிச் செய்த மூன்ருந் திருவந்தாதி
62-ம் பாசுரம்.

திருமழிசையாழ்வாரருளிச் செய்த நான்முகன்
திருவந்தாதி 34ம் பாசுரம்.

ப்ரபாவம்:—ஸௌம்ய நாராயணன் - திருமாமகள் நாய்ச்சியார் - அஷ்டாங்கவிமாநம் - தேவபுஷ்கரிணி - கிழக்கே திருமுகமண்டலம் - நின்றும், இருந்தும், நடந்தும், கிடந்தும், கூத்தாடிய திருக்கோலம், கதம்ப மஹாரிஷிக்கும் இந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) பிரம்மா, விஷ்ணு, சிவன் இம்மூவர்களும் இத்தலத்தில் சேர்ந்து ஹிரணியனை எவ்வாறு சம்ஹாரம் செய்ய வேண்டுமென்று யோசிப்பதற்கு (கோஷ்டி) கூடின இட மிதுவே யாதலால் திருக்கோஷ்டியூர் அல்லது திருக்கோட்டியூரென்ருயிற்றென்பர் - உள் பிரகாரத்தில் ஒரு சிவன் கோயில் சந்நதிக்குள் போகும் வழியினிடப்புரமிருக்கிறது. பிரகாரத்தின் வடபுறத்தில் நரசிம்ஹ மூர்த்தியின் இரண்டு கற்ச்சிலைகளிருக்கின்றன. ஓடும் ஹிரணியனை ஓடிப்போய் பிடிக்கும் பாவனையாயொன்றும் அவன் மார்பைப் பிளக்கும் பாவனையாயு மொன்றும் இருக்கின்றன. இச்சந்நதியின் அஷ்டாங்க விமான மெனப்படுவது வெகு அழகாயிருக்கிறது. மற்றெந்த திவ்யதேசத்திலும் இம்மாதிரியான அழகிய விமாநம் கிடையாது. தென் மதுரை கூடலழகர் சந்நதியின் திருக்கூடல் விமானமும் அஷ்டாங்க விமானமென்ருலும் இம்மாதிரியாக இல்லை; திருக்கோட்டியூரின் விமானம் 3 தளங்கள் கூடியதாக விருக்கிறது. அடி தளத்தில் சயநத்திருக்

கோலத்துடன் சௌம்ய நாராயணனும், நடுதளத்தில் நின்ற திருக்கோலத்துடனும், மேல் தளத்தில் வீற்றிருந்த திருக்கோலத்துடனும் பெருமாள் சேவை சாதிக்கிறார். சௌம்ய நாராயணனுக்குக்கீழ்மாடியில் ஸ்ரீ நடன கிருஷ்ணன் சந்நதியிருக்கிறது. அதாவது அடியில் கூத்தாடிய கிருஷ்ணன், அதற்குமேல் கிடந்தும், அதற்குமேல் நின்றும், அதற்குமேல் இருந்தும், ஓடும் ஹிரணியனை பிடிக்கையால் நடந்தும், என்ற இம்மாதிரியான திருக்கோலம் ப்ரபாவத்தில் பார்க்கவும். இதுவே ஸ்ரீ பாஷ்யகாரரென்னும் இராமாநுஜரின் ஒரு குருவான திருக்கோட்டியூர்நம்பி யெனப்படுபவரின் அவதாரஸ்தலம். இவருக்கு மற்றொரு பெயர் கோஷ்டி பூரணர். இவர் ஆளவந்தாரென்கிற யமுனாசாரியரின் முக்கிய சிஷ்யர்களில் ஒருவர்; இராமானுஜர் ஸ்ரீரங்கத்திலிருந்து 18 தடவைகள் இத் திருக்கோட்டியூருக்கு வந்து 18ம் தடவை இவ்வூர் நம்பியினால் தனக்கு அவரால் வெகு ரகசியமாய் சொல்லிக்கொடுத்த 'திருமந்த்ரம்' அல்லது அஷ்டாக்ஷர உபனிசித்தின் மந்த்ரமாகிய எட்டெழுத்துவார்த்தை, 3 சப்தத்தையுடைய மந்திரமாகிய "ஓம்" என்னும் பிரணவமாகிய முதல் வார்த்தை(சப்தம்)"நமோ" என்றும் இடைவார்த்தை (சப்தம்),"நாராயண" வென்றும் கடை வார்த்தை (சப்தம்) கொண்ட அஷ்டாக்ஷர மந்த்ரமென்னும் திருமந்த்ரத்தைத் தான் யாருக்கும் சொல்லாமலிருப்பதாக உறுதிமொழி கொடுத்து, தனக்கு உபதேசமான திருமந்த்ரத்தை உடனே தெற்காழ்வானென்னும் நரசிம்மர் சந்நதியில் அவ்விடம் சேர்ந்திருந்த எல்லோரையும் கூட்டுவித்து அவர்களுக்கெல்லாம் உபதேசித்ததுமன்றி இவ்விமானத்தின் பேரிலுமேறி

எல்லா ஜனங்களுக்கும் இத்திருமந்த்ரத்தை உபதேசித்ததின் பயனால் இவருக்கு "எம்பெருமானார்" என்னும் திருநாமம் திருக்கோட்டியூர் நம்பியினால் இடப்பட்டதென்னும் விவரம் இராமாநுஜர் சரித்திரத்தில் பார்க்கவும்.

மார்க்கமும் வசதியும்:—தென்னிந்தியா ரெயில்வே (S. I. Rly) திருச்சி-மானாமதுரை கார்டு லயனிலுள்ள காரைக்குடி ஸ்டேஷனிலிறங்கினால் அவ்விடமிருந்து திருப்பத்தூர் போகும் மோட்டார் வண்டியிலேறி திருப்பத்தூரிலிறங்கி மானாமதுரை போகும் மோட்டாரிலேறி 6 மைல் தெற்கே சென்றால் இத்தலத்தையடையலாம். அல்லது மதுரை ஜங்ஷன் ஸ்டேஷனிலிறங்கி திருப்பத்தூர் போகும் மோட்டார் வண்டியிலேறி திருப்பத்தூரிலிறங்கி தெற்கே 6மைல் மோட்டாரில் சென்றாலும் அடையாலம். மதுரை—தனுஷ்கோடி போகும் லயனில் மானாமதுரை யென்னும் ஸ்டேஷனிலிறங்கி திருப்பத்தூர் போகும்மோட்டார் வண்டியிலேறி 27 மைல் தூரம் வடமேற்கு சென்றால் இத்தலத்திலிறங்கலாம். இது பெரிய ஊர். ஆகார ஹோட்டல்களும் சத்திரமுமுண்டு. இவ்விடமிருந்து 6மைல் தூரமுள்ள திருப்பத்தூருக்கு மாட்டு வண்டிகள் கிடைக்கும்.

---

## 67. திருப்புல்லாணி 44.

(தர்ப்பசயந மென்றும் பெயர்).

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
9-ம் பத்து 3-ம் திருமொழி 10 பாசுரங்கள்
,, 4 ,, 10 ,,
பெரிய திருமடல் 131-ம் பாசுரம்

ப்ரபாவம்:—கல்யாணஜகந்நாதன், தெய்வச்சிலையர், தெய்வச்சிலைநாய்ச்சியார், கல்யாணவல்லி, கல்யாணவிமானம், ஹேமதீர்த்தம், சக்ரதீர்த்தம். அசுவத்தவிருக்ஷம், கிழக்கேதிருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், புல்லாரணியக்ஷேத்திரம், தற்பசயநம், புல்லாரணி மஹரிஷிக்கும், அசுவத்த நாராயணனுக்கும் ப்ரத்யக்ஷம். ஸ்ரீராமர் சமுத்திர ராஜனுக்கு வரங்கொடுத்த விடம்.

(குறிப்பு) இச்சந்நதியின் மூலஸ்தானத்திற்குப் பின்புறம் ஓர் அசுவத்த விருக்ஷமிருக்கிறது. வெகுவும் பழைய மரம். இவ்விடம்தான் மஹாவிஷ்ணு புல்லர் முதலிய முனிவருக்கு ப்ரத்யக்ஷமாய் தரிசனம் கொடுத்ததாகச் சொல்லப்படுகிறது. இம்மரத்தின் கீழ் சுற்றிலும் அநேக நூற்றுக்கணக்கான நாகப்பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. குழந்தை இல்லாதவர்கள் இவ்விடம் நாகப்பிரதிஷ்டை செய்தால் மக்கட்பேறு பெறுவார்களென்னும் நம்பிக்கை யிருக்கிறது. அநேகர் இதற்காகவே இவ்விடத்திற்கு வருகிறார்கள். இச்சந்நதியில் செய்யும் திருக்கண்ணமுது வெகு ருசியாயிருக்கிறதென்று யாத்திரைவாசிகள் அமுது செய்வார்கள். இச்சந்நதியின் பிரகாரத்தில் வலது கைப்புறத்தில் ஈசான்ய மூலையில் இரண்டு

சந்நதிகளிருக்கின்றன. முன்னிற்கும் சந்நதி பட்டாபி ஷேக இராமன் சந்நதி. இதற்குப் பின்னிருப்பது தர்ப சயன இராமன் சந்நதி. இவ்விடம் இலங்கைக்குப் போகுமுன் ஸ்ரீராமர் தர்பையின்மேல் சயநம் செய் திருந்ததாகச் சொல்லப்படுகிறது. இவ்விடமிருந்து 3 மைல் தெற்கே சென்றால் சமுத்திரக்கரை யிருக்கி றது. சத்திரமுண்டு. ஸ்நானகட்டம் நன்றாயிருக்கிறது. இவ்விடத்திலே ஸ்ரீராமர் இலங்கைக்கு வாராவதி கட்டினாரெனச் சொல்லுகிறார்கள். திருப்புல்லாணியி லிருந்து சமுத்திரக்கரைக்குச் செல்ல மாட்டு வண்டி கள் கிடைக்கும்.

மார்க்கமும் வசதியும்:—தென்னிந்தியா ரைல்வே (S. I. Rly) மீடர்கேஜ் மதுரை-தனுஷ்கோடி லயனி லுள்ள இராமநாதபுர (Ramnad) மென்னும் ரைல்வே ஸ்டேஷனிலிறங்கினால் தெற்கே 6 மைலிலிருக்கிறது. ரைல்வே ஸ்டேஷனிலிருந்து குதிரை,மாட்டுவண்டிகள் சுலபவாடகைக்குக் கிடைக்கும். ஸ்டேஷனிலிருந்து கீழக்கரை என்னும் வியாபார ஸ்தலத்திற்குப் போகும் மோட்டார் பஸ் வண்டிகள் பிரயாணிகளை வழியிலுள்ள திருப்புல்லாணிக்கு ஏற்றிக்கொண்டு போய் இறக்கவும் திரும்பிவரும்பொழுது ஏற்றிக்கொண்டுவரவு மிருக்கி றது. இவ்வூரில் சத்திரங்களுண்டு. ஒரு சவுகரியமான லோகல் பண்டு சத்திரமுமிருக்கிறது. கடைகளுண்டு. ஆகார ஹோட்டல்களுமுள. வெய்யல் காலத்தில் தண்ணீர்க்கஷ்டமதிகம். ஊருக்கு வடபுறமாயுள்ள குளத்திலிருக்கும் ஜலம்தான் குடிக்க உபயோகம். இது வற்றிப்போனால் இதற்குள் கிணறுகள் வெட்டி ஜலம் எடுத்துக்கொள்ளுகிறார்கள். ஊருக்குள் வீடுகளி லிருக்கும் கிணற்றின் ஜலம் சற்று உப்பாயிருக்கும்.

## 68. திருக்கூடல்—தென் மதுரை 47.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
9-ம்பத்து 2-ம் திருமொழி 5-ம் பாசுரம்

ஆண்டாளருளிச் செய்த நாய்ச்சியார் திருமொழி
முதலாயிரம் 4-ம் திருமொழி 11 பாசுரங்கள்.

திருமழிசையாழ்வாரருளிச்செய்த நான்முகந் திருவந்
தாதி 39-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—கூடலழகர், வகுளவல்லி நாய்ச்சியார், மரகதவல்லி நாய்ச்சியார், வரகுணவல்லி, மதுரைவல்லி, அஷ்டாங்க விமாநம், ஹேமபுஷ்கரிணி, சக்ரதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், சௌநகாதிகளுக்கும், ப்ருகு மஹரிஷிக்கும், பெரியாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இச்சந்நதியின் அஷ்டாங்கவிமானத்தில் இரண்டு (மாடிகள்) தளங்களிருக்கின்றன. முதல் மாடியில் புஜங்கசயனமாய் ரங்கநாதனும் இதற்கு மேல்மாடியில் நின்ற திருக்கோலமாய் சூரியநாராயணனு மிருக்கிறார்கள். சந்நதி சிதலமில்லை. இரண்டாம் பிரகாரத்தில் நவக்கிரக பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. சாதாரணமாய் நவக்கிரக பிரதிஷ்டை சிவன் கோயில்களில்தான் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும். விஷ்ணு சந்நதிகளிலிருப்பதில்லை. ஆனால் இந்தச்சந்நதியில் பிரதிஷ்டை செய்திருப்பதைக் கவனிக்கவும்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரெயில்வே (S. I. Rly.) மீடர் கேஜ் மெயின் லயனில் மதுரை

ஜங்ஷன் என்னும் ரெயில்வே ஸ்டேஷனிலிறங்கினல் ஸ்டேஷனுக்குத் தெற்கே 3 பர்லாங்கு தூரத்தில் ஊருக்குள்ளிருக்கிற சந்நதி. இது பெரிய ஜில்லா பட்டணமாகையால் காபி, சாப்பாடு ஹோட்டல்களும் சத்திரங்களு மிருக்கின்றன. ரெயில்வே ஸ்டேஷனுக் கெதிரில் வரிசையாய் சத்திரங்களிருக்கின்றன. அவை களில் சுலப வாடகைக்கு ரூம்கள் கொடுக்கிறார்கள். வெகுவும் அனுகூலமா யிருக்கின்றன. ஊரில் மின்சார விளக்குகளும் தண்ணீர்க்குழாயு முள்ளன. இவ்வூரி லிருந்து வடகிழக்கே 12 மைல் சென்றால் அழகர் கோயிலென்கிற திருமாலிருஞ் சோலை என்னும் திவ்ய தேசமும், 7 மைல் கிழக்கே சென்றால் திருமோகூர் என்னும் திவ்யதேசமு மிருக்கின்றன.

## 69. திருமாலிருஞ்சோலை (கல்லழகர் சன்னதி) 41.

மங்களாசாசனம்

பெரியாழ்வாரருளிச்செய்த பெரியாழ்வார் திருமொழி

| | | |
|---|---|---|
| 1-ம் பத்து | 6-ம் திருமொழி | 8-ம் பாசுரம் |
| 3 ,, | 4 ,, | 5-ம் ,, |
| 4 ,, | 2 ,, | 11 பாசுரங்கள் |
| ,, | 3 ,, | 11 ,, |
| 5 ,, | 3 ,, | 10 ,, |

ஆண்டாளருளிச்செய்த நாய்ச்சியார் திருமொழி

| | | |
|---|---|---|
| முதலாயிரம் | 9-ம் திருமொழி | 10 பாசுரங்கள் |
| ,, | 4-ம் ,, | 1-ம் பாசுரம் |
| ,, | 10 ,, | 8-ம் ,, |

திருமங்கையாழ்வா ரருளிச் செய்த பெரிய திருமொழி

| | | |
|---|---|---|
| 2-ம் பத்து | 7-ம் திருமொழி | 7-ம் பாசுரம் |
| 7 ,, | 3 ,, | 6-ம் ,, |
| ,, | 9 ,, | 7-ம் ,, |
| 9 ,, | 2 ,, | 8-ம் ,, |
| ,, ,, | 8 ,, | 10 பாசுரங்கள் |
| ,, ,, | 9 ,, | 10 ,, |
| 10 ,, | 1 ,, | 8-ம் ,, |
| 11 ,, | 2 ,, | 8-ம் ,, |
| ,, | 7 ,, | 9-ம் ,, |

திருக்குருந்தாண்டகம் 3-ம் பாசுரம். சிறிய திருமடல் 74-ம் பாசுரம். பெரியதிருமடல் 125-ம் பாசுரம்.

பூதத்தாழ்வாரருளிச்செய்த இரண்டாந் திருவந்தாதி 48—மற்றும் 54-ம் பாசுரங்கள்

பேயாழ்வாரருளிச்செய்த மூன்றாந் திருவந்தாதி 61-ம் பாசுரம்.

நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய் மொழி

| | | |
|---|---|---|
| 2ம் பத்து | 10ம் திருமொழி | 11 பாசுரங்கள் |
| 10 ,, | 7 ,, | 11 ,, |
| ,, | 8 ,, | 1 மற்றும் 6-ம் ,, |

ப்ரபாவம்:—அழகர், மாலலங்காரர், சுந்திரவல்லி நாய்ச்சியார், சோமசுந்தரவிமாநம், சிலம்பாறு, கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், வ்ருஷபகிரி, சந்தநவிருக்ஷம், மலயத்வஜ பாண்டிய னுக்கும் தர்மதேவதைக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இத்தலம் மதுரைப் பட்டணத்திற்கு வடகிழக்கே கற்சாலை மார்க்கமாய் 12 மைல் தூரத்தி லிருக்கிறது. மலையின் அடிவாரத்திலுள்ள சந்நதி.

மலையின் மீது 3 மைல் தூரத்தில் ஓர் நீர் வீழ்ச்சி யிருக்கிறது. அதிலிருந்து இப்பொழுது இரும்புக் குழாய்களின் வழியாய் குடிப்பதற்கு ஜலம் சந்நதி யின் பிரகாரத்திற்குள் கொண்டுவரப்பட்டிருக் கிறது. இச்சந்நதியின் பிரகாரத்திற்கு வெளியில் இடிந்த கட்டிடங்களிருக்கின்றன. இவைகளைப் பார்த்தால் பூர்வத்தில் ஒரு பெரிய கோட்டையா யிருந்து இப்பொழுது பாழாயிருக்கிறதாகக் காண் கிறது. இதைச் சிலர் பாண்டியன் கோட்டை என் றும், மற்றுஞ்சிலர் அல்லி அரசாணிமாலை என்னும் கதையில் கண்ட அல்லியின் கோட்டை யென்றும் சொல்லுகிறார்கள். இத்தலத்தின் பெருமாள் மூல வரும் உற்சவரும் வெகு அழகாயும் திவ்ய தேஜஸ் ஸுடனும் கூடிய திருமுகமண்டலத்துடன் சேவை சாதிக்கிறது வெகுவும் ரம்மியமா யிருக்கும். சந்நதி யின் முன் மண்டபத்திலுள்ள கல்தூண்களில் செதுக்கி யிருக்கும் சிலைப்பொம்மைகள் வெகு அற்புதமாயிருக் கும். இத்தலத்திற்கு முன்வாசலிலுள்ள பெரிய கோபு ரத்தின் கதவுகள் எப்பொழுதும் மூடப்பட்டு இதற்கு கீழண்டையில் மதில் சுவற்றில் ஓர் வழி செய்யப்பட்டி ருப்பதில் யாத்ரீகர்கள் சந்நதிக்குள் செல்லுகிறார்கள். இக்கோபுர வாசலில் 18-ம் படி கருப்பு யென்ற துஷ்ட தேவதை யிருப்பதாகவும் சுற்றுக் கிராமங்களிலுள்ள சாமானிய ஜனங்கள் ஆடி மாதத்திய அமாவாசை யன்று இவ்விடம் சேர்ந்து ஆடு முதலானவைகளைப் பலி கொடுக்கிறார்கள். ஆயிரக்கணக்கான ஜனங்கள் அப்பொழுது இவ்விடம் சேருகிறார்கள். தலை முடி யும் கொடுக்கிறார்கள். எப்பொழுதும் சந்நதியின் வெளிப் பிரகாரத்தில் இரண்டு காபி கடைகளுண்டு.

இதில் பிரசாதத்திற்குச் சொன்னால் ஏற்பாடு செய்வார்கள்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரயில்வே (S. I. Ry) மீடர் கேஜ் மெயின் லைனிலுள்ள மதுரை ஜங்ஷன் ஸ்டேஷனிலிருந்து மோட்டார் வண்டியின் மூலமாய் வடகிழக்கே 12 மைல் தூரம் சென்றால் இத்தலத்தையடையலாம். எப்பொழுதும் மோட்டார் பஸ் வண்டிகள் இத்தலத்திற்குப் போய்க் கொண்டிருக்கின்றன. குதிரை, மாட்டு வண்டிகளும் கிடைக்கும். இச்சந்நிதியின் முதல் பிரகாரத்தில் சத்திரங்களிருக்கின்றன. ஜலவசதியுண்டு. ஆகாரக் கடைகளுமிருக்கின்றன. இம்மலையின் காற்றும் நீரும் வெகு சௌக்கியமானது. இம்மலைக்கு 1 மைல் தூரத்தில் ஒரு சிறு கிராமமிருக்கிறது. இச்சந்நதியிலிருந்து மேலூர் என்னும் தாலூக்கா பட்டணம் சுமார் 9 மைல் தூரத்திலிருக்கிறது.

## 10. திருமோகூர் 46.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வா ரருளிச்செய்த
பெரிய திருமடல் 74ம் பாசுரம்

நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய் மொழி
10ம் பத்து 1ம் திருமொழி 11 பாசுரங்கள்

ப்ரபாவம்:—காளமேகப் பெருமாள், திருமோகூர் வல்லி, மேகவல்லிநாய்ச்சியார், கேதகிவிமானம், க்ஷீராப்திபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம் நின்ற திருக்கோலம், அஜருத்ரேந்த்ராதிகளுக்கு ப்ரத்யக்ஷம்.



திருமோகூர் (Thirumogur)



திருத்தண்கால் (Thiruthangal)

(குறிப்பு) இந்த சந்நிதியின் கட்டிடங்கள் நல்ல ஸ்திதியிலிருக்கின்றன. புஜங்கசயநமாயிருக்கும் பெருமாளின் சந்நிதியும் வலதுகைப்புறமிருக்கிறது. "தாள தாமரைத் தடவயல் சூழ் திருமோகூர்" என்ற படியே இத்தலம் பார்க்க ரமணீயமாயிருக்கிறது. சந்நிதியின் வட புறத்திலுள்ள குளங்களில் தாமரை மலர்கள் வெகு அழகாய்க் காண்கின்றன.

மார்க்கமும்வசதியும்:—தெனனிந்தியா ரைல்வே யின் மதுரை ஜங்ஷன் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 7மைல் தூரம் சென்றால் இத்தலத்தை யடையலாம். குதிரை மாட்டு வண்டிகள் கிடைக்கும். மற்றும் மேலூர் போகும் மோட்டார் பஸ் வண்டியிலேறி 6 மைல் தூரமுள்ள ஒற்றைக்கடை யென்னும் ஊரிலி றங்கி வலது கைப்புறமாய்ச் செல்லும் கற்சாலையில் 1¼ மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம். ஊரில் சத் திரமில்லை. ஆகார ஹோட்டல்களுமில்லை. சந்நதியில் தரிசினம் செய்து கொண்டு உடனே மதுரைக்குத் திரும்பிவிடுவது நலம்.

## 71. திருத்தண்கால் 45.

மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
5-ம் பத்து 6-ம் திருமொழி 2-ம் பாசுரம்
திருநெடுந் தாண்டகம் 17-ம் பாசுரம்
சிறிய திருமடல் 71-ம் பாசுரம்
பெரிய திருமடல் 120-ம் பாசுரம்
பூதத்தாழ்வாரருளிச் செய்த இரண்டாந் திருவந்தாதி
70-ம் பாசுரம்

ப்ரபாவம்:—அப்பன், தண்காலப்பன், அன்ன நாயகி, அநந்த நாயகி, நாய்ச்சியார்நால்வர், தேவசந்

திரவிமாநம், பாபவிநாசதீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், சல்ய பாண்டியனுக்கும், ஸ்ரீ வல்லபனுக்கும், புலிக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இச்சந்நதியின் கருடாழ்வார் சர்ப்பமும் அமிருத கலசமும் ஏந்திய கரங்களுடன் விளங்குவதைக் கவனிக்கவும்.

இச்சந்நதி உயரமாய் ஓர் சிறு மலைமேலிருக்கிறது. பூர்வத்தில் இச் சந்நதியைக் கட்டும் பொழுது பெரிய படிக்கட்டுகள்கட்டி செங்குத்தாய் காணுமாறு கிழக்குத் திசை நோக்கிக் கட்டப்பட்டிருந்ததை அப்படியே வைத்து, பின்னிட்டகாலத்தில் தெற்குத் திசையில் விசாலமான படிக்கட்டுகளுடன் அழகிய மண்டபத்துடன் ஒரு கட்டிடம் கட்டியிருக்கிறது. இம்மார்க்கமாய் யாத்ரீகர்கள் உற்சென்றால் முதலில் நின்ற திருக்கோலத்துடனிருக்கும் ஜாம்பவதி நாச்சியாரைத் தரிசினம் செய்து பின்னர் உயரமாயுள்ள பெருமாளின் சந்நதிக்குச் செல்ல இயலும்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே (S. I. Rly) மீட்டர்கேஜ் விருதுநகர்—தென்காசி கார்டுலைனிலுள்ள சிவகாசி என்னும் ஸ்டேஷனிலிறங்கி வடக்கே 2 மைல் தூரம் கற்சாலையில் சென்றால் இத்தலத்தை யடையலாம். சிவகாசியிலிருந்து குதிரை மாட்டு வண்டிகள் சுலப வாடகைக்குக் கிடைக்கும். இவ்விடம் இராமானுஜ கூடமிருக்கிறது. ஆகார ஹோட்டல்களுமிருக்கின்றன. ஊரும் சுமாராய்ப் பெரியதாயிருக்கிறது. சிவகாசியில் சத்திரமுண்டு. ஆகார ஹோட்டல்களிருக்கின்றன. ஆனால் இப்பிரதேசங்களில் ஜலக் கஷ்டமுண்டு. இறைகிணறுகளுள.



ஸ்ரீ வில்லிபுத்தூர்-ஸ்ரீஆண்டாள்ரதம். வடபத்திரசயநர் சந்நதி கோபுரம் (Srivilliputhur)

## 72. ஸ்ரீ வில்லிபுத்தூர் 48.

மங்களாசாசனம்

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி
2-ம் பத்து 2-ம் திருமொழி 6-ம் பாசுரம்

ஆண்டாளருளிச் செய்த நாய்ச்சியார் திருமொழி
முதலாயிரம் 5-ம் திருமொழி 5-ம் பாசுரம்

ப்ரபாவம்:—வடபத்திரசயநர், ரங்கமன்னார், ஆண்டாள், பெரியதிருவடி, கோதைநாய்ச்சியார், ஸம்ஸநவிமாநம், திருமுக்குள தீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், வடபத்ரசயநம், நின்ற திருக்கோலம், மண்டுக மகரிஷிக்கும், பெரியாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார், ஆண்டாள் அவதாரஸ்தலம்.

(குறிப்பு) வடபத்திரசயநர் சந்நதி பூர்வீகம். பெரிய கோபுரமிருக்கிறது. இச்சந்நதியின் உட்பிரகாரம் சென்றதும் எதிரில் ஓர் கற்பக்கிரகமிருக்கிறது. வெகுவும் இருட்டாயிருக்கிறது. இதற்கு மேலண்டை சேர்ந்தாப்போல் வடபத்திர சயநர் சந்நதி யிருக்கிறது. அதற்கு வழி இவ்விருட்டாயிருக்கும் சந்நதியின் வலது பக்கமிருக்கிறது. இம்முன்னிருக்கும் சந்நதி சிவன் கோயிலென்கிறார்கள். மதுரையில் அரசுபுரிந்த திருமலை நாயடுவின் காலத்திலிருந்து இச்சிவன் சந்நதிக்குப் பூஜை வகைராக்கள் தப்பிப்போய் முக்கியமாய் வைஷ்ணவ சந்நதியாய் வைஷ்ணர்களிடமே இச்சந்நதி யிருப்பதாகக் கேள்வி. இச்சந்நதியின் தென் புரத்தில் வெளி மதிலுக்குப் பக்கத்திலுள்ள துளசித் தோட்டத்திலேயே பெரியாழ்வார் வாழ்ந்திருந்தன ரென்றும் இதுவே ஆண்டாளவதரித்த துளசி தோட்ட மென்றும் சொல்லுகிறார்கள். இப்பொழுது இதில் ஆழ்

வாரின் சந்நதியிருக்கிறது. ஆண்டாளின் சந்நதியிலிருந்து வடபத்ரசயநர் சந்நதி செல்வதற்கு இடக்கை புரம் திரும்பும் சந்தில் இடதுபுரமாயுள்ள தோட்டம் தான் இது.

ஆண்டாள் சந்நதி நூதனமாய்க் கட்டப்பட்டிருக்கிறதை கவனிக்கவும். கற்பக்கிரகத்தின் விமானத்தில் அனேக பதுமைகளிருக்கின்றன. சுற்றிலும் ஆண்டாளருளிச்செய்த திருப்பாவையாகிய 30 பாசுரங்களின் தாத்பர்யத்தை நன்றாய்த் தெரியுமாறு பதுமைகளால் விளக்கி யிருக்கிறார்கள். கற்பக் கிரகத்திற்குள் தென்னண்டையில் ஆண்டாளும் மத்தியில் ரங்கமன்னாரும் வடவண்டையில் அவர் பக்கல் பெரிய திருவடியும் சேவை சாதிக்கிறதைக் கவனிக்கவும். ஆண்டாளுக்கு ஆடிப்பூரத்தன்று இழுக்கும் ரதம் வெகுவும் பெரியது. இத்தலத்தில் இப்பொழுதைக்கும் ஆண்டாளின் உற்சவ மஹிமை வெகுவாயிருக்கிறதே யொழிய வடபத்ரசயநரின் உற்சவச் சிறப்பாகிலும் கோயில் சிறப்பாகிலுமதிகமாயில்லை. இச்சந்நதிக்கும் வரும்படி அதிகமாயிருக்கிறாப்போல் காண்கிறதில்லை. மதுரை சமஸ்தானத்தின் திருமலைநாயுடுகாரவர்கள் இவ்வூரில் ஓர் அரண்மனை கட்டி வாழ்ந்துவந்ததாகச் சொல்லப்படுகின்றது. அவ்வரண்மனையென்று சொல்லப்படும் ஓர் பெரிய பழமையான கட்டிடமும் இன்றும் ஊருக்குள்ளிருக்கிறது. அதில் இப்பொழுது சில சர்க்கார் ஆபீசுகளிருக்கின்றன. இவ்வூரில் ஜலக்கஷ்டமுண்டு. ஊரிலுள்ள இறை கிணறுகளின் தீர்த்தம் உப்பாயிருக்கும். இவ்வூருக்கு 10 மைல் வடக்கேயுள்ள வத்ராயிருப்பு யென்னும் கிராமம் தாண்டி 2 மைல் மேற்கே சென்றால்

நல்லதங்காள் தன் 7 பிள்ளைகளுடன் விழுந்து மாண்ட கிணர் இருக்கிறது. நல்லண்ணன் நல்லதம்பி யென்பவர்களின் பட்டணமா யிருந்ததென்று சொல்லப்படும் இப்பொழுது பாழடைந்து கிடக்கும் சில கட்டிடங்கள் காண்கின்றன.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரெயில்வே (S. I. Rly.) மீடர்கேஜ் விருதுநகர்—தென்காசி, கார்டு லையினிலுள்ள ஓர் ரெயில்வே ஸ்டேஷன். ஸ்டேஷனிலிருந்து ஊர் சுமார் 1 மைல் மேற்கேயுள்ளது. வண்டிகளுண்டு. சத்திரங்களும், இராமாநுஜ கூடங்களும், காபி சாப்பாடு ஹோட்டல்களுமிருக்கின்றன. இது பெரிய முனிசிபல் பட்டணம். முனிசிபல் சத்திரமுமிருக்கிறது. ஜலக்கஷ்டமுண்டு. ஆண்டாளின் உற்சவங்களாகிய ஆடிப்பூரம் மார்கழி நீராட்டத்திற்கு அநேக ஜனங்கள் இவ்விடம் சேருகிறார்கள்.

## 73. திருக்குறுங்குடி 57.

மங்களாசாசனம்

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி
1-ம் பத்து 6-ம் திருமொழி 8-ம் பாசுரம்

திருமழிசையாழ்வாரருளிச் செய்த திருச்சந்த விருத்தம்
62 ம் பாசுரம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி

| | | |
|---|---|---|
| 1-ம் பத்து | 6-ம் திருமொழி | 8-ம் பாசுரம் |
| 5 „ | 6 „ | 2-ம் „ |
| 6 „ | 3 „ | 3-ம் „ |
| 9 „ | 5 „ | 10பாசுரங்கள் |
| 9 „ | 6 „ | 10 „ |

திருநெடுந்தாண்டகம் 14-ம் பாசுரம்
பெரிய திருமடல் 114-ம் பாசுரம்

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1-ம் பத்து | 10-ம் | திருமொழி | 9-ம் | பாசுரம் |
| 3 | ,, | 9 | ,, | 2-ம் | ,, |
| 5 | ,, | 5 | ,, | 11 | பாசுரங்கள் |

ப்ரபாவம் :—வைஷ்ணவ நம்பி, மலைமேல் நம்பி, நின்றநம்பி, இருந்தநம்பி, திருப்பாற்கடல்நம்பி, குறுங்குடிவல்லி, பஞ்சகேதகவிமானம், திருப்பாற்கடல் நதி, பஞ்சதுறை, கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், பக்கம் நின்ற சிவனுக்கு ப்ரத்யக்ஷம்.

திருமங்கையாழ்வார் திருநாட்டுக்குக் கெழுந் தருளிய ஸ்தலம் இதுவே:

குறிப்பு:—இது வெகுவும் பெரிய சந்நதி. முன் கோபுரத்தில் கருங்கல்லில் செதுக்கியுள்ள சித்திர வேலைகள் மரத்தில் செய்யப் பட்டவைகள் போல் காணும். நின்ற நம்பி, கிடந்த நம்பி சந்நதிகளுக்கு மத்தியில் ஓர் சிவன் கோயிலிருக்கிறது. சந்நதியை பிரதக்ஷணம் வரும்பொழுது சிவனையும் பிரதக்ஷணம் செய்யவேண்டும். உடையவரென்ற இராமாநுஜர் இத் தலம் வந்தபொழுது அவரை ஆசார்யனுயடைந்து மந்த்ரார்த்த விசேஷங்களை அவரிடமிருந்து நம்பி கேட்டமையால் இவருக்கு ஸ்ரீவைஷ்ணவநம்பி யென்ற திருநாமம் வந்ததென்பர். இத்தலத்தின் மேல்புரம் காணும் மலைக்கு மகேந்திரகிரி என்று பெயர். இம்மலையில் சந்நதியிலிருந்து சுமார் 6 மைல் தூரத்தில் "மலைமேல் நம்பி" யென்னும் சந்நதி யிருக்கிறது. ஆற்றின் கரையில் திருப்பாற்கடல்நம்பி சந்நதியிருக்கிறது. ஆற்

யில் சற்று தூரத்தில் உடையவர் உட்கார்ந்திருந்த பாறைக்கு திருப்பரி வட்டப்பாறை யென்று வழங்கப் படுகிறது. உடையவர் மலைநாட்டுக்கு வைஷ்ண வத்தை பரவச்செய்ய சென்றபொழுது அவ்விடம் இவர் சீர்திருத்தங்கள் கூடாதென்று அனந்தபத்ப நாபன் பெரிய திருவடியைக்கொண்டு உடையவரை இத்தலத்தின் இப் பாறையின்மேல் கொண்டுவந்து சேர்த்தனரென்று ஓர் வரலாறு சொல்லுகின்றனர். ஆகையால்தான் இன்றும் சிவ—வைஷ்ணவ த்வேஷங் கள் மலை நாட்டில் கிடையாது. அர்ச்சகர்களும் தினம் தப்பி தினம் வேற்றுமை யின்றி சிவன் விஷ்ணு சந்நதி களில் பூஜை செய்து கொண்டிருக்கிறார்கள்.

மார்க்கமும் வசதியும்:-தென் இந்தியா ரெயில்வே (S. I. Rly.) மீடர் கேஜ் திருநெல்வேலி-தென்காசி லயினில் உள்ள சேர்மாதேவி என்னும் ஸ்டேஷனி லிறங்கினால் தெற்கில் 18 மைல் தூரத்திலிருக்கும் ஸ்தலம். ஸ்டேஷனிலிருந்து மோட்டார் பஸ் வண்டிகள் இவ்விடத்திற்குப் போய் வந்துகொண் டிருக்கின்றன.

மற்றும் ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து தெற்கேதென் காசி ஜங்ஷன் சேர்ந்து பின்பு கிழக்கே திருநெல் வேலி மார்க்கம் போகும் வண்டியிலேறி சேர்மாதேவி என்னும் ஸ்டேஷனிலிறங்கி மோட்டார் பஸ் வண்டி யில் செல்ல வேண்டும். வாணமாமலை என்னும் நங்கு னேரியிலிருந்து மோடார்பஸ் வண்டி மூலியமாய் மேற்கே 8 மைல் சென்றால் இத்தலத்தை யடைய லாம். நாகர் கோவிலிருந்து சேர்மாதேவி போகும் பஸ் வண்டியிலேறினால் இத்தலத்தின் மார்க்கமாய்த் தான் சேர்மாதேவி செல்லும். ஆகாரக் கடைகளுண்டு.

## 74. ஸ்ரீ வைகுந்தம் 54.

மங்களாசாசனம்.

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய் மொழி

9ம் பத்து 2ம் திருமொழி 4ம் பாசுரம்

ப்ரபாவம்:—கள்ளப்பிரான், வைகுந்தநாதன், வைகுந்தவல்லி, சந்திரவிமானம், தாம்பிரபர்ணிநதி, ப்ருதுதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், இந்திரனுக்கும் ப்ருதுசக்ரவர்த்திக்கும் ப்ரத்யக்ஷம்.

குறிப்பு:—இது பெரிய சந்நதி. வெளியில் சந்நதிக்குள் பிரவேசிக்கும்பொழுது வலது கைப்புறத்தி லுள்ள மண்டபத்திலுள்ள கற்றான் சிலைகள் வெகு அற்புதமாக வேலையா யிருக்கின்றன. பூஜைகாலம் தப்பினல் கற்பக் கிரகம் எப்பொழுதும் மூடப்பட்டிருக்கும். மற்ற வேளையில் தரிசனம் செய்யவேண்டுமானல் சந்நதியின் அர்ச்சகர்கள் வெளி மண்டபத்திலிருந்தாலும் ரூ. 0—12—0க்குக்குறையாமல் பணம் கொடுத்தால் தான் சந்நதி திறந்து தரிசனம் செய்விப்பார்கள். மற்ற சந்நதிகளைப்போல் அர்ச்சகர்கள் இங்கு யாத்ரீகர்களுக்குச் சகாயஞ் செய்கிறதில்லை. பகல் வேளை தப்பினல் மற்றும் சாயங்திரந்தான் கற்பக் கதவைத் திறப்பார்கள். அவர்கள் கேட்ட பணம் (தண்டம்) கொடுத்தால் எந்த சமயமானலும் தரிசினம் செய்து கொண்டு ரெயிலுக்கு உடனே திரும்பி விடலாம். இச்சந்நதியின் அர்ச்சகர்தான் இச்சந்நதிக்கு கிழக்கே 1 மைல் தூரத்திலுள்ள வரகுணமங்கை யென்றும் திவ்ய தேசத்தின் அர்ச்சகர். காலையில் இவர்கூடச் சென்றால்தான் அச்சந்நதியின் சேவை

கிடைக்கும். தப்பினால் தரிசனம் கிடையாது. இவர் பூஜை செய்தவுடனே வெளிக் கதவுகளையும் பூட்டி விட்டு வந்து விடுவார். யாத்ரீகர்கள் வரகுண மங்கை செல்லவேண்டுமானால் இந்த அர்ச்சகரை உடன் கூட்டிக் கொண்டே சென்றால் தரிசனம் செய்யலாம்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரெயில்வே (S.I.Rly.)மீடர் கேஜ் திருநெல்வேலி—திருச்செந்தூர் கிளையெனிலுள்ள ஓர் ஸ்டேஷன். ஸ்டேஷனிலிருந்து சந்நதி சுமார் $\frac{3}{4}$ மைல் தூரத்தில் தாம்பிரபாணி நதியின் வடகரையிலிருக்கிறது. ஸ்டேஷன் தென் கரையிலிருக்கிறது. வண்டிகள் கிடைக்கின்றன. திருநெல்வேலியிலிருந்து மோட்டார் பஸ் வண்டிகள் இத்தலத்தின் பேரிலேயே சென்று திருச்செந்தூர் போகின்றன. தூத்துக்குடி திருச்செந்தூர் மோட்டார்பஸ் வண்டிகள் இத்தலத்திற்கு வந்தே முன் போகவேண்டும். சத்திரமுண்டு. ஆகார ஹோட்டல்களிருக்கின்றன. பெரிய தாலூக்கா பட்டணம்.

## 75. வரகுணமங்கை 55.

மங்களசாசனம்

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய் மொழி

9-ம் பத்து 2-ம் திருமொழி 4-ம் பாசுரம்

ப்ரபாவம்:—விஜயாஸநர், வரகுணவல்லி, விஜயகோடிவிமானம், தேவபுஷ்கரிணி, அக்நிதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்ததிருக்கோலம், அக்நிக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:—இச் சந்நதி ஸ்ரீ வைகுண்டத்திற்கு கிழக்கில் 1 மைல் தூரத்தில் தூத்துக்குடி

போகும் கற்சாலையின் இடது கைப்புறமிருக்கிறது. இவ்விடத்தை இப்பொழுது நத்த மென்பர். மாட்டு வண்டிகள் சுலப வாடகைக்கு அகப்படும். சந்நதியில் தரிசினம் செய்து கொண்டு ஸ்ரீ வைகுண்டம் திரும்பி விடவேண்டியது. சந்நதியின் சுற்றுப்பக்கம் வீடு கள் கிடையாது. சந்நதியின் வெளிவாசல் எப்பொ ழுதும் மூடப்பட்டேயிருக்கும். ஸ்ரீ வைகுந்தம் சந்நதி யின் அர்ச்சகர் இவ்விடம் வந்து பூஜை செய்து கதவு களைப் பூட்டிவிட்டுப் போய்விடுவார். அவர் கூட வந் தால் தான் தரிசினம் செய்ய முடியும்.

## 76. திருப்புளிங்குடி 52.

மங்களாசாசனம்

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய் மொழி

8-ம் பத்து 3-ம் திருமொழி 5-ம் பாசுரம்
9 ,, 2 ,, 11 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—காய்சினவேந்தன், மலர்மகள் நாய்ச் சியார், புளிங்குடிவல்லி, வேதஸாரவிமாநம், வருண தீர்த்தம், நிருதி தீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், புஜங்க சயநம், நிருதிக்கும், வருணனுக்கும், தர்ம ராஜா வுக்கும் ப்ரதயக்ஷம்.

(குறிப்பு) பிராமணரல்லாதார் சந்நதிக்குள் சென்று பெருமாளை தரிசனம் செய்ய விடப்படமாட் டார்கள். ஆனால் பிரகாரத்தில் திருவடியிருக்கும் பக் கத்தில் ஓர் கல் ஜன்னலின் வழியாய்த்தான் மூலஸ்தா னப் பெருமாளை இவர்கள் சேவிக்க வேண்டும். இச் சந்நதியில் ஸ்ரீ சடாரி கிடையாது. சிறிய கிராமம். சத்தி ரம் மற்றும் ஹோட்டல்கள் கிடையாது. சந்நதியில் தரிசினமானதும் ஸ்ரீ வைகுந்தம் திரும்பிவிடவேண்டும்.

மார்க்கமும் வசதியும்:—ஸ்ரீ வைகுந்தத்திற்கு கிழக்கு 2 மைல் தூரத்தில் தூத்துக்குடி போகும் கற்சாலையின் இடதுபுறமுள்ள சந்நதி. ஸ்ரீ வைகுந்தத்திலிருந்து குதிரை மாட்டு வண்டிகளுண்டு.

## 77. திருக்குளந்தை (பெருங்குளம்) 56.

மங்களாசாசனம்

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி

8-பத்து 2-ம் திருமொழி 4-ம் பாசுரம்

ப்ரபாவம்:—மாயக்கூத்தன், குளந்தைவல்லி, ஆநந்தநிலயவிமாநம், பெருங்குள தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், ப்ருஹஸ்பதிக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இச்சந்நதிக்கு வடபுரம் ஒரு பெரிய குளமிருக்கிறது. ஆகையால் தான் இதற்குப் பெருங் குளமென்றும் திருக்குளந்தை யென்றும் பெயராயிற்றதுபோலும். குளத்தில் ஜலம் இல்லாத காலங்களில் ஜலக்கஷ்டமதிகம். இக்குளத்தில் வெய்யல் காலத்தில் சிலசமயங்களில் ஜலம் முழுதும் வற்றிப்போய்விடுகிறது.

மார்க்கமும் வசதியும்:—இத்தலம் ஸ்ரீ வைகுந்தத்திலிருந்து கற்சாலை மார்க்கமாய் வடகிழக்கில் 7 மைல் தூரத்திலிருக்கிறது. ஸ்ரீ வைகுந்தத்திலிருந்து ஏரல் என்னுமிடத்திற்குப் போகும் மோட்டார் பஸ் வண்டியிலேறினல் இத்தலங் கடந்தே ஏரல் செல்ல வேண்டும். மாட்டு வண்டிகளும் கிடைக்கின்றன. காபி ஹோட்டல்க ளிருக்கின்றன. தங்க இட வசதி கிடைக்கும். பெரிய கிராமம். தாம்பிரபரணி நதி இதற்கு 1 மைல் தெற்கில் ஓடுகிறது.

## 78. திருக்குருகூர் (ஆழ்வார் திருநகரி) 49.

மங்களாசாசனம்

நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழி

4-ம் பத்து 10-ம் திருமொழி 11 பாசுரங்கள்

ப்ரபாவம்:—ஆதிநாதப்பெருமாள், பொலிந்து நின்றபிரான், ஆதிநாதவல்லி, கோவிந்தவிமானம், தாம்பிரபரணி நதி, பிரமதீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், நின்றதிருக்கோலம், பிரமனுக்கும், நம்மாழ்வார் மதுரகவிகளுக்குப் ப்ரத்யக்ஷம்.

குறிப்பு:—இது நம்மாழ்வார் மணவாள மாமுனிகளின் அவதார ஸ்தலம். இச்சந்நதிக்குள் ஒரு பெரிய புளியமரமுண்டு. இதற்கு 6 கிளைகள் வெகு பெரியவைகளாய்ப் பிரிந்துள்ளன. இதைத் தூங்காப் புளி யென்பர். இச்சந்நதிக்கு 1 மைல் கிழக்கேயுள்ள அப்பன் சந்நதி யென்னும் நம்மாழ்வாரின் அப்பன் (தந்தையாகிய) காரிமாருடைய சந்நதியிருக்கு மிடத்தில் நம்மாழ்வார் பிறந்ததும் கண்களை விழித்து முறுவல் செய்து முலையுண்ணுமல் மௌனத்தோடே வாட்டமின்றிருக்க மாதாபிதாக்கள் எம்பெருமான் மேல் பாரத்தைச் சுமத்தி பன்னிரண்டாம் நாள் தாம்பிரபரணியின் தென்கரையிலுள்ள பொலிந்து நின்றபிரான் திருமுன்னே இவ்வாழ்வாரை யெடுத்துக்கொண்டு அவரை சேவிக்கப்பண்ணி இவருக்கு மாறன் என்று திருநாமஞ் சாற்றி இப்புளியமரத்தினடியில் தொட்டிலில் வளர்த்தி இவரை புத்திரரென்றெண்ணுமல் சேவித்துக்கொண்டிருக்க இவ்வாழ்வார் பதினறு வருஷங்கள் வரையிலும் திருக்கண்களை விழியாமல் மௌநியாய் பத்மாசநத்தில் ஞான முத்திரை



திருக்குருகூர் (ஆழ்வார் திருநகரி) (Alwarthirunagari Temple)

யோடே எழுந்தருளியிருந்த புளிய மரம் இதுவே யென்பர். இச்சந்நதியிலிருக்கும் நம்மாழ்வாரின் விக்கிரகம் தாம்பிரபரணி நதியினின்றும் ஜலத்தைக் காய்ச்சி சேர்த்த தாம்பிரத்தினின்றும் அவர் சிஷ்ய ரான மதுரகவியாழ்வார் அர்ச்சாவதார ரூபமான ஆழ் வார் விக்ரஹத்தை யருளப்பண்ணினாரென சொல்லப் படுகிறது. அவ்விக்கிரஹமே ஸ்ரீமந்நாதமுனிகளுக்குத் தமிழ் பாசுரங்களான 4000 ப்ரபந்தப் பாசுரங்களையும் திருவாய்மலர்ந்ததென்றும் சொல்லப்படுகிறது. (ஸ்ரீமந் நாதமுனிகளின் சரித்திரத்தைப் பார்க்கவும்.)

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரெயில்வே (S. I. Rly.) மீடர்கேஜ் திருநெல்வேலி—திருச்செந் தூர் கிளையனிலுள்ள ஆழ்வார் திருநகரி யென்னும் ஓர் ரெயில்வே ஸ்டேஷன். சந்நதி ஸ்டேஷனிலிருந்து சுமார் ½ மைல் தூரத்திலிருக்கிறது. வண்டிகளுண்டு. சத்திரங்களுண்டு. சந்நதிக்குத் தென்னண்டையிலிருக் கும் மதராஸ் செட்டிமார்களின் சத்திரம் வெகு சௌக் கியம். சத்திரத்தின் பின்புரத்தில் தாம்பிரபரணி நதி யின் கால்வாய் ஓடுகிறது. இது ஸ்ரீ வைகுந்தத்தி ருலிந்து கிழக்கே 3 மைல் தூரத்திலுள்ள ஸ்தலம். காபி சாப்பாடு ஹோட்டல்களிருக்கின்றன. பெரிய ஊர்.

முக்கிய கவனிப்பு:—இதைச் சுற்றிலு முள்ள திருப்பதிகளுக்கு நவ திருப்பதி யென்று பெயர். இவைகளை யெல்லாம் ஒரே நாளில் சேவிக்கவேண்டு மென்றாலும் சேவிக்கலாம். எப்படி யென்றால், நேராக ஆழ்வார் திருநகரி ஸ்டேஷனிலிறங்கி செட்டிமார் சத்திரத்தில் தங்கிவிடவேண்டும். மாலையில் இவ் விடத்திய சந்நதியை சேவித்துக்கொண்டு ஒரு இர

டைமாட்டு வண்டியை அன்றே பேசி தீர்மானஞ் செய்துகொண்டு பொழுது விடியுமுன் புறப்பட்டு நேராய் 6 மைல் தூரத்திலுள்ள திருக்குளந்தை யென்னும் பெருங்குளத்திற்குப்போய் சேவித்துக்கொண்டு அவ்விடமிருந்து 2 மைல் தெற்கிலிருக்கிற திருப்பேரையைச் சேவித்து, நடந்து ஆற்றைக் கடந்து எதிர் கரையிலுள்ள தொலைவில்லிமங்கலம் என்னும் இரட்டைத் திருப்பதியைச் சேவித்து, மேற்கே 1 மைல் சென்று அப்பன் சந்நதியைச் சேவித்து விட்டு, தாம்பிரபரணி ஆற்றைத்தாண்டி எதிர்கரையிலிருக்கும் திருக்கோளூரை சேவித்துவிட்டு வண்டியை விட்டு விட்டு, பஸ் ஏறி ஸ்ரீவைகுந்தம் சென்று அவ்விடம் ஒரு ஜட்காவண்டியை ஏற்படுத்திக்கொண்டு திருப்புளிங்குடி, வரகுணமங்கை சேவித்து சாயந்திரம் ஸ்ரீவைகுந்தம் சேர்ந்து பொலிந்து நின்ற பிரானையும் சேவித்துவிட்டு, ரைல் அல்லது பஸ்மார்க்கம் திருநெல்வேலிக்குத் திரும்பலாம்.

## 79. திருப்பேரை 53.

மங்களாசாசனம்

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி

7-ம் பத்து 3-ம் திருமொழி 11 பாசுரங்கள்

**ப்ரபாவம்:**—மகரநெடுங்குழைக் காதன், நிகரில் முகில் வண்ணன், குழைக்காதவல்லி, பத்திர விமானம், சுக்ரபுஷ்கரிணி, கிழக்கே திருமுக மண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், சுக்ரனுக்கும், பிரமனுக்கும், ஈசாந்யருத்ரனுக்கும் ப்ரத்யக்ஷம்.

**மார்க்கமும் வசதியும்:**—இது ஆழ்வார் திருநகரிக்குத் தென் கிழக்கே கற்சாலை மார்க்கத்தில் 5 மைல்



தொலைவில்லிமங்கலம்–ஸ்ரீநிவாசர் சந்நதி
(இரட்டைத்திருப்பதி)



தொலைவில்லிமங்கலம்-செந்தாமரைக் கண்ணன் சந்நதி
(இரட்டைத் திருப்பதி)

தூரத்திலிருக்கிறது. திருச்செந்தூர் போகும் மோட்டார் பஸ்வண்டிகள் இவ் வழியாய்ப் போகின்றன. ஆழ்வார் திருநகரியிலிருந்து வண்டிகள் கிடைக்கின்றன. ஊர் பெரியது. ஆகாராதிகளுக்கு வசதியுண்டு. சத்திரமுமிருக்கிறது. இதற்கு எதிர் பக்கம் 1 மைல் தூரத்தில் தாம்பிரபரணியாற்றின் வடபுறத்தில் தொலைவில்லிமங்கலம் என்னும் இரட்டைத் திருப்பதியிருக்கிறது.

## 80. தொலைவில்லி மங்கலம் 50.

(இரட்டைத் திருப்பதி)

மங்களாசாசனம்

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி
6-ம் பத்து 5-ம் திருமொழி 11பாசுரங்கள்

ப்ரபாவம்:—தேவபிரான், அரவிந்தவிலோசநன், கருந்தடங்கண்ணி, குமுத விமாநம், தாம்பிரபரணிநதி, வருண தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், வீற்றிருந்த திருக்கோலம், இந்திரன், வாயு, வருணன் இவர்களுக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இதற்கு இரட்டைத் திருப்பதி என்று பெயர். இவ்விடம் இரண்டு சந்நிதிகளைத் தவிர வேறு வீடுவாசல்கள் கிடையாது. பூர்வத்திலிருந்த ஊர் பாழடைந்திருக்கிறது. சத்திரம் கடைகளில்லை. சந்நிதிக்கு முன்புரமிருக்கும் மண்டபத்தில் தங்கலாம். தாம்பிரபரணி ஆற்றின் கரைமேலிருக்கும் சந்நிதியை ஸ்ரீநிவாசன் சந்நிதி யென்கிறார்கள். அதற்கு வடவண்டை 100 கஜம் தூரத்திலுள்ள சந்நிதி

செந்தாமரைக்கண்ணன் சந்நதி யெனப்படுகிறது. இரண்டு சந்நதிகளுக்கும் ஒரே அர்ச்சகர். இவர் வாச மிருப்பது எதிர்க்கரையிலுள்ள திருப்பேரையில். ஆனல் பகல் முழுவதும் ஸ்ரீனிவாசன் சந்நதியிலேயே யிருப்பார்.

மார்க்கமும் வசதியும்:—ஆழ்வார் திருநகரியி லிருந்து கிழக்கே ஆற்றின் வட கரையில் 2 மைல் தூரத்திலிருக்கிறது. இதற்கு மேற்கே 1 மைல் தூரத் தில் சௌரமங்கலம் என்னும் கிராமத்திற்கு மேற்கில் அப்பன் சந்நதி யென்னும் நம்மாழ்வார் அவதார ஸ்தல மிருக்கிறது. இம்மார்க்கமாய் வடகிழக்கு 5 மைல் சென்றல் திருக்குளந்தை யென்னும் பெருங்குளம் சந்நதியிருக்கிறது. ஆழ்வார் திருநகரியிலிருந்து திருக்குளந்தைப் போகவேண்டுமானல் மாட்டு வண்டி கள் ஆற்றைக் கடந்து இத்தலத்தின் வழியாய்ப் போகின்றன.

## அப்பன் சந்நதி.

இது ஒரு சிறிய கிராமம். தாம்பிரபரணியின் வடகரையிலுள்ளது. எதிர் கரையில் ஒரு சிறிய ஊரிருக்கிறது. அதன்பெயர் லக்ஷ்மணன் தோப்பு எனப்படுகிற இடத்திலிருந்து ½ மைல் தெற்கே சென் றல் மதுரகவிகள் அவதார ஸ்தலமாகிய திருக்கோளு ரிருக்கிறது. இவ்வூரில் ஆழ்வாரின் தகப்பனுகிய (அப்பன்)காரிமாரன், தாய் உடைய நங்கையின் சந்நதி யிருக்கிறது. இதற்கு இடதுபுரத்தில் உள்பிரகாரத்தில் ஆழ்வார் பிறந்ததாகச் சொல்லப்படுகிறது. ஒரு மேடை போட்டிருக்கிறர்கள்.

## 81. திருக்கோளூர் 58.

மங்களாசாசனம்

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி

6-ம் பத்து 7-ம் திருமொழி 11 பாசுரங்கள்
8 ,, 3 ,, 5-ம் ,,

ப்ரபாவம்:—வைத்தமாநிதி (நிக்ஷேபவித்தன்) கோளூர் வல்லி, ஸ்ரீகரவிமாநம், குபேரதீர்த்தம், தாம்பிரபரணி நதி, கிழக்கே திருமுகமண்டலம், புஜங்க சயநம், குபேரனுக்கும், மதுரகவியாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம். மதுரகவியாழ்வார் அவதாரஸ்தலம்.

(குறிப்பு) இத்தலத்தின் பெருமாள் தன் இடது கையை உயர்த்தி உள்ளங்கையைப் பார்த்துக்கொண்டிருக்குமாப்போல் சயநம். தன் நிதியையெல்லாம் குபேரனுக்குக் கொடுத்த பின்னர் அவைகள் எவ்விடமிருக்கிறதென்று அஞ்சனம் பார்க்கிறாரென்று சாமானிய ஜனங்கள் சொல்லுகிறார்கள். சிறிய ஊர். சாப்பாடு சௌகரியங்கள் கிடையாது. ஆழ்வார் திருநகரிக்கே தரிசினமான பின்பு திரும்பிச் செல்லுவது உத்தமம்.

மார்க்கமும், வசதியும்:—ஆழ்வார்திருநகரியிலிருந்து கிழக்கே 2 மைல் தூரத்திலிருக்கிறது. வசதிகள் கிடையாது.

முக்கிய கவனிப்பு:—ஆழ்வார்திருநகரியின் சுற்றிலுமுள்ள நவத்திருப்பதிகளென்னும் அஷ்ட திவ்ய தேசங்களாவன:—(1) திருக்குருகூரென்னும் ஆழ்வார் திருநகரி. (2) திருக்கோளூர். (3) தொலைவில்லிமங்கலமென்னும் இரட்டைத் திருப்பதி. (4) திருப்

பேரை. (5) திருக்குளந்தை யென்னும் பெருங்குளம். (6) திருப்புளிங்குடி. (7) வரகுணமங்கை. (8) ஸ்ரீ வைகுண்டம். இந்த 8 திருப்பதிகளைச் சேவிக்க ஒரு இரட்டைமாட்டு வண்டியை ரூ. 2-8-0 அல்லது 3-0-0 ரூபாய்க்கு மேற்படாத வாடகைக்கு அமர்த்திக்கொண்டால் ஒன்று அல்லது இரண்டு தினங்களுக்குள் வண்டிக்காரன் கூட்டிக்கொண்டுபோய் சேவிக்க வைப்பான். அவசரமாயிருந்தால் ஒரேநாளில் இவைகளை யெல்லாம் சேவிக்கலாம்.

## 82. சிரீவரமங்கை (நங்குனேரி அல்லது வானமாமலை யென்றும் பெயர்) 51.

மங்களாசாசனம்

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி
5-ம் பத்து 7-ம் திருமொழி 11 பாசுரங்கள்

ப்ரபாவம்:—வானமாமலைப் பெருமாள், தெய்வ நாயகன், தோதாத்ரிப் பெருமாள், சிரீவரமங்கை நாய்ச்சியார், நந்தநவர்த்தநவிமாநம். இந்திர புஷ்கரிணி, சேற்றுத்தாமரை, கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி, சேனை முதலியார், பெரிய திருவடி இவர்களுடனும் சாமரகன்னிகைகள், சந்திரர் சூரியர் பக்கத்திருக்க இந்திரனுக்கும், பிரம்மாவுக்கும், உரோமசரிஷிக்கும், ப்ருகு ரிஷிக்கும், மார்க்கண்டேயருக்கும் ப்ரத்யக்ஷம்.

குறிப்பு:—இது அஷ்ட சுயம்பு ஸ்தலங்களில் ஒன்றாகும். ஏனைய ஏழாவன: (1) பத்ரீநாராயணன், (2) முக்தீநாராயணன். (3) நைமிசாரண்யம். (4) புஷ்கரன். (5) திருவேங்கிடம். (6) ஸ்ரீ முஷ்ணம்.



சிரீவரமங்கை-வானமாமலை-தோதாத்ரி (Vanamamalai)

(7) ஸ்ரீரங்கம். இத்தலத்தில் பெருமாளுக்கு தினமும் எண்ணெய்த் திருமஞ்சனம் நடக்கிறது. அந்த எண்ணெயை யெல்லாம் ஓர் காரைத் தொட்டியாகிய கிணற்றில் சேகரித்து வைத்திருக்கிறார்கள். இந்தக் கிணர் வெய்யல், மழை, காற்று, முதலானவை கள் விழும்படியாய் வெட்டார வெளியிலிருப்பதனால் சேகரித்த எண்ணெய்க்கு மருந்தின் குணமுண்டாய் ரோக நிவாரணமாகிற தென்கிறார்கள். நம்பிக்கையே முக்கிய காரணம். திருவாய்மொழி 5-ம் பத்து 7-ம் திருமொழி 6-ம் பாசுரத்தில் 3-ம் வரியில் ஆழ்வாரருளிச் செய்திருக்கும் "தேனமாம் பொழில் தண்சிரீவரமங்கலத்தவர்" என்பதில் கண்டிருக்கும் பிரகாரம் மாமரங்கள் இரண்டு இப்பொழுதைக்கும் மூலஸ்தானத்திற்குப் பின்புரம் பார்க்கலாம். இது வெகுவும் பெரிய சந்நதி. வாணமாமலை ஜீயர் மடமும் பக்கத்திலிருக்கிறது. சந்நதியும் மடத்தைச் சேர்ந்தது. இவ்விடம் ஆழ்வாருக்குத் தனியாக சந்நதி கிடையாது. ஆனால் இவர் உருவம் பெருமாளின் ஸ்ரீ சடாரியிலிருக்கிறது. அதைக் காண்பிக்கச் சொன்னால் அர்ச்சகர்கள் காட்டுவார்கள். சந்நதியின் கீழண்டை யில் ஒரு பெரிய குளமிருக்கிறது. வெய்யல் காலத்தில் இக்குளம் வற்றிப்போனால் இவ்வூரில் ஜலக்கஷ்ட மதிகம். இராமானுஜகூடங்களும் சத்திரங்களும் காபி ஆகார ஹோட்டல்களுமுண்டு. பெரிய தாலூக்கா பட்டணம்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரெயில்வே (S.I.Rly.) மீடர்கேஜ் மெயின் லயனில் திருநெல்வேலி ஜங்ஷன் ஸ்டேஷனிலிறங்கி மோட்டார் பஸ் வண்டி

மூலியமாய் தெற்கே நாகர்கோவில் போகும் வழியில் 18 மைல் தூரத்திலிருக்கும் ஸ்தலம். திருக்குறங்குடியிலிருந்து கிழக்கே 8 மைல் தூரத்திலுள்ளது. நாகர் கோவிலுக்கு வடக்கே 23 மைலிலிருக்கிறது. இவ்விடங்களுக்கெல்லாம் மோட்டார்பஸ் வண்டிகள் ஓடுகின்றன.

பாண்டிய நாட்டு 18 திருப்பதிகள் முற்றுப் பெற்றன.

---

## நான்காம்பாகம்

---

---

நான்காம் பாகம்

# மலைநாட்டுத் திருப்பதிகள் 13.

---

## முகவுரை.

பன்னிரு ஆழ்வார்கள் மங்களாசாசனம்
செய்தருளிய நூற்றெட்டுத் திருப்பதிகளின்
விவரங்களடங்கிய பாசுரம்.

---

"ஈரிருப தாஞ்சோழ மீரொன்ப தாம்பாண்டி
ஓர்பதின்மூன் றாமலைநா டோரிரண்டாம்—சீர் நடுநா
டாறோடி ரெட்டுதொண்டை யவ்வடநா டாறிரண்டு
கூறுதிரு நாடொன்றாக் கொள்."

ஓர் பதின்மூன்று மலைநாடு$=1\times13=13$.

இந்த 13 திவ்ய தேசங்களிருக்குமிடங்களின் விவரங்கள் :—

(திருவனந்தபுரம் சமஸ்தானமும்—மலபார் ஜில்லாவும்)

(1) தென் திருவனந்தபுரத்தின் நாகர்கோவிலினருகிலுள்ள சந்நதி—1, 83-வது.

(2) நாகர்கோவிலிலிருந்து திருவனந்தபுரம் போகும் வழியில் தொடுவெட்டியின் சமீபத்திலுள்ளது—1 84-வது.

(3) திருவனந்தபுரத்திலுள்ள சந்நதி—1, 85-வது.

(4) மத்தியதிருவனந்தபுரத்திலுள்ள செங்கன்னூர் வடக்கு என்பதின் சுற்றிலுமுள்ள சந்நதிகள்—6, 86-வது, முதல் 91-முடிய.

(5) வடதிருவநந்தபுரத்தில் எரணுகுளம் பக்கத்தி லுள்ள இடப்பள்ளியின் சமீபமுள்ள சந்நதி—1, 92-வது.

(6) காலடி ரோட் என்னும் ரெயில்வே ஸ்டேஷனின் பக்கத்திலுள்ள சந்நதி—1, 93-வது.

(7) மலபார் டிஸ்ட்ரிக்ட்டிலுள்ள சந்நதிகள்—2, 94-95-வது.

இந்த 13 சந்நதிகளை ஒரு வாரத்தில் சேவிக்கலாம். நிதானமாய் 10 நாட்களுக்குள் சேவித்துவிடலாம். எல்லாவிடங்களுக்கும் சவாரி வசதியுண்டு. யாத்ரீகர்களின் அநுகூலத்தின் பொருட்டு எமது முக்கிய க்ரந்தமாகிய 108 திவ்யதேச யாத்ரா ப்ரபாவ சந்திரோதயம் என்பதை தனித்தனி பாகங்களாய்ப் பிரித்து சுலப விலைக்கு வெளியிடப்பட்டிருக்கிறது.

பெங்களூர்,
1—8—35.

ஜி. கே. (105) பலிஜ,
வக்கீல்.

# மலைநாட்டுத்
# திருப்பதிகள் 13.

---

ஒவ்வொரு ஸ்தலத்தின் கடைசியில் கண்டிருக்கும் நெம்பர் இந்த ஸ்தலம் நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தின் 108 திவ்யதேச திருப்பதிகளின் அட்டவணையில் எத்தனையாவது என்று குறிப்பிடுகிறது.

## 83. திருவண்பரிசாரம் 60.

(திருப்பதி சாரமென்று சொல்வர்)

மங்களாசாசனம்.

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி.

8-ம் பத்து, 3-ம் திருமொழி 7-ம் பாசுரம்.

ப்ரபாவம்:—திருக்குறளப்பன், திருவாழ்மார்பன், கமலவல்லி நாய்ச்சியார், இந்திரகல்யாண விமானம், லக்ஷ்மி தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், விந்தைக்கும், காரிக்கும், உடைய நங்கைக்கும் ப்ரத்யக்ஷம்.

மூலவரின் மார்பின் இடது பக்கத்தில் லக்ஷ்மியிருப்பதைக் கவனிக்கவும்.

குறிப்பு:—இத்தலத்தை திருப்பதி சாரமென்றும் சொல்வர். இப்பெயர் சொன்னால்தான் சாமானிய ஜனங்கள் அறிவார்கள். நம்மாழ்வாரின் தாயாகிய உடையநங்கையாரின் அவதார ஸ்தலமிதுவே. சிலர், நம்மாழ்வார், தன் தாயின் பிரதம புத்திரராய்த் திருவவதரித் தருளினதால் தென்னாட்டின் வழக்கப்போல் தன் தாய் வீடாகிய இத்தலத்திலேயே பிறந்திருக்க

வேண்டுமென்றும், தன் பிதாவின் வீடாகிய அப்பன் சந்நதியில் அல்லவென்றும் அபிப்பிராயப்படுகிறார்கள். இவ்விடம் உடையநங்கையாரின் பிதாவாகிய திருவாழ்மார்பன் என்பவரின் வீடிருந்த ஸ்தலத்தில் இப்பொழுது ஒரு பஜனை மடம் கட்டியிருக்கிறார்கள். இவ்வூரில் ஸ்மார்த்தப் பிராமணர்களைத் தவிர, ஸ்ரீ வைஷ்ணப் பிராமணர்களில்லை. சந்நதியில் நடராஜாவின் விக்கிரகமுமிருக்கிறது. இம்மலை நாட்டில் பூஜை செய்யும் அர்ச்சகர்கள் எல்லோரும் உடுப்பி தேசத்தைச் சேர்ந்த சிவில்லி பிராமணர்கள். இவர்களுக்கு சிவன் விஷ்ணு என்னும் வித்தியாசமில்லை. சந்நதிகளில் பிரசாதம் விற்கும் தொழிலுமில்லை. யாத்ரீகர்களிடமிருந்து பணம் பறிக்கும் துர்நடத்தைகளைக் கற்றுக்கொண்டவர்களல்லர். இம்மலை நாட்டிலுள்ள சந்நதிகளின் உற்சவ விக்கிரகங்களெல்லாம் வெகுவும் சிறியவைகளா யிருக்கின்றன. இத்தலத்தின் குளக்கரையிலுள்ள அரசமரத்தைக் கவனிக்கவும். இதற்கு ஓர் புராணக் கதையுண்டு.

மார்க்கமும் வசதியும் :—(S. I. R'y) சேர்மாதேவியிலிருந்து திருக்குறுங்குடி மார்க்கமாய் நாகர்கோவிலுக்குப்போகும் மோட்டாரிலோ, அல்லது, திருநெல்வேலி நாங்குநேரியிலிருந்து நாகர்கோயிலுக்குச் செல்லும் மோட்டாரிலோ ஏறி நாகர்கோயிலுக்கு வடக்கில் 2 மைல் தூரமிருக்கும் பொழுதே நாலுகால் மண்டபம் என்னுமிடத்திலிறங்கி சுமார் $\frac{3}{4}$ மைல் தூரம் மேற்குப் பிரியும் வழியில் சென்றால் இத்தலத்தை யடையலாம். ஆனால், அவ்விடமிருந்து நாகர்கோவில் போக வண்டிகள் கிடையாது. நாகர் கோயிலுக்குப் போனால் மாட்டுவண்டி, குதிரைவண்டிகள் கிடைக்கும். அவ்

விடமிருந்து இத்தலம் 2 மைல் தூரத்திலிருக்கிறது. இவ்விடம் சத்திரமுண்டு. சாப்பாட்டு சாமான் கடைகளுமுண்டு. ஆகார ஹோட்டல்கள் கிடையாது.

நாகர்கோயிலிலிருந்து இத்தலம் வழியாய் முன்னுக்குப்போக மோட்டார் பஸ் சர்வீஸ் இருக்கிறது. இதிலும் ஏறிச் செல்லலாம்.

---

## 84. திருவாட்டாறு 68.

மங்களாசாசனம்.

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி.

10-ம் பத்து, 6-ம் திருமொழி, 11 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—ஆதிகேசவப் பெருமாள், மரகதவல்லி நாய்ச்சியார், அஷ்டாங்க விமாநம், கடல்வாய் தீர்த்தம், ராமதீர்த்தம், மேற்கே திருமுகமண்டலம், புஜங்க சயநம், பரசுராமனுக்கும் சந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம்.

குறிப்பு:—இத்தலத்தின் அஷ்டாங்க விமாநமென்பது திருக்கோட்டியூர் (66) திருக்கூடல் தென்மதுரை (68) இத்தலங்களின் அஷ்டாங்க விமானங்களைப்போலல்ல. இச்சந்நதி அனந்த சயநத்தின் சந்நதியைப் போல் அமைந்துள்ளதாயினும் அதனிலும் வெகு சிறியது. இவ்வூருக்குக் கீழ்புரம் இரண்டு மலையருவிகள் சேறுகின்றன. ஜல சௌக்கியம் நன்றாயிருக்கிறது.

மார்க்கமும் வசதியும் :—நாகர்கோவிலி லிருந்து திருவநந்தபுரம் போகும் பஸ் வண்டியில் ஏறி 24மைல் தூரமுள்ள தொடுவெட்டி என்னும் ஊரிலிறங்கி அவ்விடமிருந்து வடக்கே 6-மைல் சென்றால் இத்தலத்தை

யடையலாம். தொடுவெட்டியிலிருந்து இத்தலத்திற்கு மோட்டார் பஸ் வண்டிகள் கிடைக்கும். நபர் 1-க்கு சார்ஜு ரூபா 2. மாட்டுவண்டிகளுமகப்படுகின்றன. மற்றும் திருவநந்தபுரத்திலிருந்து நாகர் கோவிலுக்குப் போகும் மோட்டார் வண்டியிலேறி மார்த்தாண்டத்தைத் தாண்டி தொடுவெட்டி யென்னும் ஊரி லிறங்கி முன்னுக்குப் போகவேண்டும். இவ்வூரில் சத்திரமுண்டு. சாப்பாட்டுக்கு சாமான்கள் விற்கும் கடைகளுண்டு. பிராமணாள் ஹோட்டல் ஒன் றிருக்கிறது. இவ்விடமே சாப்பாட்டிற்குச் சொல் லிவைத்தால் சமயல் செய்து போடுவார்கள். இவ் விடமிருந்து அடிக்கடி மோட்டார் பஸ்வண்டிகள் தொடுவெட்டிக்குப் போகின்றன. இது வெகுவும் அழகிய ஊர். இவ்வூரின் பெருமாள், அநந்த சயநம் அநந்தபத்மநாபனைவிட ஆகாரத்தில் பெரிய தென்று சொல்லுகிறார்கள். அடியேனுக்கு அம்மாதிரி தோன்றவில்லை.

———



திருவநந்தபுரம் அநந்தபத்மநாபர் சந்நதி
(Temple at Trivandrum)

## 85. திருவநந்தபுரம் 59.

(அநந்த சயநம்)

மங்களாசாசனம்

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி.

10-ம் பத்து 2-ம் திருமொழி 11 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—அநந்தபத்மநாபன், ஸ்ரீஹரிலக்ஷ்மி, ஹேமகூட விமாநம், மத்ஸ்ய தீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், புஜங்கசயநம், ருத்ரனுக்கும், சந்திரனுக்கும், இந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இத்தலத்தின் மூலவரைப் போன்ற பிம்பம் திருப்பாற்கடலொன்றொழிய மற்றெந்த திவ்ய தேசத்திலும் கிடையாதென்றே சொல்லலாகும். மூலவர் எத்தனை பெரியதோ அவ்வளவிற்கும் சிறியதாயிருக்கிறது தனிச்செம்பொன்னாலாகிய உற்சவ விக்கிரகம். மூலவருக்கு எப்பொழுதும் திருமஞ்சனம் கிடையாது. உற்சவரைப்போன்ற திருமஞ்சன விக்கிரகம் ஒன்றுளது. இதற்கே தினமும் வெளியில் ஒற்றைக்கால் மண்டபத்தில் திருமஞ்சனமாகிறது. மூலவரை சேவிக்க 3 தலைவாசல்களிருக்கின்றன. இடதுபுரம் தலைவாசலில் திருமுடியையும், மத்திய வாசலில் நாபி பிரமனையும், வலது புறத்திய வாசலில் திருவடியையும் சேவிக்க முடியும். சந்நதியின் உள்பிரகாரத்தில் எந்த இடத்திலிருந்தும் பெருமாளைச் சர்வாங்கமாய்ச் சேவிக்க முடியாது. சந்நதிக்குள் செல்ல வேண்டுமானால் கீழ் வேஷ்டியைவிட வேறெவ்விதமான துணியும் உடம்பின்மேல் இருக்கக்கூடாது. ஆனால், பெண்மக்களுக்கு இம்மாதிரியான சட்டம் கிடையாது. பிராமணரல்லாதார்க்கு போத்திமார் என்கிற பூசாரிகள் தீர்த்தம், திருத்துளாய், சந்தனம் கையில் கொடுக்க

மாட்டார்கள். திருத்துளாயையும் சந்தனத்தையும் பூமியில் எறிந்து விடுவார்கள். இவர்கள் அவற்றை எடுத்துக்கொள்ள வேண்டும். தீர்த்தம் வேண்டுமானல் வேறே சாமானிய பிராமணன் போத்தி கையிலிருந்து வாங்கி பிராமணரல்லாதார்களுக்குக் கொடுக்க வேண்டும். கற்பக்கிரகத்தின் பிரகாரத்திலிருந்து தென்புரம் வெளியே வரும் பொழுது யோக நரசிம்மர் சந்நதி ஒன்றிருக்கிறது. மற்றும் சந்நதிக்குப் பின்புரம் கிருஷ்ணன் சந்நதியுமிருக்கிறது. இவைகளிலிருக்கும் மூலஸ்தான பிம்பங்கள் வெகுவும் அழகாயும் ரமணீயகரமாயு மிருக்கின்றன.

திருவநந்தபுரமென்னும் ராஜ்யம் பூராவும் அநந்த பத்மநாபனுக்குச் சேர்ந்த தென்றும், ராஜாவாயிருக்கப் பட்டவர் இப்பெருமான் தரப்பில் ராஜியமேழுவதாகவும், சொல்லப்படுகிறது. ஆகையால் தான் எல்லா மஹாராஜாக்களும் அனந்தபத்மநாபா யென்றே கையெழுத்து செய்கிறுர்களே யன்றி தங்கள் சொந்த பெயரால் கையெழுத்து செய்வதில்லையாம். ராஜ்யத்தின் முத்திரையும் விஷ்ணுவின் சங்கமே(சங்கு).

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரெயில்வே (S. I. Rly) மீட்டர்கேஜ் மெயின் லைனிலுள்ள திருவனந்தபுரம் சென்ட்ரல் என்னும் ரெயில்வே ஸ்டேஷனிலிறங்கினல் சந்நதி ½ மைல் தூரத்திலுள்ளது. வண்டிகளுண்டு. இது பெரிய பட்டணம். சத்திரங்கள் மற்றும் ஆகார சாப்பாடு ஹோட்டல்களுண்டு ஊரைச் சுற்றிப் பார்க்குமிடங்களும் வெகுவுண்டு. இது திருவாங்கூர் ராஜ்யத்திற்குப் பிரதான பட்டணம். சந்நதியில் ஸ்ரீ வைஷ்ணவர்கள் கிடையாது. ஊட்டுப்புரை யென்று பிராமணுளுக்கு இலவசச் சாப்பாடு சந்நதியில் தினமும் நடகிறது.

## 86. திருச்செங்குன்றூர் (செங்கன்னூர் வடக்கு) 64.

மங்களாசாசனம்:

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி
8-ம் பத்து 4-ம் திருமொழி 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—இமையவரப்பன், செங்கமலவல்லி ஜாஜ்யோதிவிமாநம், திருச்சிற்றாறு, சங்க தீர்த்தம், மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், பத்மாஸுரன் நிமித்தமாக சிவனுக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இச்சந்நிதியை திருச்சிற்றாறு என்றால் தான் இப்பக்கத்து ஜனங்களுக்குத் தெரியும், இல்லாவிடில பெருமாள் அல்லது விஷ்ணு சந்நதியென்றால் தான் தெரியும். ஏனென்றால் இவ்வூரில் பிரபல சிவஸ்தல மிருக்கிறது. இது வெகுவும் ஏழைக் கோயில்; அதாவது கோயிலுக்கு சிலவுசகு வேண்டிய பண வரும்படி கிடையாது.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரெயில்வே மீட்டர்கேஜ் (S. I. Rly.) மெயின் லைனில் திருவநந்தபுரம் போகும் வழியிலுள்ள கொட்டாரக்காரா என்னும் ரெயில்வே ஸ்டேஷனிலிறங்கவேண்டும். அவ்விடம் விடியற்காலம் சுமார் 2 மணிக்குச் சேரும் ரெயில் வண்டியிலிறங்கினால் உடனே கோட்டயம் போகும் மெயில் மோட்டார் பஸ் வண்டி கிடைக்கும். அதிலேறினால் விடியற்காலம் சுமார் 5 மணிக்கு, 30 மைல் தூரமுள்ள இந்த ஸ்தலத்தில் மோட்டார் சேருகிறது. பஸ் ஸ்டேண்டிலிருந்து சந்நதி சுமார் 1 மைல் தூரத்தில் வடமேற்கிலிருக்கிறது. வண்டிகளுண்டு

சத்திரமுண்டு, சாப்பாடு ஹோட்டல்களிருக்கின்றன. இவ்வூரில் ஒரு முனிசிப் கோர்ட்டு மிருக்கிறது.

இவ்வூருக்கு 6 மைல் கிழக்கில் திருவாறன்விளை யென்னும் திவ்ய தேசமும், மேற்கே 4 மைலில் திருப் புலியூரும், வடமேற்கே 5 மைலில் திருவண்வண்டூ ரும், வடக்கே 10 மைலில் திருவல்லவாழும், அதற்கு 4 மைல் வடகிழக்கே திருக்கடித்தானமுமிருக்கின்றன. இவைகளை யெல்லாம் ஒரே நாளில் சேவிக்கலாம். சிறிய மோட்டார்பஸ் வண்டிகள் சுலப வாடகைக்குக் கிடைக்கும். மாட்டுவண்டிகளும் கிடைக்கின்றன. ஆனால், இவ்வூரில் பஸ் ஸடேண்டில் சில சோம்பேரி கள் சேர்ந்து கொண்டிருக்கிறார்கள். யாத்ரீகர்கள் வந்ததும் அவர்களுக்கு பஸ் வண்டிகள் அமர்த்திக் கொடுப்பதாகச் சொல்லி பிரயாணிகர்களை மோசம் செய்வார்கள். அவர்களைச் சேர்க்கக் கூடாது. மற் றும் நம்பவுங்கூடாது. அவர்கள் மூலியமாய் பஸ் வண்டிகளை ஏற்படுத்தவுங் கூடாது. விடிந்ததும் நேராக பஸ்வண்டிக்காரர்களைக் கண்டு பேசினால் இந்த 6 ஸ்தலங்களையும் ஒரே நாளில் தரிசிக்க ரூ. 5 க்கு மேர்படாமல் கொடுத்தால் கொண்டுபோய் தரி சனம் செய்து வைத்து கடைசியாக செங்கனூச்சேரி யென்னும் ஊரில் சேர்த்து விடுவார்கள். செங்கனூச் சேரியிலிருந்து திருக்கடித்தானம் யென்னும் திவ்ய தேசம் தென்கிழக்காய் 2 மைலிலிருக்கிறது. செங் கனூச்சேரியிலிருந்து செனல் மார்க்கமாய் ஓரிரவு பிர யாணத்தில் (கொச்சி) எரணாகுலம் சேரலாம்.

---

## 87. திருவாறன்விளை 71.

மங்களாசாசனம்.

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய் மொழி.

7-ம் பத்து 10-ம் திருமொழி 10 பாசுரங்கள்

ப்ரபாவம்:—திருக்குறளப்பன் - பத்மாஸந நாய்ச்சியார், வாமநவிமாநம் - வேதவ்யாஸ ஸரஸ்ஸு - கிழக்கே திருமுகமண்டலம் நின்ற திருக்கோலம் - பிரம்மாவுக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இச்சந்நதியின் இடதுபுரம் பம்பையென்னும் ஒரு பெரிய நதி ஓடுகிறது. இதன் பக்கல் ஒரு சிவன் கோயிலு மிருக்கிறது.

மார்க்கமும் வசதியும் :—திருச்செங்குன்றூரிலிருந்து (செங்கன்னூரிலிருந்து) இவ்வூர் கிழக்கே 6 மைலிலிருக்கிறது. தினமும் பஸ் வண்டிகள் இவ்வூருக்குப் போகின்றன. மாட்டு வண்டிகளும் கிடைக்கும். ஆகார கடைகளிருக்கின்றன. சத்திரமுண்டு, சாப்பாடு சௌகரியங்கள் செய்துகொள்ளலாம்.

---

# 88. திருப்புலியூர் 63.
## (குட்டநாடு)

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த சிறிய திருமடல்
71-ம் பாசுரம்.

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி
8-ம் பத்து, 9-ம் திருமொழி, 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—மாயப்பிரான் - பொற்கொடிநாய்ச்சியார் - புருஷோத்தம விமானம் - பூஞ்சுனை தீர்த்தம் — கிழக்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம் - ஸப்தரிஷிகட்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு):—இது வெகுவும் சிறிய சந்நதியானாலும் சரியானபடி ரிபேரில்லாமல் சிதலமாயிருக்கிறது.

மார்க்கமும் வசதியும்:—திருச்சங்குன்றூரிலிருந்து (செங்கன்னூரிலிருந்து) மேற்கே 4 மைலிலுள்ள சந்நதி. இச்சந்நதி போக மோட்டார் பஸ் வண்டி ஸ்பெஷலாக ஏற்படுத்திக்கொள்ளவேண்டும். மாட்டு வண்டிகள் சுலப வாடகைக்குக் கிடைக்கின்றன. இவ்விடம் எந்த அனுகூலங்களுமில்லை. தரிசனம் செய்து கொண்டு செங்கன்னூருக்கே திரும்பிவிடுவது நலம்.

---

## 89. திருவண்வண்டூர் 67.

மங்களாசாசனம்

நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய் மொழி.

6-ம் பத்து, 1-ம் திருமொழி, 11 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—பாம்பணையப்பன் கமலவல்லி நாய்ச்சியார் - வேதாலயவிமாநம் - பாபநாச தீர்த்தம் - மேற்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம் - மார்க்கண்டேயருக்கும் நாரதருக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு):—இச்சந்நதியில் நாய்ச்சியார் விக்கிரஹமாவது அதற்குச் சந்நதியாவது கிடையாது. வெகுவும் ஏழை சந்நதி.

மார்க்கமும் வசதியும்:—திருச்செங்குன்றூரிலிருந்து (செங்கனூரிலிருந்து) கோட்டயம் போகும் பஸ் வண்டியிலேறி வடக்கே 2 மைல் சென்றால் மழுக்கீர் என்னும் ஓர் கிராமம் பாதையில் கிடைக்கும். அவ்விடம் சில வீடுகளிருக்கின்றன. வண்டியைவிட்டு இறங்கினதும் இடதுகைப் பக்கத்தில் மேற்கே பிரியும் வழியாய் $1\frac{1}{2}$ மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம். வழியில் பெரிய பள்ளமிருப்பதால் மாட்டுவண்டிகள் போகமாட்டா. ஆகையால் நடந்தே செல்லவேண்டும். சிறிய கிராமம். சௌகரியங்கள் ஒன்றும் கண்டிப்பாய் கிடையாது. தரிசினம் செய்து திரும்பி விடுவதே நலம்.

---

## 90. திருவல்லவாழ் 66.
## (திருவெல்லா--Trivella)

மங்களாசாசனம்:

திருமங்கையாழ்வா ரருளிச் செய்த பெரிய திருமொழி
9-ம் பத்து 7-ம் திருமொழி 11 பாசுரங்கள்.
பெரிய திருமடல் 118-ம் பாசுரம்.

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி
5 ம் பத்து 9-ம் திருமொழி 11 பாசுரங்கள்

ப்ரபாவம்:—கோலப்பிரான், செல்வத்திருக்கொழுந்துநாய்ச்சியார், சதுரங்ககோலவிமாநம், கண்டாகர்ண தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், கண்டாகர்ணனுக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு):—இந்த சந்நதிக்குள் தரிசினத்திற்காக பெண்மக்களை உள்ளே விடுகிறதில்லை. பெண்கள் சந்நதியின் வெளியில் நின்றே பகவத் ஸ்மரணைசெய்ய வேண்டும். இச்சந்நதியின் துவஜஸ்தம்பம் வெகுவும் அழகாய் கட்டப்பட்டிருக்கிறது. (படத்தில் பார்க்கவும்.) மூலஸ்தானத்தின் பின்புறத்தில் சுதர்சன பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தாலும் விபூதியைப் பிரசாதமாகக் கொடுக்கிறார்கள்.

மார்க்கமும் வசதியும்:—திருவண்வண்டூர் சேவித்த பின்பு மழுக்கீர் என்னும் பாதையின்பேரிலுள்ள சந்திக்கு வந்தால் கோட்டயம் போகும் மோட்டார் பஸ் வண்டிகள் கிடைக்கும். அவற்றில் ஏறி வடக்கே 3 மைல் சென்றால் திருவெல்லா வென்னும் ஊர் வருகிறது. பஸ் ஸ்டேண்டிலிறங்கி மேற்கே 1 மைல் ஊருக்குள்ளேயே சென்றால் சந்நதி யிருக்கி



திருவல்லவாழ் சந்நதியின் த்வஜஸ்தம்பம்
(Trivella-Temple Dwajasthamba)

றது. வண்டிகள் கிடைக்கும். சந்நதி பெரியது. சத்திரமுண்டு. சந்நதி போகும் வழியில் அம்பலப் பிழையின் பட்டர்பிராமணர் சாப்பாட்டு ஹோட்ட லொன்றிருக்கிறது. இவ்வூரில் சிறியன் கிறிஸ்து வர்கள் அதிகம். தாலூக்கா பட்டணம். பெரிய கடை களுமிருக்கின்றன.

---

## 91. திருக்கடித்தானம் 70.

மங்களாசாசன்ம்

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி.

8-ம் பத்து 6-ம் திருமொழி 11 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—அற்புத நாராயணன், கற்பகவல்லித் தாயார், புண்ய கோடி விமாநம், பூமி தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், ருக்மாங்கத ராஜனுக்கு ப்ரத்யக்ஷம்.

கற்பக்ரஹத்தின் பின்பு நரசிம்மர் பிரதிஷ்டை செய்திருப்பதைக் கவனிக்கவும்.

மார்க்கமும் வசதியும்:—திருவெல்லாவிலிருந்து கோட்டயம் போகும் மோட்டாரில் வடக்கே 5 மைல் சென்றால் செங்கணூச்சேரி என்னும் ஊரிலிறங்கி தென் கிழக்கே 2 மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம். செங்கணூச்சேரியிலிருந்து ரிக்ஷா வண்டிகளும், கட்டை வண்டிகளும் கிடைக்கும். இது வெகு சிறிய கிராமம். சௌகரியங்கள் கிடையா. தரிசனம் செய்துகொண்டு செங்கணூச்சேரி சேருவதே நலம். செங்கணூச்சேரியில் சாப்பாடு ஹோட்டல்களும் சத்திரமுமுண்டு. பெரிய வியாபாரஸ்தலம், பெரிய கடைகளுமுண்டு.

## 92. திருக்காட்கரை 61.

மங்களாசாஸனம்.

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி.

9-ம் பத்து 6-ம் திருமொழி 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—காட்கரை அப்பன், பெருஞ்செல்வ நாயகி, புஷ்கலவிமானம், கபில தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், கபில முனிக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரைல்வே (S.I.Rly.) பிராட்கேஜ் ஷொரனூர்-எரணாகுளம் கிளை லைனிலுள்ள இடப்பள்ளி யென்னும் ஸ்டேஷனி லிறங்கி கிழக்கே கர்சாலை மார்க்கமாய் 3 மைல் சென்றால் இத் தலத்தை யடையலாம். சத்திரமில்லை, வண்டிகளு மில்லை. எரணாகுளம் ஸ்டேஷனிலிறங்கினால் கட்டை வண்டிகள் கிடைக்கும். ஆனால், வடகிழக்கே 7 மைல் செல்ல வேண்டும்.

மற்றும் செங்கணூச்சேரியிலிருந்து கெனல் மார்க்க மாய் இராத்திரி 9 மணிக்குப் புறப்படும் ஸ்டீம் லாஞ்சு மூலியமாய் புறப்பட்டால் விடியர்காலம் எரணாகுளம் சேர்ந்து இத்தலத்தை யடையலாம். இந்த சந்நதி ஒரு காட்டின் மத்தியிலிருக்கிறது. சந்நதியின் வடக் கில் ஒரு பள்ளத்தாக்கில நெல்வயல்களும் தென்னந் தோப்புகளு மிருக்கின்றன. மற்ற 3 திக்குகளிலும் சிறிய மண்மலை மேடுகளிருக்கின்றன. சுற்றிலும் வீடு கள் கிடையாது. சுமார் 100 கெஜம் தூரத்தில் சந் நதிக்கு வடவண்டை ஒரு தோப்பில் சந்நதியின் அர்ச் சகரும் சுயம்பாகியும் சிறிய குடிசைகள் போட்டுக் கொண்டு வசிக்கிறார்கள். இவ்விடம் சாப்பாட்டு சௌகர்யங்களாகிலும் தங்க வசதிகளாகிலும் கிடை யாது. சந்நதியில தரிசனம் செய்து கொண்டு எரணா குளம் திரும்புவதே நலம்.



திருக்காட்கரை சந்நதி (Thirukkatkara Temple)



திருமுழிக்களம் (Thirumuzikkalam Temple)

## 93. திருமூழிக்களம் 62.

மங்களாசாசனம்.

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி.
9-ம் பத்து 7-ம் திருமொழி 11 பாசுரங்கள்.

திருமங்கையாழ்வா ரருளிச்செய்த பெரிய திருமொழி.
7-ம் பத்து 1-ம் திருமொழி 6-ம் பாசுரம்.
திருநெடுந்தாண்டகம் 10-ம் பாசுரம்
பெரிய திருமடல் 129-ம் பாசுரம்'

ப்ரபாவம்:—திருமூழிக்களத்தான், மதுரவேணி நாய்ச்சியார், சௌந்தர்ய விமாநம், பெருங்குள தீர்த் தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், ஹரீத முனிக்கு ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இத்தலத்தில் நாய்ச்சியார் சந்நதி கிடையாது. பகவதி யென்னும் அம்மன் சந்நதி யுண்டு. சந்நதிக்கு மேலண்டை அடுத்தாப்போல் ஆல் வாய்நதியென்கிற ஒரு பெரிய நதி ஓடுகிறது. மற்ற சந்நதிகளிலிருக்குமாப் போல் பூஜை சமயத்தில் இங்கு வாத்தியமில்லை ஏனென்றால் வாத்தியக்காரர்கள் சந்நதிக்குக் கிடையாது. சந்நதியின் மூலஸ்தானத் திற்கு சரியானபடி விளக்கேற்ற எண்ணெயும் சப்ளை கிடையாதாம்.

மார்க்கமும் வசதியும்:—இது (S. I. Rly ) ஷோர னூர்-எரணகுளம் கிளை லைனிலுள்ள காலடிரோட் என்னும் ரெயில்வே ஸ்டேஷனிலிறங்கி மேற்கே 7 மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம். கால் வழியாய் நெல்வயல் மார்க்கமாய் 4½ மைலிலிருக் கிறது. இவ்வூரில் சிறியன் கிருஸ்துவர்கள் அதிகம். ஒரு சாவடியைப் புதிதாய் சத்திரமாகச் செய்திருக் கிறார்கள். கடைகளுண்டு. ஆகார ஹோட்டல்கள் கிடையாது. வண்டிப்பாதையும் சரியானதல்ல, மண் பாதை.

## 94. வித்துவக்கோடு 69.

மங்களாசாசனம்.

குலசேகராழ்வாரருளிச் செய்த பெருமாள் திருமொழி.

முதலாயிரம் 5-ம் திருமொழி, 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—உய்யவந்தபெருமாள், வித்துவக் கோட்டு வல்லி, தத்துவ காஞ்சந விமாநம், சக்ர தீர்த்தம், தெற்கே திருமுக மண்டலம், புஜங்கசயநம், அம்பரீஷற்கு ப்ரத்யக்ஷம்

(குறிப்பு):—இச்சந்நதி பாரதப்புழை யென்னும் ஆற்றின் கரைமேலிருக்கிறது. சந்நதியில் நுழைந்ததும் சிவன் கோயில் எதிரில் காணும். இதற்குப் பின்புறத்தில் விஷ்ணு சந்நதி யிருக்கிறது. இக் கட்டிடங்களை நோக்கின் முதலில் விஷ்ணுவின் சந்நதி கட்டி அதற்குமுன் விசாலமாகிய தலைவாசலில், கிழக்குப் பார்த்தாப்போல், பின்னிட்ட காலத்தில் இச்சிவாலயங் கட்டி லிங்க பிரதிஷ்டை செய்திருக்கிறுப்போல் காண்கிறது. இந்த விஷ்ணு நின்ற திருக்கோலமே யொழிய ப்ரபாவத்தில் கண்டமாதிரி புஜங்கசயநரல்லர்.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரெயில்வே பிராட்கேஜ் (S.I.Rly.) மெயின் லைனிலுள்ள ஷோரனூர் பக்கத்திலிருக்கும் பட்டாம்பி என்னும் ஸ்டேஷனிலிறங்கி தெற்கே 1 மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம். வெய்யல் காலத்தில் ஆற்றில் ஜலமில்லாவிடில் வண்டிகளில் போகலாம். பிரவாஹ காலங்களில் நதியைப் பரிசலினால் கடந்துதான் செல்லவேண்டும். பட்டாம்பியில் சத்திரம், சாப்பாடு ஹோட்டல்களும், பெரிய கடைகளுமுண்டு. சந்நதியில் தரிசினம் செய்துவிட்டு பட்டாம்பிக்குத் திரும்புவதே நலம்.

## 95. திருநாவாய் 65.

மங்களாசாசனம்:

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
6-ம் பத்து, 8-ம் திருமொழி, 3-ம் பாசுரம்.
10-ம் ,, 1-ம் ,, 9-ம் ,,

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி
9-ம் பத்து, 8-ம் திருமொழி, 11 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—நாராயணன், மலர்மங்கைநாய்ச்சியார், வேதவிமாநம், செங்கமலஸரஸ்ஸு, தெற்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், லக்ஷ்மிக்கும் கஜேந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம்.

(குறிப்பு) இத்தலத்தின் பெருமாளை நாவாய்முகுந்தனென்கிறார்கள். இவர் கிழக்கே திருமுகமண்டலமாயிருக்கிறார். பெருமாள் நின்ற திருக்கோலமாயிருக்கிறார். ப்ரபாவத்தில் கண்டிருக்கும் திருமுகமண்டலமும் திருக்கோலமுமல்ல. நாய்ச்சியாரை சிறுதேவி நாய்ச்சியார் என்கிறார்கள். நாய்ச்சியாரின் கற்சிலையின் கண்கள் திறக்கவில்லை. இதைப் பற்றி ஓர்விசேஷம் சொல்லுகிறார்கள். நாய்ச்சியாரின் பிம்பம்செய்த சிற்ப்பி ஒருநாள் காலையில் பணி ஆயுதம் கொண்டுவரும்படி தன் பெண்சாதியாகிய சிறுதேவி யென்பவளைப் பெயர் வைத்துக் கூப்பிடும்பொழுது மூலையிலிருந்த கண் திறாத நாய்ச்சியாரின் பிம்பம் ஏன் என உடனே சிற்ப்பி இதன் வேலையை நிறுத்தி விட்டான். அந்த பிம்பத்தை அப்படியே ஸ்தாபனம் செய்து விட்டபடியால் அதன் கண்களை திறக்கவில்லை யென்கிறார்கள். இச்சந்நதி பாரதப்புழை ஆற்றங்கரை

மேலிருக்கிறது. சந்நிதியின் மதில் கட்டிடம் ஒரு காலத்தில் வெகு பெரியதாயிருந்ததாகக் காண்கிறது. மதிலின் தலைவாசல் வெகுவும் பெரியதாயிருக்கிறது. இதற்குக் கதவுகளில்லை.

மார்க்கமும் வசதியும்:—தென் இந்தியா ரெயில்வே (S. I. Ry.) பிராட்கேஜ் மெயின் லைனில் திருருக்கு இப்பாலுள்ள எடக்குளம் ரெயில்வே ஸ்டேஷனி லிறங்கினால் தெற்கே 1 மைலில் ஆற்றங்கரைமேலிருக் கிறது. சத்திரமில்லை. சாப்பாடு ஹோட்டல்களுண்டு. ராத்திரியில் தங்க ஊரில் இடம் கிடைக்கும். பெரிய கடைகளுமுண்டு. சிறிய கிராமம். இவ்விடமிருந்து திரூர் சுமார் 4 மைல் தூரத்திலிருக்கிறது.

முக்கிய குறிப்பு:—குலசேகராழ்வார் அவதார ஸ்தலம் கொல்லி நகரென்னும் கொல்லம். (Quilon.)

மேல்கண்ட ஆழ்வார் திருநாட்டிற் கெழுந்தரு ளிய ஸ்தலம் திருவரங்கமென்னும் ஸ்ரீரங்கம்.

மலைநாட்டுத் திருப்பதிகள் 13-ம் முற்றுப் பெற்றன.

---

# விஷய ஸூசிகை.

பக்கம்.

இதுவுமது.

பக்கம்.

# ERRATA.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 18 | 10 | காளிங்கமார்த்தனமடு | காளிங்கமர்த்தனமடு |
| 77 | | முக்தீநாராயணன் | சாளக்கிராமம் |
| ,, | | 180 மைல் | 60 மைல் |
| 78 | 6 | சீதளரூபி | சாளக்கிராமரூபி |
| 104 | 9 | Glaziers | Icebergs |

# வடநாட்டுத் திருப்பதிகள் 12.

---

## முகவுரை.

பன்னிரு ஆழ்வார்கள் மங்களாசாசனம்
செய்தருளிய நூற்றெட்டு திருப்பதிகளின்
விவரங்களடங்கிய பாசுரம்.

"ஈரிருபதாஞ் சோழ மீரொன்பதாம் பாண்டி
ஓர்பதின் மூன்றுமலை நாடோ ரிரண்டாம்-சீர்நடுநா
டாறோடீரெட்டு தொண்டையவ் வடநாடாறிரண்டு
கூறு திருநா டொன்றாக்கொள்."

வடநாடாறிரண்டு=6 × 2=12

இந்த 12 திவ்யதேசங்களிருக்குமிடங்களின் விவரம்:-

1 மதராஸ் மாஹாணம்-சித்தூர் ஜில்லாவிலுள்ளது-1
96-வது

2. ,, கர்நூல் ஜில்லாவில்-1
97-வது.

3. ஐக்கியமாஹாணம் (U. P.) மதுரா டிஸ்ட்ரிக்டில்-2
98, 99-வது.

4. ,, கார்வால் டிஸ்ட்ரிக்டில்-3
100 முதல் 102-வரை.

5. ,, சீத்தாபூர் (Sitapur) டிஸ்ட்ரிக்டில்-1
103-வது.

6. ,, பைஸாபாத் டிஸ்ட்ரிக்டில்-1
104-வது.

7. நேப்பால் தேசத்தில்-1; 105-வது.

8. கத்தியவார் பிரதேசத்திலுள்ள பரோடா
சமஸ்தானத்தில்-1; 106-வது.

9. நார்த் போல் (Polar Regions) என்னும் ரஷ்யா போலண்டு தேசங்களுக்கு வடவெல்லையுள்ள சமுத்திரம்-1
107-வது.

இந்த 12 திவ்ய தேசங்களையும் சேவிக்க வெகு பிரயாசையாகும். நாட்களும் மாதக்கணக்காய்ச் செல்லும். 107வது திவ்யதேசம் சேவிக்க முடியாதது. 105வது திவ்ய தேசத்திற்கும் போவது வெகு கடினம். கடாங்தே சாதுக்களுடன் செல்லவேண்டும். போஜன சாமக்கிரியைகள் கையில் சுமந்துகொண்டே போகவேண்டும். டோலிகள் கிடையாது. ஆனால் நூற்றுக்கணக்காய் ரூபாய் செலவு செய்யும் சக்தியுள்ளவர்கள் நேப்பால் தேசத்தின் முக்கிய பட்டணமாகிய காட்மண்டு என்னும் பட்டணத்திலிருந்து டோலியும், கூலியாட்களையும் ஏற்பாடு செய்துகொண்டு பனிக்கட்டிகள் கவர்ந்த மலையின்மீது சுமார் 80 மைல் தூரம் சென்றால், கண்டகிநதியின்மீதிலுள்ள சாளக்கிராம மென்னும் இத்திவ்யதேசத்தைச் சேவிக்கலாம். ஏனைய 10 திவ்ய தேசங்களுக்கும் சவாரி வசதியுண்டு. அதிகமான விவரங்கள் அடியேன் தனிமையாய் பிரசுரம் செய்திருக்கும் "108 திவ்யதேச யாத்ரா பிரபாவ சந்திரோதயம்" என்னும் கிரந்தத்தின் முகவுரையில் பார்க்கவும். யாத்ரீகர்களின் அனுகூலத்தின்பொருட்டு மேல் சொன்ன கிரந்தத்தை தனித்தனி பாகங்களாய்ப்பிரித்து சுலப விலைக்கு வெளியிடப்பட்டிருக்கிறது.

"பத்ரி வில்லா"
பெங்களூர் சிடி,
27—3—35

ஜி. கெ. (105) பலிஜ,
வக்கீல்.

# வடநாட்டுத் திருப்பதிகள் 12.

---

ஒவ்வொரு ஸ்தலத்தின் கடைசியில் கண்டிருக்கும் நெம்பர் இந்த ஸ்தலம் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தின் 108 திவ்யதேச திருப்பதிகளின் அட்டவணையில் எத்தனையாவது என்று குறிப்பிடுகிறது.

96. திருவேங்கிடம். 96

(திருப்பதி, திருமலை, மாமலை, வடமலை, சேஷாத்ரி, வெங்கிடாத்ரி யென்னும் பெயருண்டு.)

மங்களாசாசனம்.

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி

| | | | |
|---|---|---|---|
| 1ம் பத்து | 5ம் திருமொழி | 3ம் பாசுரம் | |
| ,, | 9 ,, | 8 | ,, |
| 2 ,, | 6 ,, | 9 | ,, |
| ,, | 7 ,, | 3 | ,, |
| ,, | 9 ,, | 6 | ,, |
| 3 ,, | 3 ,, | 4 | ,, |
| 5 ,, | 4 ,, | 1 | ,, |

ஆண்டாளருளிச்செய்த நாய்ச்சியார் திருமொழி.

முதலாயிரம்.

| | | |
|---|---|---|
| 1ம் திருமொழி | 1, 3ம் | பாசுரங்கள் |
| 4 ,, | 2ம் | ,, |
| 5 ,, | 2ம் | ,, |
| 8 ,, | 10 | ,, |
| 10 ,, | 5, 8ம் | ,, |

குலசேகராழ்வாரருளிச் செய்த பெருமாள் திருமொழி
முதலாயிரம் 4ம் திருமொழி 10 பாசுரங்கள்.

திருப்பாணாழ்வாரருளிச் செய்த அமலனாதிபிரான்
1, 3 பாசுரங்கள்.

திருமழிசையாழ்வாரருளிச் செய்த திருச்சந்த விருத்தம்
60, 81 பாசுரங்கள்.

நான்முகன் திருவந்தாதி.

34, 39, 40, 42 to 48, 90ம் பாசுரங்கள்.

பொய்கையாழ்வாரருளிச் செய்த முதற்றிருவந்தாதி
26, 37, to 40, 68, 76, 77, 82 99ம் பாசுரங்கள்.

பூதத்தாழ்வாரருளிச் செய்த இரண்டாந் திருவந்தாதி
25, 28, 33 45, 46, 53, 54, 72, 75ம் பாசுரங்கள்.

பேயாழ்வாரருளிச் செய்த மூன்றாந் திருவந்தாதி 14, 26,
30, 32, 39, 40, 45, 58, 61, 63, 68 to 73,
75, 89ம் பாசுரங்கள்,

நம்மாழ்வாரருளிச் செய்த திருவிருத்தம் 8, 10, 15, 31,
50, 60, 67, 81ம் பாசுரங்கள்.

திருவாய்மொழி

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | பத்து | 8ம் | திருமொழி | 3ம் பாசுரம். |
| 2 | ,, | 6 | ,, | 9, 10ம் ,, |
| | ,, | 7 | ,, | 11ம் ,, |
| 3 | ,, | 3 | ,, | 11 பாசுரங்கள். |
| | ,, | 5 | ,, | 8ம் பாசுரம். |
| | ,, | 9 | ,, | 1ம் ,, |
| 4 | ,, | 5 | ,, | 11ம் ,, |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 6 | ,, | 6 | ,, | 11ம் | ,, |
| 6 | ,, | 9 | ,, | 5ம் | ,, |
| 6 | ,, | 10 | ,, | 11 | பாசுரங்கள். |
| 8 | ,, | 2 | ,, | 1ம் | பாசுரம். |
| 9 | ,, | 3 | ,, | 8ம் | ,, |
| 10 | ,, | 5 | ,, | 6ம் | ,, |
| | ,, | 7 | ,, | 8ம் | ,, |

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1ம் | பத்து | 8ம் | திருமொழி | 10 | பாசுரங்கள். |
| | ,, | 9ம் | ,, | 10 | ,, |
| | ,, | 10 | ,, | 10 | ,, |
| 2 | ,, | 1 | ,, | 10 | ,, |
| 4 | ,, | 3 | ,, | 8ம் | பாசுரம் |
| | ,, | 7 | ,, | 5ம் | ,, |
| 5 | ,, | 3 | ,, | 4ம் | ,, |
| | ,, | 5 | ,, | 1ம் | ,, |
| | ,, | 6 | ,, | 7ம் | ,, |
| 6 | ,, | 8 | ,, | 1ம் | ,, |
| 7 | ,, | 3 | ,, | 5ம் | ,, |
| | ,, | 10 | ,, | 3ம் | ,, |
| 8 | ,, | 2 | ,, | 3ம் | ,, |
| 9 | ,, | 7 | ,, | 4ம் | ,, |
| | ,, | 9 | ,, | 9ம் | ,, |
| 10 | ,, | 1 | ,, | 2ம் | ,, |
| | ,, | 10 | ,, | 5ம் | ,, |
| 11 | ,, | 3 | ,, | 7ம் | ,, |
| | ,, | 5 | ,, | 10ம் | ,, |

திருக்குருந்தாண்டகம் 7ம் பாசுரம்.
திருநெடுந்தாண்டகம் 8, 9, 16ம் பாசுரங்கள்.
சிறிய திருமடல் 69ம் பாசுரம்.
பெரிய திருமடல் 2, 6, 105, 124ம் பாசுரங்கள்.

ப்ரபாவம்:—திருவேங்கிடத்தான், அலர்மேல்மங்கைத் தாயார், ஆனந்தநிலய விமானம், சேஷாசலம்—ஸ்வாமி புஷ்கரிணி—கோனேரி தீர்த்தம்—கிழக்கே திருமுக மண்டலம்—நின்ற திருக்கோலம்—தொண்டைமான் சக்ரவர்த்திக்கும் ஆறுமுகனுக்கும் ப்ரத்யக்ஷம்.

குறிப்பு:—இத்தலத்தை ஆழ்வார்கள் திருவேங்கிட மென்றும், மாமலையென்றும், வடமலையென்றும், திருமலை யென்றும், நெடுவரையினுச்சிமேலா யென்றும், பனிவரை யினுச்சியா யென்றும் மங்களாசாசனம் செய்துள்ளார்.

இத்தலத்தின் பெருமாளை ஸ்ரீனிவாசனென்றும், வெங்கடாசலபதியென்றும் தென்னாட்டார் அழைப்பார்கள் வடநாட்டார் பாலாஜி யென்று பெயர்வழங்குவர். மலையின் மேல் சந்நிதிக்கு வடவண்டை சுமார் 2மைல்தூரத்தில் ஆகாசகங்கை, பாபவிநாச தீர்த்தமென்னும் இரண்டு நீர்வீழ்ச்சி களுள, குமாரதாரை யென்னும் ஓர் தீர்த்தாரையுமுண்டு. இந்த ஸ்தலத்தின் கீழ்த்திருப்பதி அல்லது கோவிந்தராஜா பட்டணத்தில் அனேக சத்திரங்களும், ஹோட்டல்களும், பெரியகடைகள் மார்கட்டுகளுமுண்டு. கோவிந்தராஜாவின் சந்நதியுமிருக்கிறது. மலைமேலுள்ள திருப்பதிக்கு திருமலை யென்று பெயர். அவ்விடம் சத்திரங்களும், ஹோட்டல் களும், தபாலாபீசுமிருக்கிறது. மலையடிவாரத்திலிருந்து திருமலையான மேல்திருப்பதி சுமார் 5 மைல் தூரத்திலிருக்

கிறது. சுலபமாய் ஏறிச்செல்ல படிக்கட்டுகளுண்டு. ஆனால் கீழிருந்து காளியின்கோபுரவாயல்வரையிலும்படிக்கட்டுகள் ஏறுவது கொஞ்சம் கஷ்டமாயிருக்கும். பின்னிட்டு பாதை சுலபம். காலில் மிதியடி எப்பொழுதும் உபயோகிப்பவர்கள்மேலே ஏறும்போது,மிதியடியில்லாமல் வெறுங்காலாய் நடந்தால் கஷ்டப்படுவார்கள். மிதியடிபோட்டுக்கொண்டு சென்றால் இரண்டுமணி நேரத்திற்குள் மலையின் உச்சி சேரலாம். ரப்பர்சோல் கேன்வாசுள்ள ஜப்பான் (Canvas shoe with rubber sole) மிதியடி போட்டுக்கொண்டால் சௌக்கியம். மிதியடியில்லாமல் பிரயாசையுடன் 3 மணி நேரத்தில் சேரலாம். ஸ்திரீகளுக்கும், சிறுவாலிபர்களுக்கும் மேலே ஏற 5 மணி நேரம் செல்லும். மேலே ஏற டோலிகள் கிடைக்கும். வழியில் கடைகளும், மண்டபங்களும், தண்ணீர்ப்பந்தல்களும், காப்பி, சோடாக் கடைகளுமிருக்கின்றன. இத்தலம் பூர்வத்தில் சுப்ரமணிய ஸ்தலமென்றும்,பின்னிட்டு 12ம் நூற்றாண்டில், அதாவது ஸ்ரீ பாஷ்யகாரரென்ற உடையவர் இதை விஷ்ணு ஸ்தலமாய் மாற்றி பஞ்சராத்ர கிரந்தத்தின் பிரகாரம் பூஜைக் கிரமங்களை ஏற்படுத்தினரெனச் சொல்லப்படுகிறது.

இத்தலத்தில் வெகுவாய் பிராமணரல்லாத மற்றஜாதியார்கள் ஆண், பெண், குழந்தைகள் தலைமுடிகொடுப்பதும், உண்டியல் கொண்டுவந்து சேர்க்கிறதும், பெண்டுகள் தங்கள்பேரிலுள்ள நகைகளையெல்லாம் கழற்றி உண்டியில் போடுகிறதுமான வழக்கமுண்டு. சுமார் 4, 5 வருஷங்கள் வரையிலும் இந்த சந்நிதிக்கு, பிரார்த்தனைக்காரர்கள் செலுத்தும் திரவியமெல்லாம் ஸ்ரீ மகந்து என்னும் மடாதிபதியின் சொந்த திரவியமாய் பாவிக்கப்பட்டு சுயார்ச்சை

யாய் அப்பணத்தைச் செலவு செய்துகொண்டிருந்தார். மதராஸ் ஹிந்து ரெலிஜஸ் எண்டௌமெண்ட் ஆக்ட் (Madras Hindu Religious Endowment Act) என்னும் சட்டம் ஜாரிக்கு வரும்போது, அந்தச் சட்டம் இக்கோவிலுக்கு அன்னவயப்படுத்தக்கூடாது என்று ஷெ மகந்து மறுதளித்தார். இப்போது சுமார் இரண்டுவருஷத்திற்குள் திருமலை தேவஸ்தானம் பில் (Thirumalai Devasthanam Bill) என்று ஒரு சட்டத்தை மதராஸ் கவர்ன்மெண்டார் ஜாரிக்குக் கொண்டுவந்து அதன் பிரகாரம் சில உத்தியோகஸ்தர்களை ஏற்படுத்தி, சந்நதியின் ஆதாய வரும்படியை பொதுஜன சமூகத்திற்கு உபயோகப்படும்படி செலவு செய்ய முயன்றிருக்கிறார்கள். இச்சந்நதிக்கு ஏராளமான வரும்படியுண்டு. சித்தூர் ஜில்லாவிலுள்ள 4 தாலூக்காக்கள் இச்சந்நதிக்குச் சேர்ந்தவை.

மார்க்கமும் வசதியும்:-இது (M & S.M.) மதராஸ் தென்னிந்திய ரெயில்வேயின் கிளை லேனிலுள்ள ஓர் ஸ்டேஷன். ஷெ ரெயில்வேயின் மெயின் லேனிலுள்ள காட்டுப்பாடி ஜங்ஷனிலிருந்து சித்தூர்-பாகாலா மார்க்கமாய் திருப்பதி ஈஸ்டு என்னும் ஸ்டேஷனிலிறங்கவேண்டும். திருப்பதி வெஸ்டு என்னும் ஸ்டேஷனும் உண்டு. அவ்விடமிறங்கினால், சௌகரியங்கள் கஷ்டம். மலையடிவாரம் மற்றும் சத்திரங்களுக்கு தூரமாய்ப் போகவேண்டும். அரக்கோணத்திலிருந்து பம்பாய் போகும் மார்க்கத்தில் அரக்கோணத்திற்கு சமீபமாயுள்ள ரேனுகுண்டா என்னும் ஸ்டேஷனிலிறங்கி கூடூர்-காட்டுப்பாடி மீட்டர் கேஜ் லேனில் காட்டுப்பாடி மார்க்கம் போகும் வண்டியிலேறினால், திருப்பதி ஈஸ்டு ஸ்டேஷன் சுமார் 6 மைல் தூரத்திலிருக்கிறது. திருப்பதி

சித்தூர் ஜில்லாவில் சேர்ந்த ஒரு பெரிய முனிசிபல் பட்டணம். தண்ணீர் குழாய்களும், மின்சார விளக்குகளும் உண்டு. யாத்ரீகருடைய அனுகூலத்திற்காக அனேக சத்திரங்களுண்டு. ஈஸ்டு ரெயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில் புதிதாய்க் கட்டியிருக்கும் தேவஸ்தான சத்திரம் வெகு அனுகூலம். திருமலைக்கு ஏறிச்செல்லும் படிக் கட்டுவழி பூர்த்தியும், மின்சார விளக்குகள் போடப்பட்டு இரவிலுங்கூட திருடர் பயமின்றி எப்பொழுதும் யாத்ரீகர்கள் செல்லுகிறார்கள். இரவு பகல் என்ற வித்தியாசங் கிடையாது. தேவஸ்தான கமிட்டியார் அடிவாரத்திலிருந்து மலைமேல்போக, ஒரு சிறு ரெயில்பாதை போடுவதாக உத்தேசித்திருக்கிறார்கள். டோலி ஆட்கள் யாத்ரீகர்களுக்கு வெகு இம்சைகொடுப்பதால் ரெயில் போடுவதே உத்தமம்.

## 97. சிங்கவேழ்குன்றம் (அகோபிலம்) 97

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
1ம் பத்து 7ம் திருமொழி 10 பாசுரங்கள்.

ப்ரபாவம் :—நரசிம்ஹன், லட்சுமிநாய்ச்சியார்-குருகை விமானம்-இந்திர தீர்த்தம், நரசிங்க தீர்த்தம்-பாபநாச தீர்த்தம்-கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம். இரணியனை ஸம்ஹரித்து ப்ரஹ்லாதனுக்கு அருள்செய்தவர்.

குறிப்பு :—இந்த ஸ்தலத்திற்கு நவநரசிம்மமென்று பெயருண்டு. ஏனென்றால் 9 நரசிம்ஹ மூர்த்திகளின் விக்ரஹங்கள் அங்கங்கேயிருக்கின்றன. இத்தலம் கீழ்

அகோபிலமென்றும், மேல் அகோபிலமென்றும் இரண்டா யிருக்கிறது. காடுகளுக்குள் நல்லமலையென்னும், மலைத் தொடர்ச்சியைச் சேர்ந்த மலையின் அடிவாரத்திலுள்ள பெரிய பிரகாரங்களையுடைய சந்நதியின் பெயர் கீழ் அகோ பிலம். இது பெரிய சந்நதி. இந்த ராஜாக்கள் இச்சந்நதி யைக் கட்டிக்கொண்டிருக்கும்பொழுது முகம்மதியர் கோ ட்டைக்குள் பிரவேசமானார்களென்று கேட்டதும், தாம் தப் பித்துக்கொண்டு ஓடும்பொழுது கோயிலின் கட்டிடவேலை கள் எம்மாற்றமிருந்தனவோ அவையே இப்பொழுதும் காணப்படுகின்றன. பின்னிட்ட காலத்தில் இக்கோயிலை யாரும் கட்ட எற்பட்டதாகக் காணவில்லை. சித்திரப் பது மைகளுடன் வேலை செய்யப்பட்டிருக்கும் கற்றூண்கள் சந் நதியின் முன்பாகத்தில் நிறுத்தப்பட்டிருக்கின்றன. இவை கற்பக் கிரகத்தின் முன் மண்டபம் கட்டுவதற்காக நிறுத்தப் பட்ட தூண்களாகக் காண்கின்றன. இப்பொழுது உற்சவ காலத்தில் இந்தத் தூண்களின்பேரில் மூங்கில், வைக்கோல் முதலியவைகள் மூடப்பட்டு மண்டபம்போல் அலங் கரிக்கப்பட்டு உற்சவங்கள் நடக்கின்றன. இக்கோயிலைச் சுற்றிலும் மண்டபங்களடங்கிய பெரிய பிரகாரங்க ளிருக்கின்றன. இக்கோயிலின் முன்புரமாய் விஜயநகர சமஸ்தானத்தின் ராஜாக்களால் அக்காலத்தில் கட்டப்பட்டு தற்பொழுது பாழடைந்திருக்கும் கடைவீதிகளின் இருபுற த்தில் காணும் கல் மண்டபங்களைப் பார்த்தால், பல்லாரி டிஸ்ட்ரிக்டு ஹொஸ்பேட் (Hospet) தாலூக்காவிலுள்ள ஹம்பி என்னும் விஜயநகர சமஸ்தானத்தின் விருப்பாக்ஷி கோயிலின் எதிரில் இப்பொழுது பாழடைந்திருக்கும், பஜார் கட்டிடங்களைப்போலும், அதே மாதிரியாகவும் இந்த பஜார்

காணப்படுகின்றது. இவ்விடம் ஊர் கிடையாது. காட்டு மிருகங்கள் அதிகம். மலைவாசிகளாகிய சென்சு என்னும் ஜாதியார் 3, 4, குடும்பத்தார்கள், இந்தக் கீழ் அகோபிலம் கோயிலின் பிரகாரத்தின் மண்டபங்களில் குடியிருந்துக் கொண்டு சில பசு, எருமைகளை வைத்துக்கொண்டு யாத்ரீகர்களுக்குப் பால், தயிர் விற்கிறார்கள். இக்கீழகோபிலத்திலிருந்து மேல் அகோபிலமென்னும் சந்நதி மலைச் சந்துகளின்வழியாய் முழுதும் ஏற்றமான பாதையில் 5 மைல் தூரத்தில் இருமலைகளின் இடுக்குச்சந்தில் ஒரு நீர் அருவியின் பக்கத்திலுள்ளது. இது, மறங்களடர்ந்து வானமும் கண்களுக்குப் புலப்படாமல், பகலிலும் இருட்டாயிருக்கும் மரங்களின் மத்தியிலிருக்கும் சந்நதி-மூலஸ்தானம்-உக்கிரநரசிம்மம். மலையைவிட்டு முன் வந்திருக்கும் பாறையின் சந்தில் குடைந்த குகையிலிருக்கும் சந்நதி. இவ்விடம், ஊரும், ஜனங்களும் கிடையாது. கோயிலின் அர்ச்சகரும், இரண்டு காவலாளிகள்மாத்திரம் இவ்விடம் வசிப்பவர்கள். இரவில் காட்டு மிருகங்களின் பயமிருப்பதால், கோயிலின் வெளிப்பிரகாரத்தின் இரண்டு இரும்புத்தலைவாசல்களையும் மூடிக்கொண்டு இராத்திரியில் படுக்கவேண்டும். உற்சவகாலங்களில் யாத்ரீகர்கள்இச்சந்நதியில் தரிசனம் செய்துக்கொண்டு, உடனே கீழ் அகோபிலம் திரும்பிவிடுவார்கள். மழை, இருட்டு முதலான அசந்தர்ப்பங்களினால் இவ்விடமே தங்கிப்போனவர்கள், கோயிலின் பிரகாசத்திற்குள்ளேயே படுத்துக்கொள்ளுவார்கள். தலைவாசல் கதவுகளை இராத்திரியில் மூடாமல் படுக்கிறதில்லை. ஏனென்றால், புலி, கரடிகள் நீரருவியில் ஜலமருந்த வருபவைகள், கோயிலுக்குள்ளும் புகுந்துவிடுகின்றன. ஆகை

யால் இம்மாதிரி வெகுகாலமாய் தலைவாசலை இராத்திரியில் மூடி பூட்டிக்கொண்டே கோயிலில் இருப்பவர்கள் தூங்குவது வழக்கம். இவ்விடமிருந்து 3 மைல் தூரத்தில் உன்னதமான பர்வதஉச்சியில் உக்குஸ்தம்பம் என்னும் ஸ்தலமும், 1மைல் தூரத்தில் ப்ரஹ்லாதநரசிம்மம் என்றயிடமும், உக்குஸ்தம்பத்தின் பின்னண்டை சுமார் பூமி மட்டத்தின் 500 அடி உயரத்தில் ஜ்வாலை என்னுமிடமுண்டு. இந்த ஜ்வாலை என்னுமிடத்திற்குப் போக வெகு கடினம். பெண்களும் சிறுவர்களும் கண்டிப்பாய்ப் போக முடியாது. கருடன், இம்மலையில் அனேககாலம் தவஞ்செய்துக்கொண்டிருந்ததால் இம்மலைக்கு 'கருடாத்திரி' என்று பெயர். நவநரசிம்மமென்று சொல்லப்படுமவையின் விவரங்கள்.

1. லட்சுமி நரசிம்மம் (கீழ் அகோபிலம்) 2. வழியில் யோக நரசிம்மம், 3. சத்திராந்த நரசிம்மம், 4 2 மைல் தூரத்தில் பார்க்கவ தீர்த்தக்கரையில் பார்க்கவ நரசிம்மம், 5. காரங்கி நரசிம்மம். 6. உக்கிர நரசிம்மம் (மேல் அகோபிலம்) 7. இவ்விடமிருந்து 2 பர்லாங்கில் வராஹ நரசிம்மம். 8. 3 மைலில் வெகு கடினமான வேதாத்திரி மலையின்மீதில் பர்முலிதி நரசிம்மம், 9. மேல் அகோபிலத்தினின்றும் 1 மைலில் கங்காத்ரி மலையின்பேரில் ப்ரஹ்லாத நரசிம்மம் என்னும 9 நரசிம்மமூர்த்திகளின் விக்ரஹங்களும், மற்றும் அனேக சந்நதிகளும், தீர்த்தங்களுமிருக்கின்றன.

மேல் அகோபிலத்தின் உககிர நரசிம்மம் மலையில் குறைந்த விக்கிரஹமல்ல. தனியாய் நிற்கும் சிறு சித்திர பிம்பம். இச்சந்நதியின் பக்கத்திலுள்ள ஒரு அரையில்



மேல் அகோபிலம் (Upper Ahobalam)

(சந்நதியின் விமானம்).



கீழ் அகோபிலம்—சந்நதி

(Lower Ahobalam).

ஹிரண்யனைச் சம்ஹாரம் செய்யும் பாவனையாயுள்ள நரசிம்ம மூர்த்தியின் விக்கிரஹமும், அதன் எதிரில் ஓர் சிவலிங்கமு முண்டு. ஒரே அர்ச்சகர் இந்த சந்நதிகளுக்குப் பூஜை செய்கிறார்.

மார்க்கமும் வசதியும் :— மதராஸ் தென் மராட்டா ரெயில்வேயின், (M. & S. M.) குண்டக்கல்–பெஜவாடா லைனிலுள்ள நந்தியால் என்னும் ரெயில்வே ஸ்டேஷனி லிறங்கி மோட்டார் பஸ் வண்டியிலேறி (சார்ஜ் ரூ. 1–0–0) தெற்கே 26 மைலுள்ள அர்லகெட்டா (Arlagedda) என் னும்சிவேல் தாலூக்காவின் ஹெட்குவார்ட்டர் ஊரைச்சேர் ந்து, அவ்விடமிருந்து மாட்டுவண்டியின்பேரில் 10,12 மைல் தூரத்திலுள்ள மலையடிவாரத்தைச் சேர்ந்தால் இந்த சந்நதி யைச் சேரலாம். மலையும், கற் குண்டுகளும் நிறைந்துள்ள காட்டுப்பாதை. அர்லகெட்டாஎன்னும்ஊர் தாலூக்காவின் ஸ்தலமாகையினால், லோகல் பண்டு சத்திரமும், கடைகளு முண்டு. ஊரின் பக்கத்தில் ஓர் சிறிய காட்டாறு ஓடுகிறது. அர்லகெட்டாவிலிருந்து இரட்டைமாட்டுவண்டிக்கு அகோ பிலம் போய்வர சார்ஜ் ரூ. 3—8—0க்குக் குறைவில்லை இந்த 10, 12 மைல்களும் 6 முதல் 8 மணி நேரம், போக மாத்திரம் செல்லும். இந்தச் சந்நதியில் கடைகள் கிடை யாது. ஜல சௌகரியமும் குறைவு. கோயிலுக்குள் ஓர் இறை கிணர் உண்டு. சாப்பாட்டு சாமான்கள் தேவையானவை களை அர்லகெட்டாவென்னும் ஊரிலிருந்தே கொண்டுபோக வேண்டும். மற்றும், மதராஸ் தென் மராட்டா ரெயில்வே மெயின் லைனிலிருக்கும் எர்ரகுண்ட்லா ஸ்டேஷனிலிறங்கி வடக்கே 8 மைல் தூரத்திலுள்ள ப்ரொதத்தூரை, மோட் டார் வண்டியின் மூலமாய்ச்சேர்ந்து அவ்விடமிருந்து

மோட்டார் வண்டியின் மூலமாய் சாகர்லமூர் என்னும் கிராமத்தை அடைந்து, அவ்விடமிருந்து இரட்டைமாட்டு வண்டியின் மூலமாய் 12 மைல் வடக்கே மணல், கற்குண்டு கள் நிறைந்த மட்பாதை வழியாய்ச்சென்றால் இத்தலத்தை அடையலாம்.

சிவராத்திரி கழிந்த 1 வாரத்தில் நடக்கும் உற்சவ காலங்களில் மோட்டார்வண்டிகள் நந்தியால் ஸ்டேஷனி லிருந்து தெற்கே அர்லகெட்டா போகும் கற்சாலையி னின்றும் கிழக்கேபோகும்பாதையாய் ருத்ராவரம்சென்று அவ்விடமிருந்து கீழ் அகோபிலத்திற்குச் செல்லுகின்றன. மற்றைய காலங்களில் கீழ் அகோபிலத்திற்கு மோட்டார் வண்டிகள் கிடையா.

குறிப்பு:— இந்த சந்நதி அகோபிலம் மடத்திற்குச் சேர்ந்தது. அம்மடம் வடகலையாருடையது. இப்பொழுது ஸ்ரீரங்கத்தில் இம்மடமிருக்கிறது. இதற்கு அனேக செழிப்பான கிராமங்களுண்டு. வருஷாந்திர வரும்படியும் அதிகம். ஆனல் மடாதிபதி, இந்த சந்நதியின் கட்டி டங்கள் பாதைகள் விஷயமாய் செலவுகள் அதிகமாய்ச் செய்வதாகக் காணவில்லை. கோயிலின் வருஷா வரும்படி யிலிருந்து அர்ச்சகர்கள் சம்பளமும், தினப்படி பூஜைசெல வுகளும்போய் மிகுந்தபணத்தை மடத்தார் எடுத்துச்செல் வதாகத் தெரிகிறது. உற்சவகாலங்களில் லோகல்போர்டார் ஜலம், அவுஷதம் சுகாதாரவசதிகளைச்செய்கிறார்கள். மேல் அகோபிலத்திற்குப்போகும் பாதையிலுள்ள செடி கொடி களை வெட்டி சுத்தம் செய்து மடத்தாரிடமிருந்து அந்த செலவுகளை வசூல் செய்துக்கொள்ளுகிறார்களாம். அகோபில

மடத்தின் பரமாய் இந்த சந்நதியின் பூஜை திருவிழாக் கிரமங்களைக் கவனிக்க ஓர் தர்மகர்த்தா நியமிக்கப்பட்டிருக்கிறார். இவர் கர்நூல் ஜில்லா, பத்திகொண்டா தாலூக்காவைச்சேர்ந்த மத்திகெரா என்னும்கிராமத்தில் வசிக்கிறவர். மேல் அகோபிலம், கீழ் அகோபிலத்தின் இந்த இரண்டு நரசிம்ம விக்கிரஹங்களைத்தவிற மற்ற 7 நரசிம்ம விக்கிரஹங்களுக்கும் தினசரி பூஜை கிடையாது. இந்தஸ்தலத்தின் கட்டிடங்களும், வழிகளும் வெகு க்ஷீண திசையிலிருப்பதாலும், ஜல வசதி யில்லாமலிருப்பதாலும், வழியில் செடிகொடிகள் வளர்ந்து பாதையை மூடிக்கொண்டிருப்பதாலும், அகோபிலமடத்தார் இவ்விஷயங்களைக் கவனியாமலிருப்பதாலும், காருண்ய பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் இக்காரியங்களையெல்லாம் தங்கள் உத்தியோகஸ்தர் மூலியமாய் சீர்வர நடத்திவிட்டு மடத்திற்குவரும் வருஷா வரும்படியிலிருந்து தங்கள் சிலவு தொகைகளை வசூலித்துக்கொள்ளும் ஏற்பாடு சீக்கிரத்தில் செய்தால் இச்சந்நதிக்கு வரும்படியான ஆயிரக்கணக்கான யாத்ரிகருடைய மனமார்ந்த வந்தனத்தையடைவார்கள்.

## 98. வடமதுரை (Muttra) 105.

மங்களாசாசனம்.

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி

3ம் பத்து 6ம் திருமொழி 3ம் பாசுரம்
4 ,, 7 ,, 9 ,,

ஆண்டாளருளிச் செய்த திருப்பாவை 5ம் பாசுரம்.

நாய்ச்சியார் திருமொழி.

முதலாயிரம் 4ம் திருமொழி 5, 6ம் பாசுரங்கள்.
,, 12ம் ,, 1ம் பாசுரம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
6ம் பத்து 7ம் திருமொழி 5ம் பாசுரம்.
,, 8 ,, 10ம் ,,
9 ,, 9 ,, 6ம் ,,
சிறியதிருமடல் 74ம் பாசுரம்.

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி
8ம் பத்து 5ம் திருமொழி 9ம் பாசுரம்.
9 ,, 1 ,, 3 to 10 பாசுரங்கள்.

ப்ரபாவம் :—கோவர்த்தனம், கோவர்த்தநேசன், சத்யபாமை, கோவர்த்தன விமானம், இந்திரதீர்த்தம், கோவர்த்தன தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், இந்திராதி தேவர்களுக்கு ப்ரத்யக்ஷம்.

இது பெரிய ஜில்லா பட்டணம். இவ்வூரில் நவீனமான கட்டிடத்தால் கட்டப்பட்ட இரண்டு நவீன கோயில்கள் துவாரகநாத்ஜீ, மதுராநாத்ஜீ என்றிருக்கின்றன. இவைகள் ப்ரபாவத்தில் கண்டிருக்கும் சந்நதிகளாகக் காணப்படவில்லை. இந்த கோயில்களின் எதிர்ப்புறத்தில் ராஜவீதியின் கிழண்டை யமுனா நதி ஓடுகிறது. விஸ்ராந்திகாட் ஸ்நான கட்டம் என்ற ஒரு படிக்கட்டுகள் கட்டின இடமிருக்கிறது. யாத்ரிகர்கள் இந்தக் கட்டத்தில் யமுனையில் ஸ்நாநஞ்செய்கிறார்கள். இதுதான் வெகுவும்விசேஷமானவிடம். இந்த யமுனையின் ஸ்நானக்கட்டத்தில் ஸ்நானஞ்செய்தால், இவ்வூரின் யாத்திரை தீர்ந்துபோய்விடும். இந்த விஸ்ராந்திகாட் (Vishranthi Ghat) எப்படி விசேஷமென்றால், பூர்வத்தில் ஸ்ரீகண்ணபிரான் விஸ்வரூபமெடுத்து தன் தாய்மாமனாகிய கம்சனைவதைசெய்து, அதே ஆவேசத்துடன் யமுனைக்கரை

யாகிய இவ்விடத்தில் உட்கார்ந்துக்கொண்டிருக்கையில், ஊர் ஜனங்களெல்லாம்வந்துஸ்ரீகிருஷ்ணனைப்பிரார்த்தித்துசாந்தி அடையவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, இவ்விடத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் விஸ்ராந்தி (சாந்தம்) அடைந்த இடமாகையால், இதற்கு விஷ்ராந்தி கட்டம் எனப்படும். இப்பொழுதும், ஒவ்வொரு நாளும் மாலை விளக்குவைக்கும் தருணத்தில் இந்தக் கட்டத்தில், பெரிய தீபாராதனை செய்வதையும், அப்பொழுது அவ்விடம் தொங்கவிட்டிருக்கும் மணிகளை முழங்கச்செய்வதையும் தரிசனஞ்செய்ய அநேக ஜனங்கள் சேருகிறார்கள். இதன் தாத்பர்யம் என்னவென்றால், இப்பொழுதும் ஸ்ரீ கிருஷ்ணனை விளக்குவைக்கும் தருணத்தில் சாந்திசெய்வதெனப்படும். இவ்வூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கருகில் ஓர் காலி இடத்தை ஸ்ரீ கிருஷ்ணன் ஜனித்தவிடமென்று இவ்வூரார் சொல்லுகிறார்கள். யமுனா நதிக்கரையின் பிருந்தாவனம் செல்லும் மார்க்கத்தின் வலதுபுறம் ஊர் பக்கத்திலுள்ள ஓர் இடிந்த கட்டிடத்தை கம்சனின் மாளிகையென்றும் காட்டுகிறார்கள். இவ்வூரில் பால்கோவாவினால் செய்யப்பட்ட பேடா என்னும் மிட்டாய் வெகு விசேஷம். வெளியூர்களுக்கு ஜாஸ்தியாய் அனுப்பப்படுகிறது. இவ்வூரிலுள்ள பண்டாக்கள் என்னும் பிராமண புரோகிதர்கள் யாத்ரீகர் கொடுக்கும் பணத்தால் ஜீவனம் செய்பவர்களானாலும், அனேகம்பேர் மல் சண்டை செய்யும் பயில்வான்களாயிருக்கிறார்கள். இந்தப் பண்டாக்களுடன் யாத்ரீகர்கள் வெகு ஜாக்கிரதையாய் நடந்துகொள்ளவேண்டும்.

இந்தஸ்தலத்திற்குச் சென்றபின் பார்க்கும் இதர ஸ்தலங்களாவன :—

கோகுலம் (Gokul)–இதுவே "திருவாய்ப்பாடி" என்பர். இது வடமதுரையிலிருந்து தென் கிழக்கே 4 மைல் தூரத்திலுள்ளது. குதிரை டாங்கா வண்டிகள் கிடைக்கின்றன. யமுனாநதியைக் கடந்து கோகுலத்திற்குச் செல்லவேண்டும். இது நதியின் இடப்பக்கமுள்ளதோர் சிறு கிராமம். இவ்விடம் தன்கர் (Dangar) என்னுமிடையர்கள் அதிகமாய்க் குடியிருக்கிறார்கள். இவ்விடம் ஒரு வீட்டில் கிருஷ்ணன் பொம்மைகளை வைத்திருக்கிறார்கள். ஒரு தொட்டிலுமுண்டு. அதில் மண்ணினால்செய்த தவழும் ஸ்ரீகிருஷ்ணன் பதுமையை வைத்துத் தொங்கவிட்டிருக்கிறார்கள். யாத்ரீகர்கள்போனால், அந்த வீட்டை யசோதை நந்தகோபனிருந்த வீடென்றும், ஸ்ரீகிருஷ்ணன் அவ்விடம் தான் குழந்தைப்பருவ காலத்தில் வளர்ந்ததாகவும் சொல்லுகிறார்கள். அவ்விடமிருப்பவர் யாத்திரீகர்கள்சென்றால் ஸ்ரீகிருஷ்ணன் தொட்டிலை கையினாலிழுக்கச் சொல்லுகிறார்கள். இதற்கு சார்ஜ் ரூ. 1-4-0 கேட்கிறார்கள். அபிப்பிராயமென்னவென்றால், ஒன்றுமறியாத யாத்ரீகர்கள் தாங்கள் ஸ்ரீகிருஷ்ணனைத் தாலாட்டுவதாக பாவனை. இப்படி வசூலாகும் பணமே அவ்வீட்டார்க்கு ஜீவனம். சமயோசிதம் பணம் வாங்கிக்கொள்ளுகிறார்கள். போன யாத்ரீகர்களை உட்காரச்சொல்லி, தொட்டில் கயிற்றை அவர்கள்கையில் கொடுத்து இழுக்கும்படிச்சொல்லி பின்பு துட்டுக்கு தகராறு செய்வார்கள். யாத்ரீகர்களே ஜாக்கிரதை! இதுதான் இவ்விடம் பார்க்கும் விஷயம். இதைப்பார்த்து வேறும் சிலர் தங்கள் தங்கள் வீட்டில் பொம்மைகளைவைத்துக் கொண்டு யாத்ரீகர்களை இதுதான் கிருஷ்ணன் வளர்ந்த நிஜமான வீடு அல்லது இடமென்று சொல்லி ஏமாற்று

கிறார்கள். கூடவரும் பண்டாக்களுக்கும், வீட்டாருக்கும் வரும்படியில் பாகமிருக்கிறதாகத் தெரிகிறது.

கோவர்த்தனகிரி (Govardhan)—இது கோகிலத்தி லிருந்து 7 மைலும், வடமதுரையிலிருந்து (Muttra) தெற்கே 9 மைல் தூரம். குதிரைவண்டிகள் கிடைக்கும். இவ்விடம்தான் ஸ்ரீ கண்ணபிரான் கோபாலர்களையும், கோக்களையும் கல்மாரி பெய்யும்பொழுது இம்மலையைக்கையிலேந்தி குடையாக நிறுத்தின மலையும் ஸ்தலமுமென்பர். யாத்ரீகர்கள் சுமார் 10 மைல் சுற்றளவுள்ள இந்த மலையை வலம் வருவார்கள். வழியில் தங்க வசதிகளுண்டு.

பிருந்தாவனம் (Brindaban)—இது வட மதுரைக்கு (Muttra) வடக்கே 6 மைல் தூரத்தில் யமுனைக் கரைமேலுள்ள ஸ்தலம். மீட்டர்கேஜ் ரெயில்வே வடமதுரையிலிருந்து செல்லுகிறது. பெரிய ஊர். அனேக பெரிய சத்திரங்களும் கடைகளுமுண்டு. கஞ்சீபுரவாசியான காலஞ்சென்ற ஸ்ரீமான் ரங்காச்சாரியார் என்பவர் ஒரு பம்பாய் சேட்டின் உதவியைக்கொண்டு தென்னாட்டின் சந்நதிகளைப்போல் ஓர் ரங்கமன்னார் சந்நதி கட்டியிருக்கிறார். "ரங்கமந்தீர்" என்று பெயர். இதில் தென்னாட்டைப்போல் பஞ்சராத்ர சம்பிரதாயப்படி பூஜைப் பிரசாதங்கள் வழங்குகிறது. அனேக கஞ்சீபுரம் ஸ்ரீ வைஷ்ணவர்கள் கோயில் சுற்றிலும் கட்டியுள்ள வீடுகளில் வாசம் செய்கிறார்கள். யாத்ரீகர்கள் தங்க இடமுமுண்டு. சந்நதியில் எப்பொழுதும் பிரசாதம் கிடைக்கும். இந்த ஸ்ரீ வைஷ்ணவர்களில் சிலருக்குப் பணம் கொடுத்தால் அலங்காரச் சாப்பாடு நம் தேசத்தைப்போல் கொடுப்பார்கள். இவ்விடம் வெகு

பெரிய வடதேசத்துபணக்காரர்கள் பெரிய சத்திரங்களையும் ஸ்ரீகிருஷ்ணன் கோயில்களையும் கட்டியிருக்கிறார்கள்.

இவ்விடம் பார்க்கவேண்டிய விசேஷங்கள் :—

யமுனா நதி ஒரு காலத்தில் இந்த ஊரின்பக்கம் சென்றுகொண்டிருக்குங்கால் கட்டப்பட்ட ஸ்நான கட்டங்கள் வெகுவாயிருக்கின்றன. இப்பொழுது நதி சுமார் $\frac{1}{3}$ மைல் தூரத்திற்கப்பால் ஒதுங்கிப்போய்விட்டபடியால் இந்த ஸ்நானக் கட்டங்களெல்லாம் பாழாயிருக்கின்றன. இவைகளில் ஊருக்கு வெளியாயுள்ள ஓர் பள்ளத்தாக்கான இடத்தை பூர்வத்திய "காளிங்கமார்தனமடு" என்கிறார்கள். இதன் பக்கத்தில் பயங்கரமான, இருளடைந்த மறங்களுமிருக்கின்றன. அதற்கு கிழண்டை, ஊரின் பக்கத்தில் சுஷீரகாட் என்னும் ஒரு பொன்னமரமுள்ள கட்டத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் ஜலக்ரீடையாடின இடமென்று சொல்லுகிறார்கள். இவ்விடம் சில வியாபாரிகள் 4,5 அங்குல அகலமுள்ள நீண்ட புதிய துணிகளைக் கையில்வைத்துக்கொண்டு ஒன்றுமறியாத யாத்ரீகர்களிடத்தில் வந்து ஸ்ரீகிருஷ்ணன் கோபிகாஸ்திரீகளின் துணிமணிகளை அவர்கள் ஸ்நானம் செய்யும்பொழுது கவர்ந்துகொண்டுபோய்க் கட்டின பொன்னமரமிதுவே ஆகையால் நீங்களித்துணியை 0—8—0 கொடுத்து விலைக்கு வாங்கி அந்தப் பொன்னமரத்தில் கட்டினால், புண்ணியமென்று சொல்லி பேதையாத்ரீகர்களிடம் 0—8—0 வாங்கிக்கொண்டு அவர்கள்கையால் துணியை மரத்திற்குக் கட்டும்படிச்செய்து அவர்கள் சென்றதும், அத்துணியை அவிழ்த்துக்கொண்டு மற்ற யாத்ரீகர்களுக்கு இம்மாதிரியாகவே சொல்லி விற்பார்கள். அந்தோ! யாத்ரீகர்கள் சம்பா

தித்து எடுத்துப்போன பணம் எம்மாதிரியாய்ப்போகிறது. "சேவாகுஞ்சம்" என்னும் ஒரு காட்டைப்போன்ற தோட்டமிருக்கிறது. இதில் ஸ்ரீ கிருஷ்ணன் இராதாவின்கூடக்கலந்து லீலைகளாடின விடமென்றும், இராதாநிவாசமென்றும் சொல்லுகிறார்கள். இராக்காலத்தில் இவ்விடம் யாரும் தங்குவதில்லை. தங்கினால் இறந்துபோய்விடுவார்களென்ற பயமிட்டிருக்கிறார்கள். யாரும் பரீக்ஷை பண்ணுகிறதில்லை. இந்த ஊரிலும் பாலினாலாகும் நல்ல "பேடா" (தித்திப்பு-தித்திப்பின்மை-மிக்கா) வெகு நயமாய்க் கிடைக்கும். இவ்விடம் ரங்கமந்திரத்தில், தங்க இடம் கொடுப்பார்கள். ஆனால் நம் நாட்டிலிருக்கிற பிராமண, சூத்திர ஆசாரம் அவ்விடம் குடியிருக்கும் தென்னாட்டு ஸ்ரீ வைஷ்ணவர்கள் வெகுவாய்ப் பாராட்டுவார்கள். ஹிந்தி பாஷை தெரியாத யாத்ரீகர்கள் இவ்விடம் தங்குவதற்கு சௌகரியம்.

மார்க்கம் :—இது டேல்ஹி (Delhi) என்னும் நகரத்திற்கு 80 மைல் தெற்கிலுள்ளது. மதராசிலிருந்து கிராண்ட் ட்ரங்க் எக்ஸ்பிரஸ் (Grand Trunk Express) என்னும் வண்டியில் புறப்பட்டால் நேராய் இந்த ஸ்டேஷனில் மூன்றாம் நாள் காலையில் இறங்கலாம். இவ்விடமிருந்து டெல்ஹி அதே வண்டியில் சென்றால் ஏறக்குறைய 3 மணி நேரத்திய பிரயாணம். இது ஜி. ஐ. பி. (G. I. P. Ry.) ரெயில்வே லைனிலுள்ள ஒரு ஸ்டேஷன்.

---

99. திருவாய்ப்பாடி 106. இப்பொழுது (கோகுல மென்று பெயர்.)

மங்களாசாசனம்.

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 2ம் | பத்து | 2ம் | திருமொழி | 5ம் | பாசுரம். |
| | ,, | 3ம் | ,, | 10ம் | ,, |
| 3 | ,, | 4ம் | ,, | 10ம் | ,, |
| | ,, | 6ம் | ,, | 7ம் | ,, |

ஆண்டாளருளிச் செய்த நாய்ச்சியார் திருமொழி

முதலாயிரம் 12ம் திருமொழி 2ம் பாசுரம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1ம் | பத்து | 8ம் | திருமொழி | 4ம் | பாசுரம். |
| 5ம் | ,, | 5ம் | ,, | 5ம் | ,, |
| | ,, | 9ம் | ,, | 8ம் | ,, |
| 11ம் | ,, | 5ம் | ,, | 2, 3, 4ம் | பாசுரங்கள். |

சிறியதிருமடல் 28ம் பாசுரம்.

ப்ரபாவம் :— நவமோகன கிருஷ்ணன்—ருக்மிணிப் பிராட்டி—சத்யபாமை நாய்ச்சியார்—ஹேமகூட விமானம்—யமுனா நதி—கிழக்கே திருமுகமண்டலம்—நின்ற திருக்கோலம்—நந்தகோபற்கு ப்ரத்யக்ஷம்.

குறிப்பு :—ப்ரபாவத்தில் கண்டிருக்கும் சந்நதியிருப்பதாகக் காண்கிறதில்லை. வடமதுரை என்னும் 98வது திவ்ய தேசத்தின் விவரத்தில் கண்டிருக்கும், கோகிலம் என்னும் விஷயத்தில் பூர்த்தியான விவரம் காணவும்.

மார்க்கம் :—வடமதுரை (Muttra) என்கிற ஊரிலி ருந்து தென்கிழக்கே 4 மைலிலுள்ளது. இதற்கு ரெயில் கிடையாது. குதிரைவண்டிகளுண்டு. தங்க வசதியும் கடைகளுமுண்டு ஆனல் யாத்ரீகர்கள் சாதாரணமாய் மத்ராவில் தங்கிக்கொண்டு இத்தலத்தை தரிசனம் செய்து உடனே திரும்பி மத்ரா வந்துவிடுகிறார்கள்.

100. திருக்கண்டங்கடிநகர் (தேவப்ரயாகை) (Devaprayag) அல்லது கண்டமென்னும் கடிநகர். 102. மங்களாசாசனம்.

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி
4ம் பத்து 7ம் திருமொழி 11 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—நீலமேகப் பெருமாள், புருஷோத்தமன், புண்டரீகவல்லி, மங்களவிமானம், மங்களதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், பரத்வாஜ மக ரிஷிக்குப் பிரத்யக்ஷம்,

மார்க்கமும் வசதியும் :-இது ஹரித்துவாரத்திலிருந்து பத்ரீநாராயணன் போகும் வழியில், மலைமேல் 58-வது மைலிலுள்ள சிறிய கிராமம் இதுவே 5 பிரயாகுகளில் (நதிகளின் சங்கங்களில்) முதலான பிரயாக் (சங்கமம்). மற்ற நான்கு பிரயாகுகள் பத்ரி செல்லும் வழியிலுள்ளவை. (பிரயாக் என்றால் இரண்டு நதிகள் சந்திக்குமிடம்).

1. இவ்விடம் அலக்நந்தா கங்கையில் பாகீரதி கங்கை சங்கமமாகிறது. இவ்விடமிருந்து யாத்ரீகர்கள் பாகீரதி கங்கைக் கரையின் மூலியமாய் யமுனைத்திரி (யமுனை உற்பத்தி), கங்கோத்ரி (கங்கை உற்பத்தி) என்னுமிடங்க ளுக்கு தீர்த்தயாத்திரை செய்யப் பிரியவேண்டும்.

2. ருத்திரபிரயாக் (Rudraprayag)—இது ஹரித்து வாரத்திலிருந்து 95½ மைல். தேவப் பிரயாகையிலிருந்து 37½ மைல். இவ்விடம் அலக்நந்தா கங்கையில் மந்தாக்கினி கங்கை சங்கமமாகிறது. மந்தாக்கினி கங்கையின் கரை மார்க்கமாய் கேதார் நாத் தரிசனம் செய்யச் செல்லும் யாத்ரிகர்கள் பிரிகிறார்கள்.

3. கர்ணபிரயாக் (Karnaprayag)—இது ஹரித்வாரத்திலிருந்து 116வது மைலிலுள்ளது. இவ்விடம் அலக்நந்தா கங்கையும் பிண்டார்கங்கை என்னும் நதியும் சங்கமம். இவ்விடத்தில் ராம்நகர்—ராணிகேட்டிலிருந்து வரும் வழி சந்திக்கிறது.

4. நந்தப் பிரயாக் (Nandaprayag)—இது கர்ண பிரயாகிலிருந்து 12½ மைல் தூரம். இவ்விடம் அலக்நந்தா கங்கையும் நந்தாக்கினி கங்கையும் சங்கமம்.

5. விஷ்ணுபிரயாக் (Vishnuprayag)--இது ஜோஷி மடத்திலிருந்து பத்ரி போகும் வழியில் 2 மைல் தூரத்திலுள்ளது. இவ்விடம் அலக்நந்தாவும், விஷ்ணு கங்கையும் சங்கமம்.

இந்த தேவப்பிரயாகை என்னும் ஸ்தலத்தின் பூர்ணமான விவரம் 102வது திவ்யதேசமாகிய வதரியாச்சிரமம் அல்லது பத்ரிகாஸ்ரமம் என்னும் ஸ்தலத்தின் 16ம் விவரத்தில் காண்க. இவ்விடமுள்ள விஷ்ணு சந்நதியில், இவ்விடம் வசிக்கும் தென்னாட்டு பிராமணர்தான் பூஜை செய்கிறார். சந்நதியும் சங்கமத்தின் சமீபமாயுள்ளது. கடைகளும் சத்திரங்களுமுண்டு.



தேவப்பிரயாக் என்னும் திருக்கண்டங்கடிநகர்
அல்லது கண்டமென்னும்கடிநகர்—(Devaprayag)



திருப்பிரிதி அல்லது ஜோஷிமடம்
(Joshimutt)

## 101. திருப்பிரிதி (ஜோஷிமடம்) Joshimut. 103.

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
1ம் பத்து 2ம் திருமொழி 10 பாசுரங்கள்.

ப்ரபாவம் :—பரமபுருஷன், பரிமளவல்லி நாய்ச்சியார், கோவர்த்தன விமானம், இந்திர தீர்த்தம், மாநஸ ஸரஸ்ஸு, கிழக்கே திருமுகமண்டலம், புஜங்க ஸயனம், பார்வதிக்குப் ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:-இந்த ஸ்தலத்தை இப்பொழுது ஜோஷிமட மென்கிறார்கள். இது ஹரித்வாரத்திலிருந்து 164 மைல் தூரமுள்ளது. இவ்விடமிருந்து வதரியாச்சிரமம் என்கிற பத்ரீநாராயணன் 19 மைல் தூரம். இவ்விடம் சத்திரங்களும் கடைகளுமுண்டு. 102வதாய் சொல்லியிருக்கும் வதரியாச்சிரமம் அல்லது பத்ரிகாஸ்ரமம் என்னும் ஸ்தலத்தின் விவரத்தில் இந்த ஸ்தலத்தின் பூர்ண விஷயங்களை யறியவும். ப்ரபாவத்தில் கண்டிருக்கும் சந்நதி வெகுவாய்க் காணப்படுவதில்லை. அவ்விடம் விசாரிக்க வேண்டும். சங்கரமடத்திலிருக்கும் நரசிம்ம சாலக்கிராமத்தைத்தான் யாத்ரிகர்கள் வெகுவாய் தரிசிக்கிறார்கள்.

---

## 102. வதரியாச்சிரமம் அல்லது பத்ரிகாஸ்ரமம். 101.

(பத்ரிநாராயணன் என்றும் பிஷால்பத்ரி என்றும் சொல்லுவார்கள்

மங்களாசாசனம்.

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி
4ம் பத்து 7ம் திருமொழி 9ம் பாசுரம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
1ம் பத்து 3ம் திருமொழி 10 பாசுரங்கள்.
,, 4 ,, 10 ,,
சிறிய திருமடல் 74ம் பாசுரம்.

ப்ரபாவம் :—பத்ரீ நாராயணன், அரவிந்தவல்லி, தப்த காஞ்சன விமானம், தப்த குண்டதீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், இலந்தை மரத்தின்கீழ் பத்மாஸநனாகி ஞானமுத்திரை தரித்து ஜலசீலரான தபஸ்வியாய் நரனுக்கு மந்திரோபதேசஞ் செய்தவர்.

இந்த ஸ்தலம் ஹிமயகிரி பர்வதத்தில் சமுத்திர மட்டத்தைவிட 23,210 அடி உயரமுள்ளது. அலக்நந்தா என்னும் கங்கையின் வலதுபுறமாயுள்ளது. சுமார் 40, 50 வீடுகளுக்கு அதிகப்படாத கிராமம். தர்மசாலைகளும், ராமாநுஜகூடமுமிருக்கின்றன. உற்சவ காலத்தில் மிட்டாய் கடைகளும், மற்ற சாப்பாட்டு சாமான்கள் கடைகளுமிருக்கின்றன. யாத்திரை காலத்தில் இவ்விடம் தபால், தந்தி ஆபீஸ்களும், ஆஸ்பத்திரியுமுண்டு. சித்திரை மாதம் பௌர்ணமிக்கு மேல்பட்டு அற்பிசி மாதம் பௌர்ணமி

வரையில்தான் இந்தச் சந்நதி திறந்திருக்கும். அதற்குமேல் சந்நதி மூடப்பட்டு, ஊர் ஜனங்களெல்லோரும் தங்கள் ஆடு மாடுகளுடன் 10மைல் கீழேயுள்ள சேஷத்தாரா என்னுமிடத்திற்கும், 19 மைல் கீழேயுள்ள ஜோஷி மடத்திற்கும், மற்றையமலையின் கீழ் கிராமங்களுக்கும் போய்விடுகிறார்கள். சர்க்கார் உத்தியோகஸ்தர்களினால், போகாதவர்கள் துரத்தப்பட்டு, கிராமம் காலியாய் வீடுகளெல்லாம் பனிக்கட்டிகளால் மூடிப்போய்விடும். அவ்வூரில், கோயில் பூஜை செய்பவர் மலையாள தேசத்திய, ஸ்மார்த்த நம்பூதரி பிராமணர்தான். இவர் "ராவல்" என்று கூப்பிடப்படுகிறார். இவர் ஆதிசங்கராசாரியாரின் சந்ததியாவர். ஜோஷிமடம் என்னுமிடத்தில் ஆதிசங்கரர் ஏற்படுத்திய சங்கரமடமிருக்கிறது. ஆதி சங்கரர் தான் பௌத்தர்களை வென்று, அத்வைத மதத்தை நிலைநிறுத்தும்பொழுது நான்கு திசைகளிலும் 4 மடங்களை ஏற்படுத்தினர். அவைகளில் மேற்குத் திசையிலிருப்பது துவாரகைமடம். இது துவாரகையில் ஸ்ரீ கிருஷ்ணர் கோயிலுக்குள்ளேயே இருக்கிறது. கோயிலும் இந்த சங்கரமடத்தைச் சேர்ந்தது. வடதிசையிலிருப்பது ஜோஷிமடம். பத்ரீநாராயணன் தேவஸ்தானமும் இவ்விடத்திலிருந்து கீழே 50 மைல் தூரம் வரையிலுமுள்ள கிராமங்கள், ஜமீன்கள் யாவும் இம்மடத்திற்குச் சொந்தமானவைகள். இம்மடத்தின் மஹந்துதான் ராவல் என்னும் இக்கோயிலின் பூஜாரி. கீழ்த்திசையின் சங்கரமடம் ஜகன்னாதத்திலிருக்கிறது. ஜகன்னாத கிருஷ்ணர் கோயில் இம்மடத்திற்குச் சேர்ந்தது. தென் திசையில் ஸ்ரீங்கேரி மடம்—இந்த நான்கு மடங்கள்தான் ஆதி சங்கரருடைய மடங்களென்று அவர் சரமஸ்லோகத்தில் சொல்ல

ப்பட்டிருக்கிறது. புத்தகயாவிலுள்ள மடம் இவைகளுக்கு முன்பு ஆதி சங்கரரால் ஸ்தாபிக்கப்பட்டு, பின்னைய காலத்தில் தனக்கு ஏற்பட்ட நான்கு சிஷ்யர்களையும் மேற்சொன்ன நான்கு மடங்களுக்கு மடாதிபதிகளாய் நியமித்து பின்னர்தான் பத்ரீநாராயணன் சென்று மறைந்ததாகச் சொல்லப்படுகிறது.

பின்காலத்தில் அத்வைத சித்தாந்தம் பரவச்செய்யுமாறு சங்கருடைய சிஷ்யவர்க்கங்கள் தங்கள் முயற்சியால் சில மடங்களை ஏற்படுத்தி, அவைகளுக்குத் தாங்களே மடாதிபதிகளாய்ச் சங்கரமடமென்று பெயர் வைத்துக் கொண்டு வந்திருக்கிறார்கள். அம்மாதிரியான மடங்களே கும்பகோணம் காமகோடி பீடமும், பம்பாய் மாகாணத்திலுள்ள சதாரா சங்கரமடமும், இம்மாதிரி மற்றவைகளும்.

அலக்நந்தா வென்னும் கங்கை பத்ரீநாராயணன் எனப்படும் இடத்திற்குமேல் 10 நாள் பிரயாணமுள்ள ஸ்தலத்தில் ஹிமயகிரி பர்வதத்தின் பனிக்கட்டிகள் கரைவதினலுண்டாகும் ஜலப்பிரவாகத்தின் நதி. அவ்விடம் செல்லமுடியாது ஜனங்கள் சுலபமாய்ச் செல்லும்படியான இடம் பத்ரிவரையிலும்தான். இவ்விடத்தில் ஆதி சங்கரர், இப்பொழுது கர்ப்பகிரகத்திலிருக்கும் யோக நாராயணனென்னும் கற்சிலையை ஸ்தாபித்ததாகவும், பத்மாஸனமாயிருப்பதால் இதை பௌத்தாகாரமென்று சங்கருக்குப் பின்னிட்ட ஜனங்கள் இந்தச் சிலையை எடுத்து பக்கத்திலோடும் அலக்நந்தாவென்னும் கங்கையில் எறிந்துவிட்டதாகவும், பின்னர் ஸ்ரீ பாஷ்யகாரரென்ற இராமாநுஜர் இந்த சிலையை எடுத்து இப்பொழுதிருக்கும் இடத்தில் பிரதிஷ்டை செய்ததாகவும் சொல்லப்படுகிறது.

இவ்விடம் விஷ்ணு தப்த (உஷ்ண) ரூபி என்று சொல்லப்படும். இவ்விடம் வசிப்பவர்கள் யாரென்றால், வேளாண்மை செய்பவர்களல்ல. கோயிலில் பூஜை வகையறுக்களுக்குச் சகாயம் செய்யும் பிராமணர்கள், மற்றும் அவர்கள் குடும்பத்தாரும், யாத்ரிகர்களால் ஜீவனஞ்செய்யும் பண்டாக்கள் என்று சொல்லப்படும் பிராமணர்களும், அவர்கள் குடும்பத்தாரும், வியாபாரார்த்தமாய் வந்து கடைகள் வைத்துக்கொண்டிருக்கும் வைஷ்யர்களும் அவர்கள் குடும்பத்தாரும், யாத்ரிகர்களும், பிச்சையெடுப்போரும், மற்ற சாதுக்களென்று சொல்லப்படும் உயர்தர பிச்சைக்காரருமே இவ்வூரின் பிரஜைகளாவர். யாத்திரை காலத்தில் இவ்விடம் ஓர் போலீஸ் ஸ்டேஷன் டெம்பரவரியாய் வைக்கப்படுகிறது. ஸ்பெஷல் டூட்டியாய் சில போலீஸ்காரர்களும் ஒரு சப் இன்ஸ்பெக்டருமிருக்கிறார்கள்.

இவ்வூரிலுள்ள சில பண்டாக்கள் இந்த ஸ்தல புராணம் கீழ் கண்டவாறு சொல்லுகிறார்கள். எப்படியென்றால்:—

ஆதியில் விஷ்ணுவானவர் தன் அவதாரங்களினால் பூலோகத்தில் தன் லீலைகளையெல்லாம் லௌகீகமாய் ஜனங்களுக்குக் காண்பித்து அவர்களுக்கு தன்னிடத்தில் சதா பக்தியும், நம்பிக்கையும் உண்டாகும்படிச் செய்து, அதனால் அவர்களில் சிலர் பூலோக இன்ப சுகங்களைக்கோரியும், சிலர் அழியும் செல்வம் அதிகாரங்களைக் கோரியும், மற்றும் சிலர் மோக்ஷத்தையடைய வேண்டுமென்னும் ஆசையையடைந்தும், இப்படிப்பலவாறு இந்த ஆத்மாக்களுக்கு உண்டாகும் அல்ப சுக துக்க முதலானவைகளைக்கண்டு ஈஸ்வரன் வெகுவும் வருந்தி இந்த அசித்தான தகளைத்தள்ளி மேலான

(பரமாத்மாவின்) ஞானத்தையும், பக்தியையும், ஆத்ம கோடிகள் அடைந்து உஜ்ஜீவித்து மேலான பதவி அடையும்வண்ணம் செய்யவேண்டுமென்று ஸ்ரீ பகவத்கீதை என்னும் மஹாரஹஸ்யமான உபநிஷத்தான ஆத்ம ஞானத்தை உண்டாக்கும் தத்வங்களை லோகத்தார் அறியும்வண்ணம் உபதேசித்தும், பின்னர் இந்த உபதேசமும் லௌகிகமாய்க் காண்கின்றமையால், ஸ்ரீ மஹாவிஷ்ணு பூலோகத்தில் சகல ஜனங்களும் ஆத்மஞானத்தையடைந்து உஜ்ஜீவிக்குமாறு, தான் தபஸ்வியாய் பத்மாசனத்தில் யோக நிஷ்டையிலமர்ந்தபோது ஸ்ரீ லக்ஷ்மி பிராட்டியார் யோகநிஷ்டையிலிருக்கும் தன் பர்த்தாவுக்குச் செய்யுங் கைங்கர்யங்கள் எங்ஙனமெனத் தெறிந்து, தான் ஒரு பத்ரீ (இலந்தை) விருக்ஷமாய் அவர் பக்கத்தில் தோன்றி நிழல் கொடுத்துக்கொண்டிருக்க, அப்பொழுது ஸ்ரீமந்நாராயணன் நரனுக்கு, அதாவது உலகத்தோருக்கு, உபதேசஞ்செய்த நான்கு வேதங்களும் நான்கு நீர்த்தாரைகளாக இப்பொழுதுங் காண்கிறதென்றும், அந்த இடத்திலேயே முனிவர்களும், யோகிகளும் தபஸ் செய்துகொண்டிருந்தாரென்றும், அவர்கள்பொருட்டு கடும் குளிருள்ள இப்பிரதேசத்தில் சூடான ஜலத்தின் தாரை காண்கின்றதென்றும் சொல்லுகிறார்கள். மற்றும் இவ்விடத்திற்குவரும் யாத்ரீகர்கள் யாரேனும் பெருமாளை தியானிக்கும்பொழுது தனக்கு மண், பெண், பொன் முதலான இச்சைகளைக் கோறினால், நாராயணன் இந்த ஆத்மகோடிகளைப் பார்த்து சிரிக்கிறாரென்றும் உலகத்தின்கண் அதாவது தன்னுடைய மலையின் கீழ், சுக துக்கங்களை இவ்வளவுகாலமும் அனுபவித்து பின்னும் இக் கடின மலையின்மீதில் வந்தும், அந்த அற்ப சுகங்களைக்

கேட்கிருயே யென்று அந்த ஆத்மாவின்பேரில் கருணையும், கவலையுமுற்றவராய் நீ இவ்விடம் என்னை "மோக்ஷம்" என்னும் பதவியைக் கேள் என்று சொல்லும் வண்ணம் யோகாசனத்திலிருக்கிருர்.

இவ்விடம் சுமார் 40 வயதிற்குட்பட்ட யாத்ரிகர்கள் வருவது வெகுவுங் குறைவு. இந்தஸ்தலத்திற்கு மேலே செல்ல முடியாது. மற்றும் போகக்கூடாது. ஏனென்ருல் அவ்விடம் சதா பனிக்கட்டிகள் பருத்தியைப்போல் ஆகாயத்திலிருந்து விழுந்துகொண்டிருக்கிறது. ஜனங்கள் பேரில் விழுந்து அவர்களைப் பூராவும் புற்றைப்போல் பனிக்கட்டிகள் மூடிவிடும். அப்படி மூடிவிட்டால் இவர்களுக்கு திரேகத்தின் உஷ்ணம்(Animal heat)குறைவதன்றி தகுமளவு பிராணவாய்வு (Oxygen gas) சுவாசத்திலுங் குறைந்துபோய் ஜனங்கள் இறந்துபோய்விடுவார்கள். இவ்விடமிருந்து 4 மைல் வடமேற்கே அலக்நந்தா என்னும் கங்கையைக் கடந்து சென்ருல் 2வது மைலில் மானுேகாவ் என்னும் ஓர்சிறிய கிராமமுண்டு. அதன் மேல்புரத்தில் 2 மைல் தூரத்தில் "பசுத்தாரா" என்னும் ஓர் நீர்வீழ்ச்சியுண்டு. மலையின்பனிக்கட்டிகள் கரைந்துவரும் ஜலவீழ்ச்சி. சிலர் இதில் ஸ்நானம் செய்கிருர்கள். பத்ரிநாராயணன் கோயில் திறந்த சுமார் 1½ மாதங்களுக்கு மேலேதான் இவ்வீழ்ச்சியுண்டாகிறது. மற்றையபொழுது பனிக்கட்டியாய்க் காண்கிறது. உஷ்ணமில்லாததால் பனிக்கட்டி கரைகிறதில்லை. இம்மாதிரியே கோயிலுக்கு எதிர் மலையில் ருக், எஜுர், சாம, அதர்வன என்னும் வேதங்களின் பெயர் கொண்ட நீர்வீழ்ச்சிகளும் சிறிதுசிறிது தூரங்களில் காண்கின்றன. இந்த 4 வேதங்களையும் நாராயணன் நானுக்கு

உபதேசித்த விடங்கள் அந்தந்த விழ்ச்சிகளின் பக்கத்தி லென்று சொல்லுகிறார்கள் மேலும் கண்டாகரண னென்னும் ஓர் அரக்கன் பத்ரியின் மேல் மலையில் திரிகிற னென்றும், அவ்விடம் ஜனங்கள் பசுத்தாராவிற்கு மேல்புறம் போனால் அவர்களைக் கொன்றுவிடுகிறானென்றும் ஜனங்க ளுக்குப் பயமிட்டிருக்கிறார்கள். கோயிலின் வடப் பிரகா ரத்தில் கண்டாகர்ணனுக்கு ஒருசந்நதி இருக்கிறது. பூஜாரி தினமும் இராக்காலத்தில் பூஜைமுடிந்ததும் இச்சந்நதிக்குச் சென்று கண்டாகர்ணனை இராக்காவல் பார்த்துக்கொள்ளும் படி பிரார்த்தனை செய்தே தன் ஆஸ்தானம் செல்லுகிறார். நிஜஸ்திதி மேலே சொன்ன பனிக்கட்டிகள் தேகத்தில் மூடும் அபாயமே. இந்த ஸ்தலத்திலிருந்து வடக்கே 10 மைல் சென்றால் திபேத் (Tibet) தேசத்தின் எல்லை ஆரம்பிக்கிறது. இந்த பத்ரிநாராயணன் என்னும் க்ஷேத்தி ரத்தை வட தேசத்தார் பிஷால் (பெரிய) பத்ரி என்று பெயர் வழங்குகிறார்கள். இந்த ஹிமயகிரி மலைமேல் 5பத்ரி க்ஷேத்திரங்கள் உண்டு.

அவைகளாவன :—

1. அதி-பத்ரி (Adi-Badri)—இவ்விடம் ஒரு தபாலா பிசும், பத்ரிநாராயணனெனும் அனேக சிறு சந்நதிகளுண்டு. இது பத்ரியிலிருந்து திரும்பும்பொழுது 67½ மைல் தூரமுள்ள கர்ண பிரயாகிலிருந்து ராம்நகர் மார்க்கம் திரும்பிவரும் வழியிலுள்ளது. இது கர்ண பிரயாகுக்கு 12வது மைலிலிருக்கிற சிறு கிராமம்.

2. த்யான் பத்ரி அல்லது அனிமாதா (பழைய) பத்ரி— இதற்கு ஹிலாங்சட்டி என்னுமிடத்திலிருந்து ஒரு கடின

மான வழியில் போகவேண்டும். பத்ரி போகும் வழியின் இடதுபுறத்தில் செங்குத்தான மலையின்பேரில் சுமார் 6 மைல் தூரத்திலுள்ளது.

3 யோக பத்ரி—இது பாண்டுகேஸர் என்னுமிடத்தில் பத்ரிக்குப்போகும் வழிமேலுள்ளது. தங்க வாடிகளும் கடைகளுமுண்டு.

4. பிஷால் பத்ரி (பெரிய பத்ரி) அல்லது பத்ரீ நாராயணன் என்னும் யாத்திரை செல்லுமிடம்.

5. பாவிஷ்ய (எதிர்காலத்து) பத்ரி—இது ஜோஷிமடமென்னுமிடத்திற்கு வடகிழக்கே, தபோவனமென்னுமிடத்தில், 8 மைல் தூரத்திலுள்ளது. பிஷால் பத்ரி என்னும் பத்ரீ நாராயணன் சந்நிதி ஐப்பிசி மாதம் பௌர்ணமியில் மூடிவிட்ட பின்பு அவ்விடத்தில் பெருமாளுக்கு பூஜையில்லாமையால் இந்த பாவிஷ்ய பத்ரி என்னுமிடத்தில் தினமும் பெருமாளுக்கு, பெரிய சந்நிதி திறக்கும்வரையில், பூஜை நடைபெறும். ஆகையால் இப்பெயர். சமஸ்கிருதத்தில் பாவிஷ்ய என்றால் முன்வரும் காலம் அல்லது எதிர்காலம். இவ்விடம் செல்வது பிரயாசையாகும். நடந்தே செல்லவேண்டும். ஜோஷிமடத்திலிருந்து அதிக சார்ஜுக்கு டோலிகள் கிடைக்கும். சமையல் சாமான்கள் கையில் கொண்டுபோகவேண்டும். சாதாரணமாய் யாத்ரீகர்கள் வழிமேலில்லாத மற்ற பத்ரி சந்நிதிகளைச் சேவிக்கிறதில்லை. யோக பத்ரி போகும் வழியிலிருப்பதால் இதை சேவித்து பிஷால் பத்ரியைச் சேவித்துத் திரும்பிவிடுகிறார்கள். ராமநகரம் மார்க்கமாய்ச் செல்லும் பிரயாணிகள் மாத்திரம் அதிபத்ரி என்னும் ஸ்தலம் மார்க்கத்திலிருப்பதால் சேவை

செய்து செல்லுகிறார்கள். இந்த பத்திரிகாஸ்ரமத்தின் சந்நிதி அற்பிசி மாதம் மூடும்பொழுது பெருமாளுக்கு எண்ணை காப்பு செய்து, கம்பளி மூடி அலங்காரங்களை யெல்லாம் கழற்றி புஷ்ப பூஜை செய்து திருவிளக்கேற்றி அவ்வாறே விளக்கை அணைக்காமல் விட்டுவிட்டு திருக்கதவைச் சாத்தி பூட்டிற்கு சீல் போட்டுவிடப்படுகிறது. பின்பும் சித்திரை மாதம்பௌர்ணமிக்குப்பின்ஸீட்டுசீலைப்பரிக்ஷைசெய்துபூட்டைத்திறக்கிறார்கள். அப்பொழுது ஒவ்வொரு சமயங்களில் அந்த விளக்கின் ஜோதி வெகு மங்கலாய் எரிந்துகொண்டிருந்தாலுமிருக்கும் அல்லது முற்றிலும் அணைந்துபோயிருந்தாலுமிருக்கும். கண்டிப்பாய் ஜோதி எரிந்துகொண்டேயிருக்குமென்று சொல்லமுடியாது. அவ்விடம் சந்நிதி திறக்கும்பொழுது மூடின தினம் பூஜை செய்த புஷ்பமும், எரிந்துகொண்டிருககும் திருவிளக்கும் அப்படியே இருக்கின்றனவென்றும், அல்லது திருக்கதவு மூடின தினம் முதல் கொண்டு திறக்கும்வரையிலும் தேவர்கள் தினமும் சந்நிதிக்குள் புஷ்ப பூஜைசெய்து திருவிளக்கேற்றி போகிறார்களென்றும் சாமானியமாய் தென்னாட்டார் ஒரு நம்பிக்கைக் கொண்டிருக்கிறார்கள். பின் நம்பிக்கையைப்பற்றி அடியேன் ஒன்றும் சொல்லுகிறதில்லை. ஆனால் குளிர் தேசத்தில் புஷ்பங்கள் எளிதில் வாடிப்போகாது. உஷ்ண தேசத்தில் பூஜை செய்த 1, 2 மணிக்குள் புஷ்பங்கள் வாடிக் காய்ந்துவிடும். இந்தச் சந்நிதி பனிக்கட்டிகளால் மூடப்படுவதினால் மூடும்நாள் பூஜைசெய்த புஷ்பங்கள் சில சமயங்களில் திறக்கும்வரை வாடுகிறதில்லை. திருவிளக்குக்கும் ஒரு ஆள்காட்டி விரலைவிட பருமனான வத்தியை பொடி செய்த எள்ளுடன் கலந்துத் திரியாக்கி, நெய் குளிர்

ச்சியினுல் கட்டியாகாமலிருக்கும்படிக்குச் சரிபாகம் எள்நெய் (எண்ணெய்) சேர்த்துக் கலந்து திரியையும் அதில் தோய்த்து, புட்டி விளக்கைப்போலிருக்கும் ஒரு குடத்தில் வெடி திரியையும் எண்ணெயையும் கலந்துத் திருவிளக்கேற்றி விடுகிறார்கள். அது பனிக்கட்டிகள் மூடிப்போன அறையி லிருப்பதால் பிராணவாய்வு ஜாஸ்தியாயில்லாத சமயத்தில் புகைகட்டி மங்கலாக எரிகின்றது. ஒரு வருஷத்தில் கதவைத் திறக்கும்பொழுது இப்படி எரிவது பார்க்கலாம். சில வருஷங்களில் பூர்த்தியாய் திருவிளக்கு ஆரிப்போயிருக்கும்—அன்னுட்டார் இந்த விஷயங்களை முக்கியமாய் கவனிக்கிறதில்லே. இந்தச்சின்னங்களை வெகு விசேஷமாயும் ஆச்சர்யமாயும் அவர்களால் கொண்டாடப்பட்டால் இந்த ஜோதி தரிசனத்தை யாத்ரீகர் பெரும்பாலோர்க்காகிலும் காட்டி பின் பூஜைக்கிரமங்கள் நடத்துவார்கள். ஆனுல் அவர்கள் அப்படிச் செய்வதில்லே அடியேன் இவ்விஷயத்தைத் தென்னுட்டாரால் கேள்விப்பட்டு திருக்கதவு திறக்கும்பொழுது சந்நதிக்குள் 11-5-32வ சென்றிருந்தேன். கேள்விப்பட்டமாதிரி ஜோதி தரிசனம் கிடைக்கவில்லே. சந்நதி சம்பந்தப்பட்ட பூஜை சிப்பந்திகளைக் கேட்டபொழுது அவர்கள் அம்மாதிரி ஒன்றும் கிடையாது என்று கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டார்கள். அவ்விடம் திருக்கதவைத் திறக்கும்பொழுது சுமார் 30, 40 கௌரவமுள்ள பொருப்பான யாத்ரீகர்களைவிட ஆயிரக்கணக்காக வந்திருக்கும் அநேக சாதுக்கள், யாத்ரீகர்கள் முதலானவர்களில் யாரையும் அதிகமாய்ச் சந்நதிக்குள் விடுகிறதில்லே. இவர்களில் கவர்ன்மென்ட் தரப்பில் ஓர் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர்தான் பெரியவர். அவரும் கோயில் பூஜாரியான

ராவல் என்பவருந்தான், பூட்டின் சீலே பரிசோதித்து சீலே உடைத்து பூட்டைத் திறக்கிறார்கள். கதவைத் திறந்த வுடன் ஆயிரக்கணக்கான யாத்ரீகர்கள் உள்ளே நுழைய எத்தனப்படுகிறார்கள். ஆனால் கோயில் சிப்பந்திகள் கதவை மூடிக்கொண்டு கொஞ்சம் மரியாதையாகக் காண்கிற யாத்ரீகர்களை மாத்திரம் விடுகிறார்கள். அடியேன் போலீஸ் சப் இன்ஸ்பெக்டரையும் அப்பொழுதே ஜோதியின் விஷய மாய்க் கேட்டதில் அவரும் மற்றவர்களைப்போலவே விடை கொடுத்தார். இதுதான் ஜோதி தரிசனத்தின் சரித்திரம். அடியேன் ஜோதி தரிசனார்த்தத்தின்பொருட்டு சென்றி ருந்தபொழுது பத்ரியில் நடந்த விஷயம் இது உண்மை.

## பிரம்ம கபாலம்

இது சந்நிதிக்கு வடவண்டை 2 பர்லாங்குக்குள் அலக் நந்தா ஆற்றின் வலபுரத்திலேயிருக்கும் ஒரு ரொட்டியின் வடிவமாயிருக்கும் பெரிய-கற்குண்டு. இதின்பேரில் ஒரு தகடு (Zinc) மண்டபம் கட்டியிருக்கிறார்கள். இந்தப் பாறையின் பெயரே பிரம்ம கபால மெனப்படும்—யாத்ரீ கர்களுக்கு அவ்விடமிருக்கும் பண்டாக்களெனப்படும் பிராமண புரோகிதர்கள் இப்பாறையின்பேரில் பிதுர் தர்ப் பணம் செய்தால் பிதுர்களுக்கு மோக்ஷமுண்டு யென்னும் ஆசை நம்பிக்கைகளைச் சொல்லி, சந்நதியில் பருக்க சிகப்பு அரிசியில் செய்திருக்கும் தளிகையை விலைக்குக் கொண்டுவரும்படி செய்து பிதுர்த்தர்ப்பணம் பிண்டம் கொடுக்கிறார்கள். சந்நதியில் பிண்டம் கொடுக்கப்படும் ஒரு கைப்பிடி தளிகையின் விலை ரூ. 1-0-0. ஷை பண்டாக்கள் பிண்டம் கொடுக்கும் யாத்ரிகளை உட்காரவைத்து மந்திரக்

கிரமங்கள் செய்து பின்பு அவனை சத்தியமாய் அவனுக்கு எவ்வளவு சொத்துக்கள் உண்டென்று சொல்லும்படி கேட்டு அதில் தனக்கு (பண்டாவுக்கு) எவ்வளவு பாகம் கொடுப்பானென்றும் பலவாறு ஹிம்சித்துக்கேட்டு சரியான வரும்படி ஷை பண்டா தனக்கு செய்துக்கொள்ளுகிறான். பாபம்! ஒன்றுமறியாத யாத்ரீகர்கள் இம்மாதிரியும் மதக் கோட்பாடான நம்பிக்கையின்பேரில் மோசம் போய்விடுகிறார்கள். யாத்ரீகர்களே! ஜாக்கிரதையாயிருங்கள் பிரம்ம கபாலத்தில்.

செல்லும் மார்க்கம்:—(E. I. Ry.) ஈஸ்டு இந்தியன் ரயில்வே மார்க்கமாய் ஹரித்வாரம் என்னும் ஸ்டேஷனில் இறங்கவேண்டும். இந்த ஹரித்வாரம் என்னும் ஸ்டேஷன் டெல்லி என்னும் நகரத்திற்கு வடக்கேயுள்ளது.

1. ஹரித்வாரம்:-இது ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்த ஸ்தலமன்று. புராண ஸ்தலம். இவ்விடம் விஷ்ணு பாதமென்னுமிடத்தை "ஹரிகி பைரி" (Hari-ki-pairhi) என்று வட நாட்டார் வழங்குகிறார்கள். இது கங்கை நதியின் தென்கரைப்பக்கத்திலுள்ளது. இந்த இடத்தில் ஸ்நானம் செய்தால் புண்ணியமெனப்படும். கங்கையின் இரிகேஷன் வர்க்ஸ் (Irrigation Works of Ganges) இந்த ஸ்தலத்தில்தான் ஆரம்பமாகிறது. இவ்விடம் கங்கை வெகு சிறிய அகலமுள்ள நதியாயிருக்கிறபடியால் நதிக்கு அணையைக் கட்டி ஒரு பெரிய வாய்க்கால் பயிர் சாகுவளிக்காக வெட்டப்பட்டு நதியின் வலப்புறமாய் ஓடுகிறது. இந்த வாய்க்கால் கங்கை நதியின் தென்பாகமாயே ஓடுகிறது. இந்த வாய்க்காலுக்குத் தென்பாகத்தில் வெகு விஸ்தீர்ண

மான கற்களால் பரவப்பட்ட காலி இடமிருக்கிறது. இதில் தான் சாயந்திர காலங்களில் தின்பண்டம் கடைகளும், சதா யாத்ரிகர்கள் சேர, கதா காலக்ஷேபங்களும் பிரசங்கங்களும் முதலான மனோஹரமான விஷய வேடிக்கைகள் நடைபெறுகின்றன. இந்தக் காலி நிவேசனத்தின் தென்னண்டைப் பக்கத்தில் அனேக கோயில்களும், மடங்களும், சாதுக்களின் ஆச்ரமங்களும் கட்டியிருக்கிறார்கள். வெகு பல தேசத்தாருடைய மடங்களும், விஸ்ராந்தி சாலைகளுமுண்டு. இந்த ஸ்தலத்திற்கு 14 மைல் வடக்கிலுள்ள இடத்தின் பெயர் ரிஹிகேஸ். இதை ரிஷிகேஸ் என்றும் சாமானியமாய்ச் சொல்லுகிறார்கள்.

2. ரிஹிகேஸ் அல்லது ரிஷிகேஸ்—கங்கை நதி ஹிமயகிரி பர்வதத்திலிருந்து மைதான சமபூமி நாடாகிய இவ்விடத்திலிறங்குகிறது. சுத்த ஜலமுள்ள வெகு சிறிய நதி. ஜலம் கண்ணாடியைப்போலிருக்கும். இவ்விடத்தில் அநேக தேசத்தாருடைய தர்மசாலைகளுண்டு. அவைகளில் சதாவர்த்தி நடக்கிறது. இது சிறிய கிராமம். நூற்றுக் கணக்கான சாதுக்கள் சதா வசித்துக்கொண்டிருக்கிறார்கள். பக்கத்தில் கங்கைக் கரையின்மீது சுமார் 1½ மைல் தூரத்திலுள்ள சுவர்க்கத்வார் (Swarghadwar) என்னுமிடத்தில் (இது லக்ஷ்மன் ஜூலா போகும் வழியிலுள்ளது.) அநேக சாதுக்கள் குன்றுகளின் குகைகளிலும், சிறிய குடிசைகளிலும் வசிக்கிறார்கள். இந்த சாதுக்களுக்கும் மற்ற ஏழையோருக்கும் எப்பொழுதும் பசியில்லாமலிருக்கும்படி சதாவர்த்தி இவ்விடத்தில் நடக்கிறது. கோதுமைமாவும் பருப்பும் கொடுக்கிறார்கள். ரொட்டியும் சமைத்த பருப்பும் வேண்டுமானாலும் கிடைக்கும்.

ஹரித்வாரத்திலிருந்து ரிஷிகேஸ் வடக்கே 14 மைல் தூரம். ரெயில் வண்டியும், மோட்டார் பஸ்களும், குதிரை டாங்காக்களும், யாத்திரைகாலங்களில் டோலிகளும் கிடைக்கும். ரிஷிகேஸத்திலிருந்து பத்ரீ நாராயணன் ஹிமயகிரி மலைமேல் 169 மைல் தூரத்திலிருக்கிறது. வண்டிப்பாதையல்ல. கால்பாதைதான். ஆனால் போக வர 4 கூலிகள் சுமக்கும் டோலிகள் (Jampan) கிடைக்கும். ரிஷிகேஸிலிருந்து கேதார் நாத் தரிசனம் செய்துகொண்டு பத்ரீ நாராயணன்போய்ப்பின்பும் ரிஷிகேஸ்திரும்பிவர பிரயாணி ஒன்றுக்கு ரூ.120லிருந்து ரூ.150 டோலி சார்ஜு கொடுக்க வேண்டும். மற்றும் இந்த டோலிஆட்கள் வழியில் பிரயாணிகளை வெகு இம்சைசெய்து தங்கள் தினம் சாப்பாட்டிற்கு, பேசின சார்ஜைவிட, அதிகமான பணம் பறித்து விடுகிறார்கள் ஜாக்கிரதை.

ஒரு குடும்பத்தார்கள் ஒன்றுக்கு மேல்பட்ட டோலிகளை ஏற்படுத்தினால் இந்த கூலியாட்களுக்கு அவர்கள் கேட்கும் ஜாஸ்தி பணம் கொடாவிட்டால் இவர்கள் டோலிகளை தூரம் தூரமாய் வெவ்வேறாகப் பிரித்துவிட்டு ஒன்றுக்கொன்று சேராமல் போவார்கள். வெகு துஷ்டர்கள், ஆனால் திருடர்களல்ல. ஆகையால்தான் இந்த டோலி ஆட்களையும், கூலியாட்களையும் டெஹரி மஹாராஜாவின் சர்க்காரார் தம் எல்லையாகிய முனிகிரேடி (Muni-ki-reti) என்னும் ஊரிலிருந்து—(Workmen's Breach of Contract Act) வர்க்மென்ஸ் பிரீச் ஆப் கான்ட்ராக்ட் ஆக்டின் பிரகாரம் இவர்களின் பெயர் முதலான துவைகளை ரிஜிஸ்டர் செய்துகொண்டு இந்த டோலி கூலியாட்களை பிரயாணிகளுடன் அனுப்பிக்கொடுக்கிறார்கள்

Haridwar—Rihikesh—ஹரித்வாரம்—ரிஹிகேஸ் வழியின் விவரம் :—

ஹரித்வாரத்திலிருந்து ரிஹிகேஸ் என்கிற ரிஷிகேஸ்-14 மைல்கள்.

ரிஷிகேசத்தில் அனேக தர்மசாலைகளுண்டு. உத்தர காண்டம் பாபா காலா கம்லிவாலே என்னும் சாது வாசஸ்தானமாயிருந்த மடம் உண்டு. இந்த மடத்தில் ஏழையாயிருக்கும் யாத்ரீகர்களுக்கும், அனேக சாதுக்களுக்கும் மலைமேல் போய் வரும்பொழுது போர்த்திக்கொள்ள கம்பளியும், சாப்பாட்டிற்கு சதாவர்த்தி சிட்டுகளும் கொடுக்கிறார்கள். மலையின்மேல் அனேக தங்குமிடங்களில் ஷெ சாதுவின் சதாவர்த்தி மடங்களுண்டு. சிட்டைக் காண்பித்தால் சாப்பாட்டிற்கு கோதுமை மாவு, அரிசி, பருப்பு வாங்குவதற்காக சொற்ப திரவியமும் கொடுக்கிறார்கள்.

ரிஹிகேசத்திலிருந்து—முனிகிரேடி (Rihikesh—Muni-ki-reti) 1½ மைல். இவ்விடத்தில் மூட்டை சுமப்பதற்குக் கூலியாட்களும் டோலிகளும் கிடைக்கின்றன டெஹரி (Tehri) மஹாராஜாவின் சர்க்காரார் இவ்விடம் கூலி எஜென்ஸி ஆபீஸ் வைத்துக்கொண்டு கூலிகளிடம் அக்ரிமென்டு (Agreement) வாங்கிக்கொண்டு அவர்களை அனுப்புகிறார்கள். சாதாரணமாய் 1 மணுவுள்ள பாரத்தைச் சுமக்க ஒரு கூலியாளுக்கு பத்ரி போய்வர ரூ. 25க்குக் குறையாமல் கொடுக்கவேண்டும். யாத்ரீகர் வேறுவேறாகக் கூலிகளை ஏற்பாடு செய்துக்கொள்ளவேண்டும். ஒரு பார்ட்டியான (Party) 4-5 யாத்ரீகர்கள்கூடிச் சேர்ந்து பிரயாணம் செய்யும் பக்ஷத்தில் பொதுவாய்ச் சாமான்கள் 2-3 கூலி

யாட்கள் வசத்திலிருந்தாலும் பாதகமில்லை. கூலிகள் கூலி பணத்திற்கு ஆசைப்பட்டு ஒருவரையொருவர் அறியாது 2-3 பிரயாணிகளின் மூட்டைகளை ஒரு கூலியே, ஒவ்வொரு வரிடமும் கூலி பேசிக்கொண்டு, எடுத்து வருவது வழக்கம். அப்படிச் செய்வதினால் ஒரு பிரயாணி ஒரு தினத்திற்கு 10 மைல் செல்லுவார், மற்றவர்கள் அதிகம் குறைவு தூரம் செல்லுவார்கள். கூலியாள் ஒரு பிரயாணி ஜதையில் வந்தால் மற்றவர்களுக்கு தங்கள் சாமான் கிடையாத கஷ்டம் வழியில் நேரிடும். ஆகையால் கூடுமானவரையில் வெவ்வேறு கூலிகளை அமர்த்தவேண்டும். மேலும் பிரயாணிகள் கூலிகளை குறிப்பிட்ட மைலில் இருக்கும்படிச் சொன்னால் கூலி தப்பாமல் அவ்விடம் காத்துக்கொண் டிருப்பான். திருட்டு பயம் வழியில் கிடையாது. மலை வழி முழுவதும் திருடர், காட்டு மிருகங்கள், பாம்பு, பூச்சிகள் என்ற பயம் ஒன்றுமே கிடையாது. வழி வெகு சுலபம். சில சிலவிடங்களில் ஏற்றம். வழியில் எவ்விடமும் குடிக்க ஊற்று ஜலம் கிடைக்கும். சிறிது சிறிது தூரங்களில் கடைகளுண்டு. சாப்பாட்டு சாமான்கள், பால், மிட்டாய் தினுசுகள் யாவும் தாராளமாயச் சுலப விலைக்குக் கிடைக்கும். பழவர்க்கங்கள் ஒன்றுமே வழியிலும் பத்ரியிலும் கிடையாது. ஹரித்வாரம் விட்டபின்பு மலை இறங்கும்வரை எவ்வித பழமும் கிடைக்காது. ஒவ்வொரு கடைக்காரனும் தன் கடையின் பக்கத்தில் குடிசைகளைக் கட்டிவைத்துக்கொண்டிருக்கிறான். பிரயாணிகள் அந்த இடம் சேர்ந்ததும் (அவ்விடங்களுக்கெல்லாம் ஹிந்தி பாஷையில் "சட்டி" என்று பெயர்) கடைக்காரன் தங்குவதற்கு இடம் கொடுக்கிறான். சமையல் செய்ய சாமக்கிரியைகள்

அவனிடம் வாங்கிக்கொண்டால் சமையல் செய்ய பாத்திரங் களும், அடுப்பும், கீழே பரப்பிக்கொள்ள பாய், போற்றிக் கொள்ள கம்பளிகளும் கொடுக்கிறான். இரவில் தங்கினாலும் இந்த சௌகரியங்களை அமைத்துக் கொடுக்கிறான். யாத்ரீ கர்கள் அந்த இடத்தைவிட்டுச் சென்றதும் உடனே சுத்தி செய்து மற்ற யாத்ரீகர்களை எதிர்பார்க்கிறான்—யாத்ரீகர் களை இந்த கடைக்காரர்கள் வெகு மரியாதையாயும், ஜாக்கி ரதையாயும் கவனிக்கிறார்கள்.—பாதையோ சில சில விடங் களில் 3 அல்லது 4 அடி அகலமிருக்கும்—ஒரு பக்கம் மலை மற்றொரு பக்கம் சுமார் 300—500 அடி பாதாளத்திலுள்ள அலக்நந்தா நதி ஓடுகிறது. பிரயாணிகள் ஜாக்கிரதையாய் வழியைப் பார்த்து நடக்கவேண்டும். அஜாக்கிரதையாய் நடந்தால் பாதாளத்திலுள்ள நதியில் விழுந்துவிடுவார்கள். மற்றும் மேலே வர முடியாது. அப்படியேதான் மடிய வேண்டும்.

நடக்கும் பாதைக்கும் பாதாளத்தில் ஓடும் அலக்நந்தா என்னும் கங்கைக்கும் சுமார் 500 அடிக்குக் குறையாத உயரம் உண்டு. "சட்டி" யென்றால் தங்குமிடம். அவ்வி டம் கடைகளும் ஜல வசதிகளுமுண்டு.

4. முனிகிரேடியிலிருந்து லக்ஷ்மன் ஜூலா—(Muni-ki-reti to Lakshman Joola) 1¼ மைல். சாதாரணமாய் ஹரித்வாரம் போகிறவர்கள் இதுவரையிலும் வந்து இவ்விட முள்ள ஜூலா என்னும் கால்தூண்களில்லாதபாலத்தைப் (Suspension Bridge) பார்த்துவிட்டு பத்ரி போகும் மலை வழியை தரிசித்து பின் திரும்பிவிடுகிறார்கள். பத்ரி வழி யிலுள்ள இதைப்போன்ற சுமார் 20க்கு மேல்பட்ட பாலங் களுக்கெல்லாம் இதுவே பெரிய பாலம்.

5. லக்ஷ்மன் ஜூலாவிலிருந்து கருட சட்டி அல்லது கரூர சட்டி (Lakshman Joola to Garura Chatti) 2 மைல். இது பார்க்க வெகு மனோஹரமான இடம்.

கரூர சட்டியிலிருந்து பூல்வாரி (Garura Chatti to Phoolwari) 2 மைல்.

6 பூல்வாரியிலிருந்து குலார்சட்டி (Phoolwari to Gular Chatti) 2 மைல். இவ்விடம் ரஸ்தா சுலபமாயும் நேராயுமிருக்கிறது. நடக்க ஆனந்தமாயிருக்கும்.

7. குலார் சட்டியிலிருந்து நயிமோஹன் (Gular Chatti to Nayee Mohan) 3 மைல். இதுவரையிலும் பாதை சுலபம். முன்னுக்கு 4 மைல் ஏற்றமாயிருக்கும்.

8. நயிமோஹனிலிருந்து—சோடி (சிறிய) பிஜனி (Nayee Mohan to Choti Bijani) 2 மைல். இதன் மத்தியில் குடிக்கும் ஜலவசதி குறைவு.

சோடி (சிறிய) பிஜனியிலிருந்து—படி (பெறிய) பிஜனி (Choti Bijani to Barhi Bijani) 1 மைல். இவ்விடம் ஒரு முசாபரி பங்களாவிருக்கிறது.

9. படி (பெறிய) பிஜனி—குண்ட் சட்டி (Barhi Bijani to Kund Chatti) 3 மைல். இவ்விடம் நல்ல பால் கிடைக்கும்.

10. குண்ட் சட்டி—பண்டார்பேல் (Kund Chatti to Bandar Bhel) 3 மைல். இவ்விடமிருந்து வழி இறக்கமாய் 3 மைல் போகிறது.

11. பண்டார்பேல்—மஹாதேவ் சட்டி (Bandarbhel to Mahadev) 3 மைல். இவ்விடமிருந்து வழி சமமாயிருக்கிறது. கங்காநதியிலிறங்கி ஜலம் சாப்பிடவும் ஸ்நானம் செய்யவும் அனுகூலமாயிருக்கிறது. இவ்விடமிருந்து 1 மைல் தூரத்தில் முசாபரி பங்களாவிருக்கிறது. ராம்பட்டி சட்டி யென்னும் ஓர் சட்டியுமிருக்கிறது.

12. மஹாதேவிலிருந்து சேமல் சட்டி (Mahadev to Semul Chatti) 4 மைல். வழி ஏற்றமாயிருக்கும்.

13. சேமல் சட்டி—கண்ட்சட்டி (Semul Chatti to Kand Chatti) 3 மைல் வழி நேராயும் சமமாயுமுண்டு. இவ்விடத்தில் ஆஸ்பத்திரியுமிருக்கிறது.

14. கண்ட் சட்டி—பியாஸ்காட் (Kand Chatti to Byasghat) 4 மைல். வழி யேற்றம். இவ்விடம் ஒரு தபாலாபீஸும் முசாபரி பங்களாவுமுண்டு. இவ்விடமிருந்து வழி சுமார் 36 மைல் வரைக்கும் ஏற்றமும் இறக்கமுமாயிருக்கிறது.

15. பியாஸ் காட்—உம்ரசு (Byasghat to Umrasu) 5 மைல். இவ்விடம் சில ஜனங்கள் எப்பொழுதும் குடியிருக்கிறார்கள்.

உம்ரசு—ஸோடே சட்டி (Umrasu to Sode Chatti) 3 மைல் ஏற்றமுமிறக்கமும்.

16. ஸோடே சட்டி—தேவப்பிரயாக் (Sode Chatti to Devaprayag) திருக்கண்டங் கடிநகர் அல்லது கண்டமேன்னும் கடிநகர்) 1 மைல். இவ்விடத்தில் அலக்நந்தா என்னும் நதியும், பாகீரதி என்னும் நதியும் சந்திக்கின்றன.

சந்திக்குமிடத்தின் மேல் விஷ்ணு சந்நதியிருக்கிறது. ஆழ்வார் மங்களாசாசனமான சந்நதி. இவ்வடநாட்டிலேயே விவாகம் செய்துக்கொண்டு பழகின தென்னாட்டு பிராமணரின் பூஜை. இது பெரிய கிராமம். பத்ரீநாராயணன் கோயிலில் வேலை செய்யும் பிராமண சிப்பந்திகளும், பண்டாக்களெனப்படும் பிராமண புரோகிதர்களும் இந்த கிராமத்தில் வசிக்கிறார்கள். இவர்கள் இவ்விடமிருந்தே பிரயாணிகளை வசப்படுத்திக்கொண்டு அவர்களைத் தொடர்ந்தே பத்ரி செல்லுகிறார்கள். இவ்விடம் சத்திரங்களும், கடைகளும் உண்டு. அலக்நந்தா கங்கையில் இறங்கி ஸ்நானம் செய்யலாம். சங்கமத்தில் ஸ்நானம் செய்து பிண்டம் விடுகிறார்கள். இந்த ஊர் ஹரித்வாரத்திலிருந்து 58 மைல் தூரத்திலிருக்கின்றது. பிரயாணிகள் மலைமேல் பிரயாணம் செய்யும்பொழுது மலைக்காற்றும் ஜலமும் அவர்களுக்கு பிடிபடாவிட்டால் இவ்வூர் சேருவதற்கு முன்பே அவர்கள் காயலாவடைவார்கள். முக்கியமாய் வயிற்றுக் கடுப்பும், ஜுரமும் காணும். இவ்வூர் சேரும்பொழுது தேக சௌகரியமாயிருந்தால் முன்னுக்கு யாத்திரை போகலாம். மலை ஏறும்பொழுது வழியில் வியாதியாகி இவ்விடம் சேர்ந்த 1 வாரத்திற்குள் அவர்களுக்கு வியாதி சுகப்படாமல் போனால் அநேக பிரயாணிகள் தங்கள் ஊருக்கு இவ்விடமிருந்தே திரும்பிவிடுவார்கள். அப்படித் திரும்புவதே உத்தமம். தேவப்பிரயாகை தப்பி சுகமாய் முன்பு போனால் கண்டிப்பாய் பத்ரி தரிசினம் செய்து திரும்பலாம். இந்த ஊரிலிருந்தே பாகீரதி நதிக்கரையின் வழியாய் யமுனோத்ரி (யமுனை உதிக்குமிடம்) கங்கோத்ரி (கங்கை உதிக்குமிடம்) போகும் பிரயாணிகள் பிரிந்து போவார்கள்.

தேவப்பிரயாகிலிருந்து குலசு சட்டி (Devaprayag to Kulasu Chatti) 5 மைல்.

17. குலசுசட்டி-ராணி பாக் (Kulasu to Rani Bag) 2½ மைல். இவ்விடம் சதா வசிக்கும் ஜனங்களும், வீடுகளுமுண்டு.

18. ராணிபாகிலிருந்து கோல்ட (Rani Bag to Kolta) 1½ மைல். இவ்விடம் முசாபரி பங்களாவிருக்கிறது.

19. கோல்ட—ராம்பூர் (Kolta to Rampur) 2 மைல்.

ராம்பூர்—ஜனக ஆஸ்ரமம் அல்லது ஜினசு (Rampur to Janaka Ashram or Jinasu) 1½ மைல். இவ்விடம் ஜனக சக்ரவர்த்தி தபசு செய்தவிடமென்று சொல்லுகிறார்கள். இவ்விடம் ஜலக்கஷ்டம் அதிகம். இங்கு தங்கும் வசதி கிடையாது. சில குடிசைகளிருக்கின்றன. முன்னுக்கு நேராய் வில்வகேதார் செல்லவேண்டும்.

20. ஜினசிலிருந்து —வில்வகேதார் (Jinasu to Vilva Kedar) 4 மைல். ஒரு சிவன் கோயிலிருக்கிறது.

21. வில்வகேதாரிலிருந்து—ஸ்ரீநகர் (Vilva Kedar to Srinagar) 3 மைல். இந்த ஸ்ரீநகர் என்பது காஷ்மீர் ராஜ்யத்தைச் சேர்ந்ததல்ல. இது யுனைடெட் பிராவின்ஸஸ் (U. P.) என்கிற ஐக்கியமாஹாணத்திலிருக்கும் கார்வால் (Garhwal) ஜில்லாவிலுள்ள ஒரு பெரிய ஊர். ஹிமயகிரியில் பத்ரி வழியின்பேரிலுள்ள எல்லா ஊர்களைவிட இவ்வூர் பெரியது. அனேகதினுசுக்கடைகளும், சத்திரங்களுமுண்டு. பெரிய ஷாப்புக்கடைகளுமுண்டு. பிரயாணிகர்களுக்கு

தேவையானஎல்லாப்பதார்த்தங்களுங்கிடைக்கும். பம்பாய் மதராஸிலுள்ள பெரிய ஷாப்புக்கடைகள்போல் இவ்விடம் எலெக்ட்ரிக் டார்ச்கள், டிரை (Dry) செல்கள், பனியன்கள், கம்பளிகள், கை, கால் மேஜோடுகள், ரப்பர் மிதியடிகள், முன்னுக்கு வேண்டிய சகலவிதமான சாமான்களும் கிடைக்கும். தபால், தந்தி ஆபீஸ்கள் உண்டு.

22. ஸ்ரீநகரிலிருந்து—சுக்ரட (Srinagar to Sukrata) 5 மைல். இந்த பாகத்தின் வழியைக் காலை 10—11 மணிக்குள் நடந்துவிடவேண்டும். இல்லாவிடில் மலைச் சந்தாயிருப்பதால் மத்தியான காலங்களில் செல்லும்பொழுது வெகு சூடாயிருக்கும். கஷ்டமாய்த் தோன்றும்.

23. சுக்ரடவிலிருந்து-பட்டி சேர (Sukrata to Bhatti Sera) 3 மைல். இவ்விடமிருந்து 1 மைல் தூரத்தில் சண்டி கால் (Chanti Khal) என்னுமிடத்தில் ஒரு முசாபரி பங்களாவிருக்கிறது.

24. பட்டிசேராவிலிருந்து—கண்கர (Bhatti Sera to Khankara) 3½ மைல். 1 மைல் நடந்தபின் வழி இறக்கம்

25. கண்கரவிலிருந்து—நார்கோட (Khankara to Narkota) 2½ மைல். வழி ஏற்றமுமிறக்கமும்.

26. நார்கோடவிலிருந்து—குலாப்ராய் (Narkota to Gulab-rai) 3½ மைல். வழி ஏற்றமுமிறக்கமும்.

27. குலாப்ராயிலிருந்து—ருத்ரப்பிரயாக் (Gulab-rai to Rudraprayag) இது ஒரு சிறிய கிராமம். தபால்,

தந்தி ஆபீஸ்களும் உண்டு. கடைகள் சத்திரங்களிருக்கின்றன. இவ்விடம் அலக்நந்தா என்னும் கங்கையும், மந்தாக்னி என்னும் கங்கையும் சங்கமமாகின்றன. இறங்கி ஸ்நான சங்கல்பங்கள் செய்யலாம். ஸ்நான கட்டத்தின்மீது ஒரு சிவன் கோயிலிருக்கிறது. இவ்விடத்திலிருந்து கேதார்நாத் என்னும் சிவஸ்தலம் போகும் யாத்ரீகர்கள் பிரிகிறார்கள். மந்தாக்னி நதியின் கரையின்மேலேயுள்ள வழியில் 54 மைல் தூரம்சென்றால் கேதார்நாத் என்னும் சிவஸ்தலம் சேரலாம். யாத்ரீகர்கள் இம்மார்க்கமாய் கேதார்நாத் போய் தரிசனம் செய்துக்கொண்டு வேறே வழியாய்த் திரும்பி பத்ரி போகும் வழியிலுள்ள சமோலி என்னுமிடத்தில் சேருகிறார்கள். வீர வைஷ்ணவர்களாயுள்ள பஞ்சாப் மற்றும் வங்காள தேசத்துப் பிரயாணிகர்கள் கேதார்நாத் தரிசனம் செய்யாமல் நேராக பத்ரிக்குக் கர்ணபிரயாக் வழியாய்ச் செல்லுகிறார்கள். ருத்ரபிரயாகிலிருந்து பத்ரிக்குப்போகும் வழி சுமார் 46 மைல்கள்வரையிலும் சமமாயிருக்கிறது.

ருத்ரபிரயாகிலிருந்து கர்ணபிரயாக் மார்க்கம்

பத்ரிக்குப் போகும் வழியின் விவரங்கள்.

28. ருத்ரபிரயாகிலிருந்து—சிவநந்தி (Rudraprayag to Shivanandi) 7½ மைல் தூரம். வழியின் மத்தியில் வேறே சட்டிகள் கிடையாது. ஒரே நேராக இந்த 7½ மைலும் நடக்கவேண்டும்.

29. சிவநந்தியினின்றும்—கமேர (Shivanandi to Kamerha) 4½ மைல்.

30. கமேரவிலிருந்து சோடா பீபல் (Kamerha to Chota Peepal) 6 மைல். இங்கே சில வீடுகளிருக்கின்றன.

31. சோடாபீபலிலிருந்து—கர்ணபிரயாக் (Chota Peepal to Karnaprayag) 4 மைல். இந்த ஊரில் தர்ம சத்திரங்களும், தபால், தந்தி ஆபீசுமிருக்கிறது. சுமாராய்ப் பெரிய ஊர். இவ்விடம் அலக்நந்தா கங்கையும், பிண்டார் கங்கை என்னும் நதியும் சங்கமமாகின்றன. கங்கையிலிறங்கி ஸ்னானம் செய்யலாம். ராம்நகர் காத்கூடத்திலிருந்து பத்ரிக்கு வரும் பாதை இவ்விடத்தில் சந்திக்கிறது.

கர்ணபிரயாகிலிருந்து—கலமாகிரி சட்டி (Karnaprayag to Kalamagiri) 2 மைல்.

கலமாகிரி சட்டியிலிருந்து—உம்மத்த சட்டி (Kalamagiri to Ummatha) 2 மைல்.

32 உம்மத சட்டியிலிருந்து ஜெய்கண்டி சட்டி (Ummatha to Jaikandi) 1/2 மைல்.

33. ஜெய்கண்டியிலிருந்து—நங்கசுசட்டி (Jaikandi to Nangasu) 2 மைல்.

34. நங்கசிலிருந்து—சோன்ல சட்டி (Nangasu to Sonla) 3 மைல். இவ்விடம் முசாபரி பங்களாவிருக்கிறது. சில வீடுகளுண்டு.

35. சோன்லவிலிருந்து—நந்தபிரயாக் (Sonla to Nandaprayag) 3 மைல். இவ்விடம் அலக்நந்தா கங்கையில் நந்தாக்கினி என்னும் கங்கை சங்கமமாகிறது. இது

ஏறக்குறைய பெரிய ஊர். சத்திரங்களுண்டு. ஜல வசதியு முண்டு. கங்கையில் இறங்கி ஸ்நானம் செய்யலாம். கடைகளுண்டு. பத்ரியின் போட்டோ படங்கள் இவ்விடம் கடைகளில் விற்கிறார்கள். இவ்விடமிருந்து வேறே ஒரு மார்க்கம் காட்டு மார்க்கமாய் ராம்நகர் காத்கூடம் (கர்ண பிரயாகுக்குப் போகாமல்) பிரிகிறது. ஆனால் இவ்வழியில் போனால் சாப்பாட்டிற்குக் கஷ்டம். வெளி தேசத்து ஜனங்கள் இம்மார்க்கம் செல்லுவதில்லை.

நந்த பிரயாகிலிருந்து—மிட்டன சட்டி (Nandaprayag To Mittana) 3 மைல் ஏற்றம்.

மிட்டனசட்டியிலிருந்து—கோஹேட் சட்டி (Mittana to Kohed) 2 மைல்.

36. கோஹேட் சட்டியிலிருந்து—சமோலி (Kohed to Chamoli) 2 மைல். இது பெரிய ஊர். தபால், தந்தி ஆபீஸ்களுண்டு. தர்மசாலைகளும், மிட்டாய்க் கடைகளு முண்டு. ஒரு தர்ம ஆஸ்பத்திரியிருக்கிறது. கேதார்நாத் போன பிரயாணிகள் யாவரும் இவ்விடம் வந்துதான் பத்ரீ நாராயணன் போகவேண்டும். கங்கையில் இறங்கி ஸ்நானம் செய்யலாம்.

37. சமோலியிலிருந்து—மத (Chamoli to Matha) 2 மைல். இவ்விடம் அழகிய வாழை முதலிய மரங்களடைந்த தோப்புகள் உண்டு. பார்க்க ரமணீயகரமான இடம்.

மதவிலிருந்து—சின்க சட்டி (Matha to Chinka) 2 மைல்.

38 சின்க சட்டியிலிருந்து—ஸியஸய்ன் (Chinka to Siya Sain) 2 மைல். ஹரித்வாரத்திலிருந்து இது 143வது மைல்.

39. ஸியாஸய்னிலிருந்து—ஹட் (Siya Sain to Hat) 1 மைல். இவ்விடமிருந்து 1 மைல் ஏற்றமான வழி.

40. ஹட்லிருந்து--பீபல்கோடி (Hat to Peepal Koti) 2 மைல். இதுவும் ஏற்றமான வழி. இவ்விடம் முசாபரி பங்களாவிருக்கிறது. அனேக வீடுகளும், கடைகளுமுண்டு. சத்திரங்களும், காலி வீடுகளுமுண்டு. பிரயாணிகள் எவ்விடம் வேண்டுமானாலும் தங்கலாம். இந்தக் கடைகளில் ஹிமயகிரி பர்வதத்திலுண்டாகும் மருந்து மூலிகைகளும், கஸ்தூரி, சமரி மிருகங்களின் உணர்ந்த (பதனமான) தோல்களும், கமரி மயிர்களும், கஸ்தூரி சட்டங்களும் வெகுவாய்க் கிடைக்கும். சிலாஜித் என்னும் கல்லிலுண்டாகும் ஓர்வித கருப்பு நிறமான பால் இவ்விடம் கிடைக்கும் இதை நெருப்பினாலும், சூரிய உஷ்ணத்தினாலும், சுத்தி செய்து விற்கிறார்கள். சூரிய உஷ்ணத்தால் சுத்தி செய்ததே உத்தமம். ஆனால் இந்த சிலாஜித்தை வைத்தியர்களாயிருப்பவர்கள் மாத்திரம் வாங்கவேண்டுமேயொழிய சாமானிய யாத்ரீகர்கள் வாங்கக்கூடாது. வியாபாரிகள் நெருப்பில் தயாரானதை சூரிய உஷ்ணத்தினாலாயிற்றென்று ஏமாற்றுவார்கள்.

41. பீபல் கோடியிலிருந்து—கருர கங்கை (Peepal Koti to Garura Ganga) 4 மைல். இவ்விடமிருந்து வழி 6 மைல் வரையிலும் சமமாயிருக்கும்.

கருர கங்கையிலிருந்து—தங்கனி (Garura Ganga to Tangani) 2 மைல் சுமாராய் ஏற்றம்.

42. தங்கனியிலிருந்து—பாதாள கங்கை (Tangani to Patal Ganga) 2 மைல். இறக்கமான வழி. இவ்விடத்தில் வழி அபாயகரமாயிருக்கும். ஏனென்றால் பக்கத்திலுள்ள மலை வருக்ஷாவருக்ஷம் சரிந்து வழியை மூடிக்கொள்ளுகிறது. ஆகையால் சில சமயங்களில் சிறிது சுற்றாய் மலை மீதில் ஏறிப்போகவேண்டும். நடக்கும்பொழுது வழி எப்படியிருக்கிறதென்று விசாரித்து முன் போகவேண்டும்.

43. பாதாள கங்கையிலிருந்து—குலாப்கோடி (Patal Ganga to Gulab Koti) 2 மைல். இவ்விடம் முசாபரி பங்களாவிருக்கிறது.

44. குலாப் கோடியிலிருந்து—ஹிலாங்கு சட்டி அல்லது குமார சட்டி (Gulab Koti to Helong or Kumar Chatti) 2½ மைல். இது சமுத்திர மட்டத்தைவிட 6000 அடிக்கு மேலிருக்கிறது. சில வீடுகளுமுண்டு. தபால் பெட்டியுமிருக்கிறது. கடைகளும் சத்திரங்களுமுண்டு. இவ்விடமிருந்துதான் செங்குத்தான எதிர் மலைமீதேறி கல்பேஷ்வர் நாத் என்னும் ஜடை ரூபமாயுள்ள ஐந்தாவதான கேதாரீஸ்வரரின் சந்நதிக்கும் த்யான் பத்ரி என்னும் சந்நதிக்கும் செல்லவேண்டும். வெகு கடினமான பாதை. சரியான வழியேயில்லை. இந்த இரண்டு ஸ்தலங்களுக்குப் போகும் வழியில்தான் சகர சக்ரவர்த்தி தபஸ் செய்த விடமென்பதாயும், அவருடைய அறுபதினாயிரம் (60,000) புத்திரர்கள் மடிந்தவிடமென்பதாயும், பகீரதன் கங்கையைக் கொண்டு வந்து அவர்களுடைய சாம்பல்களைக் கரைத்து அவர்களை

மோக்ஷத்திற்கு அனுப்பினதாகவும் சொல்லப்படுமிடம் இதுவென்றே அவ்விடமுள்ள ஜனங்கள் ஒரு பெரிய மைதானமான விடத்தைக் காட்டுகிறார்கள். இவ்விடத்தில் உரிகம் என்று பெயருள்ள ஒரு கிராமம் உண்டு. ஊர்வரிஷியின் ஆஸ்ரமம். உரிகம் தாண்டிச் சென்றால் த்யான் பத்ரி என்னும் சந்நிதி தரிசிக்கலாம். அவ்விடமிருந்து 2 மைல் முன் சென்றால் பார்கீ (Bharki) என்னும் ஒரு கிராமமிருக்கிறது. அந்தக்கிராமத்தினின்றும் 1 மைல் தூரம் மலையின் சந்துக்குள் சென்றால் கல்பேஷ்வர் நாத் என்னும் ஈஸ்வரனின் முடி (ஜடை) மாத்திரமுள்ள கோயில் ஒரு மலையின் குகையிலிருக்கிறது. இந்தக் குகையின் பக்கத்தில் மலைமேலிருந்து பனிக்கட்டிகள் கரைந்துவிழும் ஒரு பெரிய ஜல வீழ்ச்சியிருக்கிறது. அந்த ஜலம் ஓடுகிறதைத் தாண்டியே கோயிலுக்குப் போகவேண்டும். ஜலம் வெகுவும் குளிர்ச்சி. கையால் தொட்டமாத்திரத்தில் கையில் குளிர்ச்சியாலெரிச்சலுண்டாகும். இவ்விடத்தில் தான் ஈஸ்வரன் கங்கையைத் தன் ஜடாமுடியில் பெற்று பகீரதனுக்குக் கொடுத்தாரென்று அவ்விடமுள்ள ஜனங்கள் நம்பிக்கைக் கொண்டிருக்கிறார்கள். அடியேன் அந்த ஸ்தலங்களுக்குப் போய்விட்டு தரிசனம் செய்து வரும் பொழுது வெகு கஷ்டப்பட்டு ஹிலாங்குசட்டி சேர்ந்தேன். திரும்பி வரும்பொழுது சற்று கால் அடி தப்பினால் தலைகீழாய் நதியில் விழவேண்டும். ஆகையால் யாத்ரீகர்கள் அங்கு செல்வது உசிதமல்ல.

ஹிலாங் அல்லது குமார சட்டியிலிருந்து—கனோடி சட்டி (Helong or Kumara Chatti to Kanoti Chatti)

2½ மைல். இதற்குக்கீழ் அனிமாதா பத்ரி என்ற சந்நிதியிருக்கிறது.

கனோடி சட்டியிலிருந்து—ஜட்குல்ல சட்டி (Kanoti Chatti to Jadkulla Chatti) 1 மைல்.
ஜட்குல்ல சட்டியிலிருந்து--சிங்தார் சட்டி (Jadkulla Chatti to Singdar Chatti) 2 மைல்.

45. சிங்தார் சட்டியிலிருந்து—ஜ்யோதிர்மத அல்லது ஜோஷிமடம் (Singdar Chatti to Jyothir—Matha or Joshi Mutt) 1 மைல். இக்கஸ்தலம் பத்ரிக்கு 19வது மைலிலிருக்கிறது. இவ்விடம்தான் ஆதி சங்கரரின் வடதிசை மடமிருக்கிறது. இம்மடத்தின் அதிபதிதான் பத்ரீ நாராயணன் கோயிலில் பூஜை செய்யும் "ராவல்" என்றழைக்கப்படும் ஸ்மார்த்த மலையாள தேசத்து நம்பூதிரி பிராமணர். இம்மடத்தின் ஓர் அறையில் ஆதி சங்கரர் வைத்துக்கொண்டு பூஜை செய்துக்கொண்டிருந்த நரசிம்ம மூர்த்தி யென்னும் சாலக்கிராமம் இப்பொழுதும் பூஜையிலிருக்கிறது. யாத்ரீகர்கள் அதைப் பார்த்து தரிசனஞ் செய்கிறார்கள். இது பெரிய ஊர். தபால் தந்தி ஆபீசும், தர்ம வைத்தியசாலையும், கடைகளும், சத்திரங்களுமுண்டு. பனிக் காலத்தில் பத்ரீ நாராயணன் கோயில் மூடின பின்பு திறக்கும்வரையிலும் ராவல் என்னும் பூஜாரி தன் சிப்பந்திகள் சகிதமாய் இவ்விடத்திலிருக்கும் சங்கர மடத்தில் வசிக்கிறார். மற்றைய கிராமத்தார்களும் இவ்விடமே வந்துவிடுகிறார்கள். இவ்விடமிருந்து வட கிழக்காயுள்ள மானஸஸரோவரம் அல்லது கைலாஸ் என்னுமிடத்திற்கு நிதிபாஸ் (Nitipass) மூலியமாய் 20—30 நாட்கள் பிரயா

லாம் செய்யவேண்டும். கையில் சாப்பாட்டு சாமான்களும் கம்பளி உடுப்புகளும் கொண்டுபோவதுடன் ஒருவராய்ப் பிரயாணம் செய்யக்கூடாது. 8—10 ஜனங்கள் கூட்டத்துடன் கையில் துப்பாக்கியுடன் சென்றால்த்தான் பயமின்றி சேரலாம். மற்றும் 8 மைல் தூரத்தில் வட கிழக்கே தபோவன மென்கிற விடத்திலிருக்கும் பாவிஷ்ய பத்ரி என்னும் ஸ்தலத்திற்குப் போக இவ்விடமிருந்தே வழி பிரிகிறது.

46. ஜோஷிமடத்திலிருந்து—விஷ்ணுபிரயாக் (Joshi Mutt to Vishnuprayag) 2 மைல். இந்த 2 மைலும் இறக்கமான பாதை. இவ்விடம் அலக்நந்தா என்னும் கங்கையில் விஷ்ணு கங்கை யென்னும் நதி சங்கமமாகிறது. இறங்கி ஸ்நானம் செய்ய படிக்கட்டுகளிருக்கின்றன.

விஷ்ணுபிரயாகிலிருந்து—பல்தோத சட்டி (Vishnuprayag to Baldoda Chatti) ¾ மைல்.

47. பல்தோத சட்டியிலிருந்து-காட் சட்டி (Baldoda Chatti to Ghat Chatti) 2½ மைல். சுமாரான வழி.

48. காட் சட்டியிலிருந்து–பாண்டுகேஷ்வர் (Ghat Chatti to Pandukeswar) 2½ மைல். இவ்விடம் வீடுகளுண்டு. கங்கையிலிறங்கி ஸ்நானம் செய்யலாம். கடைகளும், சத்திரங்களுமுண்டு. யோக பத்ரிசந்நதியிருக்கிறது. ஒரு முசாபரி பங்களாவுமிருக்கிறது.

பாண்டுகேஷ்வரிலிருந்து—விநாயக சட்டி Pandukeshwar to Vinaik Chatti) 2 மைல். சுமாரான வழி.

49. விநாயக சட்டியிலிருந்து—லம்பாகர்ஹ (Vinaik Chatti to Lambagarha) 1 மைல். சமமான வழி. இவ்விடம் தங்க இரண்டே கட்டிடங்களுண்டு. கடையுமிருக்கிறது.

50. லம்பாகர்ஹவிலிருந்து-ஹனுமான்சட்டி (Lambagarha to Hanuman Chatti) 3¾ மைல். இவ்விடமிருந்து பத்ரீநாராயணன் 4¾ மைல் தூரம். இதுவேதான் கடைசி சட்டி. முன்னுக்கு சட்டிகள் கிடையாது. வழி முழுதும் ஏற்றம்தான். இறக்கமே கிடையாது. வழியும் சரியான படியிருக்காது. சில சில விடங்களில் மலைகள் கற்பாறைகளாயிருமையால் மலையின் மண் சறிந்து வழியை மூடிவிடுகின்றன (Land Slips). ஆகையால் வழியை விசாரித்து முன்னுக்குப் போகவேண்டும். சித்திரை, வைகாசி மாத காலங்களில்தான் இவ்விடம் பசுவின் பால் கிடைக்கும். பத்ரியில் இம்மாதங்களுக்கு முன் பால் கிடைக்காது. ஆகையால் பால் தேவையானவர்கள் கண்டிப்பாய் டின் பால் கொண்டுபோகவேண்டும். வைகாசியில் நிலத்திலுள்ள பனிக்கட்டிகள் கரைந்துபோய் புல் முளையும்போது அவ்வூரார் எருமை, பசுக்களை பத்ரிக்குக் கொண்டுவந்து பால் கறக்கிறார்கள். அப்பொழுதுதான் பால் கிடைக்கும்.

51. ஹனுமான் சட்டியிலிருந்து-பூரி பத்ரிநாத் அல்லது பிஷால் பத்ரி அல்லது பத்ரீ நாராயணன் (Hauman Chatti to Puri Badrinath) 4¾ மைல். இதுவே யாத்ரீகர்கள் கஷ்டப்பட்டு யாத்திரை செய்து சேரவேண்டிய ஸ்தலம்.

யாத்ரீகர்கள் முதலில் ஹரித்வாரத்திலிருந்து புறப்படும்பொழுது கீழ் கண்ட சாமான்களைக் கொண்டுபோவது



பத்ரிகாஸ்ரமமென்னும் பத்ரீ நாராயணன்—ஊரின் காட்சி

(General View of Badrinath Village)

ஸ்ரீ பத்ரீநாராயணன் சந்நதி



ஹிமயகிரி பர்வதத்தின்மேல் நடந்து செல்லும் பத்ரி யாத்ரீகர்கள்.

( Scene of Badri Pilgrims walking up the HIMALAYAS )

அநுகூலம். கம்பளி உடுப்புகள், ஹரிகேன் லாந்தர் (Hurricane Lantern), கை பேட்டரி (Torch), படுப்பதற்கு இரண்டு கம்பளிகள், ரப்பர் தலையணை வாங்கிக்கொண்டால் உத்தமம். கண்டிப்பாய் கால் மேஜோடும் ரப்பர் பூட்சும் (Rubber Soled Canvas Shoes) போட்டுக் கொள்ளவேண்டும். பாரமான தோல் பூட்சுகள் போட்டுக் கொண்டால் காலில் கொப்பளங்களுண்டாகும். இரண்டு ஜதை ரப்பர் கேன்வஸ் ஷூக்கள் தேவை. செருப்பு போட்டுக்கொண்டால் கஷ்டம். பாதை முழுதும் சில சில விடங்களில் வெகு சிறிய கற்கள் இருக்கின்றன. இவை யெல்லாம் சில சமயங்களில் செருப்புக்குள் சென்றால் குத்தும். செருப்பில்லாமல் நடந்தாலும் கற்களில் நடப்பது கஷ்டம். எல்லாம் மலைப்பாதை. கண்டிப்பாய் ஆண், பெண் காலில் மேஜோடும் ரப்பர் பூட்சும் போட்டுக்கொள்ள வேண்டும். கம்பளி மேஜோடு தேவையில்லை. கையில் ஏதாகிலும் மருந்துகள் எடுத்துச் சென்றாலும் நலம். மலை ஏறுவதற்கு கையில் கெட்டியான பிரம்போ அல்லது பாரமில்லாத தடியோ சுமார் 4—5 அடி நீளத்திற்குக் குறையாமலிருக்கவேண்டும்.

**மலைமேல் நடக்கும்போழுது உண்டாகும் வியாதிகளாவன;—**

வயிற்றுக்கடுப்பு, ரக்தக்கடுப்பு, காலரா, அஜீரண வயிற்றுப்போக்கு, வயிற்று நோய் முதலான நோய்கள். ஆகையால் இந்த வியாதிகளுக்கு வேண்டிய மருந்துகள் எடுத்துச் சென்றால் உத்தமம். மேலும் காலில் அடி படும்பொழுது டிங்சர்அயோடின்(Tincture Iodin-Tincture Benzoinco) என்னும் மருந்துகள் கையில் அவசியமாய் பஞ்சுடன் (lint-cotton) வைத்துக்கொண்டிருக்கவேண்டியது. நடந்து

செல்வதினால் சில சமயங்களில் முன்னுக்குப் போகும் பிரயாணத்தில் கால் நோய் உண்டாகும்பொழுது உபயோகப்படுத்த டர்பன்டைன் (Turpentine), யூகலிப்டஸ் ஆயில் Eucalyptus oil) போன்ற தைலங்களை வைத்துக்கொண்டிருக்கவேண்டியது. அதிகமாய் படுக்கை, துணிமணி சாமான்கள் எடுத்துச் சென்றால் கூலியாட்கள் தேவை—மற்றும் ஒரு சிறு பிரைமஸ் ஸ்டவ், குக்கர் முதலானதுவைகள் எடுத்துச்சென்றால் உத்தமம். காபி, டீ குடிக்கும் வழக்கமுள்ளவர்கள் டின் பால் கொண்டுபோகவேண்டும். (Optimus) ஆப்டிமஸ் என்னும் சிறிய ஸ்டவ் எடுத்துச் சென்றாலும் நலம். ஆனால் வழியில் கடைகளில் பால் அதிகமாய்க் கிடைக்கும். தென்னாட்டைப்போல் அங்காட்டார் பாலில் ஜலம் கலக்கமாட்டார்கள். அப்படிக்கலந்தால் பாபமென்றும், ஜலங்கலந்த பாலை யாத்ரீகர்களுக்குக் கொடுத்தால் மஹா பாபமென்றும் பயப்படுகிறார்கள். வழியில் உருளைக் கிழங்கைவிட வேறே காய்கறிகள் கிடையாது. ஆனால் பிரயாணத்தின் மத்தியபாகத்தில் எவ்விடம் பார்த்தாலும் முளைக்கீரையும், பொதினாக் கீரையும் தானாய் எங்கும் முளைத்திருக்கும். பிரயாணிகர்கள் சாதாரணமாய் அரிசிச்சாதம், ரொட்டி, பருப்பு முதலானதுவைகளைச் சாப்பாட்டிற்கு உபயோகப்படுத்தவேண்டும். அஜீர்ணமுண்டாகும் பதார்த்தங்களை உபயோகப்படுத்தக்கூடாது. காரம், உப்பு, சீமை எண்ணெய் பதார்த்தங்கள் கடைகளில் கிடைக்கின்றன. புளிப்பு வேண்டியவர்கள் புளிப்பழம் தங்களுடனே கொண்டுபோகவேண்டும். ஆனால் புளி, உப்பு, காரம் இவைகளைப் பிரயாணம் செய்யும்பொழுது குறைப்பது நலம். காபி, டீ இவைகளைவிட வழியில் நல்ல

பாலைச் சாப்பிடுவது உத்தமம். 1 அணுவுக்கு பால் சாப்பிட்டால் வயிறு நிறைந்துவிடும். ஹரித்வாரத்திலிருந்து மலைமேல் போய்த் திரும்புவதற்கு சுமார் ரூ 10 கையிலிருந்தால் போதும். தினமும் சாப்பாட்டிற்கு 0—1—0, 0—1—6 அணுவிருந்தால் ஆள் ஒன்றுக்குப் போதும். பிரயாணகாலத்தில் விடியற்காலங்களில் இருட்டு மாறி, கீழ் வெழுப்புண்டாகும்பொழுது புறப்பட்டால் வெகு சுகம். காலை 7—8 மணி வரையிலும் நடந்த பின்பு ஜல மலபாதை முடித்துக்கொண்டு பல் துலக்கினதும் யாதாகிலும் ஒரு சட்டியில் சூடான பால் விற்குமிடத்தில் 0—0—9 அல்லது 0—1—0 அணு பால் குடித்துவிட்டு 10—12 மணி வரையிலும் சுலபமாய் நடக்கலாம். வெய்யல் ஜாஸ்தியானதும் ஒரு சட்டியிலிறங்கி ஸ்நானம் சமையல் செய்து சாப்பிட்டுவிட்டு பகல் 2 அல்லது 3 மணி சமயத்திற்கு வெய்யல் தாழ்ந்ததும் புறப்பட்டால் ராத்திரி கண் இருட்டாகும் வரையிலும் நடந்து சென்று ஒரு சட்டியில் படுத்துக்கொள்ளவேண்டும். சாதாரணமாய் இராச்சாப்பாடு கூடாது. வெகுவாய் யாரும் செய்துகொள்ளுகிறதில்லை. இராச்சாப்பாட்டினுல் அஜீர்ண வியாதிகளுண்டாகிற தென்பர். சட்டிகளில் இறங்கினுல் குழாய்த் தண்ணீரையே உபயோகிக்கவேண்டும். ஆற்று ஜலத்தை உபயோகிப்பது உசிதமல்ல. (அடியேன் இம்மாதிரி செய்ததினுல் காலை சாப்பாட்டிற்கு முன் 10 மைலும், மாலையில் 10 மைலுக்குக் குறையாமலும் தினமும் 20—22 மைல் பிரகாரம் நடந்து மத்தியில் மழையால் 1 நாள் தடைபட்டு ஹரித்வாரம் விட்ட 9ம் நாள் பத்ரி சேர்ந்தேன்). சிலர் காலையிலெழுந்து ஸ்நானம் சாப்பாடு செய்து புறப்பட்டால் அதிக தூரம்

டக்கமாட்டார்கள். வெய்யல் வந்துவிடும். சட்டிகளில் ஈக்களின் உபத்திரவம் ஜாஸ்தி. முகம், வாய், திரேகமெல்லாம் ஈக்கள் மொய்த்துக்கொள்ளும். இவைகளைத் தின் பதார்த்தங்களில் உட்காராதபடி தடுப்பதே நலம். காலரா வருவதைத் தடுக்கலாம். வழியில் பால்கோவா மிட்டாய்கள் வெகுவாய்க் கிடைக்கும். சாப்பிட்டு வழக்கமில்லாதவர்கள் இவைகளைத் தின்பதினால் அஜீர்ணத்திற்கிடம் கொடுப்பார்கள்.

வழிகளிலுள்ள முசாபரி பங்களாக்களில் தங்கவேண்டிய அவசியம் ஏற்படாது. வேண்டுமானவர்கள் (U. P.) Garhwal Dist. P. W. D. Engineer, Pauri—கார்வால் ஜில்லா, பப்ளிக் வர்க்ஸ் டிபார்ட்மென்டின் இஞ்சினீரவர்களுக்கு முன்னடியே எழுதி அனுமதி பெறவேண்டும். இவர் பௌரி என்னுமூரில் வசிக்கிறார். வழியில் கடைக்காரர்கள் தயாரித்திருக்கும்குடிசைகள்,கொட்டகைகளே சுத்தமாயும் அநுகூலமாயுமிருக்கும். பத்ரீ நாராயணன் கதவைத் திறக்கும்பொழுது முதல் முதல் செல்லும் யாத்ரீகர்களுக்கு வழியில் சௌகரியமதிகம் ஏனென்றால் யாத்திரைக்குப் போகிறவர்களேயொழிய திரும்பி வருபவர்களின் கூட்டமிராது. மத்திய யாத்திரை காலங்களில் சட்டிகளில் வரும் போகும் யாத்ரீகர்கள் கூட்டமதிகம். தங்கப் படுக்க இடமும் கஷ்டமாகும். அச்சமயங்களில் வழியின் சத்திரங்களும் அசுத்தமாயிருக்கும்.

தென் தேசத்து யாத்ரீகர் பத்ரி யாத்திரை செய்யும் பொழுது ஹிந்தி அல்லது ஹிந்துஸ்தானி பாஷை தெரிந்த ஒருவரை தங்கள் ஜதையில் கண்டிப்பாய்க் கூட்டிச்சென்றால்

தங்களுக்கு பாஷையின் கஷ்டம் ஒன்றும் தெரியாமல் சுகமாய் வேண்டிய அநுகூலங்கள் செய்துகொண்டு போக வர பிரயாணம் செய்யலாம். ஏனென்றால் வட நாட்டாருக்கு ஹிந்தி பாஷையைவிட வேறொன்றும் தெரியாது. இங்கிலீஷ் பழக்கமும் மலைமேலுள்ளவர்களுக்குக் கிடையாது. ஆகையால் யாத்ரீகர்கள் முக்கியமாய் ஹிந்தி பாஷை தெரிந்த ஒருவரை தங்கள் ஜதையில் கூட்டிக்கொண்டோ அல்லது வழியில் சிநேகிதம் பிடித்தோ செல்லவேண்டும்.

சித்திரை வைகாசி மாதங்களில் முதல் யாத்திரை செய்பவர்கள் பத்ரியில் குளிர் அதிகமானதால் அதிகமான கம்பளிகள் மற்றும் கம்பளிச்சட்டைகள் எடுத்துச் செல்ல வேண்டும். பத்ரியில்கம்பளிக் கால் சிராய்கள் மற்றும் கோட் போட்டுக்கொண்டால் வெகு சௌகரியம். சந்நதிக்குள்ளும் சட்டை சிராய் போட்டுக்கொண்டும், காலுக்கு மேஜோடு போட்டுக்கொண்டே போகலாம்.

இந்தியாவிலுள்ள எல்லா வழிகளைவிட இந்த பத்ரி வழியே மிகவும் சிலாக்கியமானது. வழியின் கஷ்டமாகிலும் தாகவிடையாகிலும் தெரியாது. வேண்டுமிடங்களில் தங்கிவிடலாம். நிதானமாய் யாத்திரை செய்யலாம். குடும்பத்துடன் யாத்திரை செய்தால் வெகு ஆனந்தமாய் யாத்திரை செய்யலாம். ஒவ்வொரு தங்குமிடமும் 'பிக்னிக்' (Picnic) என்று சொல்லும்படியான வன போஜனத்தின் சந்தோஷகரமாய்த் தோன்றும்.

---

கேதார்நாத் தரிசினம் செய்யச்செல்லும் பிரயாணிகர்களின் மார்க்கம்.

ஹரித்வாரத்திலிருந்து 95 மைல் தூரமுள்ள ருத்ர பிரயாகினின்றும் மந்தாக்கினி கங்கைக் கரையின்மீது வடபுறமாய் 54 மைல் சென்றுவிடுகிறார்கள்.

வழியின் விவரம் :—

ருத்ரபிரயாகிலிருந்து—சடோலி (Rudraprayag to Chatoli) 5 மைல் சமமான வழி.

சடோலியிலிருந்து—ராம்பூர் (Chatoli to Rampur) 2 மைல்.

ராம்பூரிலிருந்து-அகஸ்தமுனி (Rampur to Agasthamuni) 4½ மைல்.

அகஸ்தமுனியிலிருந்து—சர்ஹி (Agasthamuni to Saurhi) 2 மைல். சமமான வழி.

சர்ஹியிலிருந்து-சந்திரபுரி (Saurhi to Chandrapuri) 2 மைல். சமமான வழி.

சந்திரபுரியிலிருந்து—பிரி (Chandrapuri to Bhiri) 2½ மைல். முன்னுக்கு வழி சுமாராய் ஏற்றம்.

பிரியிலிருந்து–குண்ட் சட்டி (Bhiri to Kund Chatti) 3½ மைல். முன்னுக்கு வழி சிறிது ஏற்றம்.

குண்ட் சட்டியிலிருந்து குப்த காசி (Kund Chatti to Gupta Kashi) 2½ மைல். இவ்விடம் அனேக மருந்து மூலிகைகள் கிடைக்கின்றன.

குப்த காசியிலிருந்து—நல சட்டி (Gupta Kashi to Nala Chatti) 1½ மைல். இவ்விடமிருந்து உக்கி மடம் மூலியமாய் பத்ரீ நாராயணன் போக வழி பிரிகிறது.

நளசட்டியிலிருந்து– நாராயன் கோடி (Nala Chatti to Narain Koti) 2 மைல். பிரயாணிகள்களிடத்தில் அதிகமாய்ச் சாமான்களிருந்தால் அவசியமில்லாத சாமான்களை மூட்டையாய் கட்டித் தங்கள் சீல்போட்டு இவ்விடமுள்ள சௌதரி என்று வழங்கப்படுகிற கிராமாதிகாரியினிடம் ஒப்புவித்துப் போனல் கேதார் தரிசினம் செய்து திரும்பும் பொழுது மூட்டையை பெற்றுக்கொள்ளலாம். அவர் பணச்சிலவில்லாமல் பாது கார்ப்பார். சாமான்களுக்கு ரசீதும் கொடுப்பார்.

நாராயன் கோடியிலிருந்து-மெய்கண்ட (Narain Koti to Maikhanda) 3½ மைல்.

மெய்கண்டாவிலிருந்து–பட (Maikhanda to Phata) 2 மைல்.

படவிலிருந்து-ராம்பூர் (Phata to Rampur) 3 மைல். இவ்விடமிருந்து 1½ மைல் சமமான வழி. முன்னுக்கு 3 மைல் தூரம் திரிஜுகி நாராயன் போகும் வரையிலும் ஏற்றம். தண்ணீர்க்கஷ்டம். தேவப் பிரயாகிலிருந்து கங்கோத்ரி போன பிரயாணிகள் இவ்விடம் திரும்பி வந்து சேருகிறார்கள். இவ்விடம் உஷ்ண ஜல தாரைகள் உண்டு.

ராம்பூரிலிருந்து—திரிஜுகி நாராயன் (Rampur to Trijugi Narain) 4½ மைல். 1½ மைல் சமமான வழி. 3 மைல் ஏற்றம். தண்ணீர்க் கஷ்டம்.

திரிஜுகிநாராயனிலிருந்து—கௌரிகுண்ட் (Trijugi Narain to Gauri Kund) 6½ மைல். இவ்விடமிருந்து 3½ மைல் தூரமுள்ள சோமத்வார என்னும் சட்டிவரையிலும் இறக்கம், பின்னிட்டு 3 மைல் குண்டம் வரையிலும் ஏற்றம். இவ்விடம் ஓர் உஷ்ண ஜல தாரையுண்டு.

கௌரிகுண்டிலிருந்து—ரம்பர்ஹ (Gauri Kund to Rambarha) 4 மைல். இதுதான் கடைசி சட்டி. (தங்குமிடம்). இவ்விடமிருந்து கேதார்நாத் 3 மைல் தூரம். அவ்விடம் குளிர் ஜாஸ்தியாயிருப்பதினுல் சில யாத்ரீகர்கள் தரிசினம் செய்துக்கொண்டு மறுபடியும் இந்த சட்டிக்கே ராத்திரியில் வந்து தங்கிவிடுகிறுர்கள்.

ரம்பர்ஹவிலிருந்து-கேதார்நாத் (Rambarha to Puri) (Kedarnath) 3 மைல். இந்தவிடம் சமுத்திர மட்டத்தை விட 11,500 அடி உயரமிருக்கிறது. இவ்விடம் சிவலிங்கமொன்றுளது. இதுவே தரிசினர்த்தம் செல்லுமிடம்.

பத்ம புராணத்தில் சோல்லியிருக்கும்படியான பஞ்ச (ஐந்து) கேதார் எனப்படுபவைகளின் விவரம்:—

1. கேதார்நாத் என்னும் இவ்விடத்தில் பீமனுடைய பயத்தினுல் எருமைக்கிடாவின் உருவங்கொண்ட சிவனின் பின்பாகமாகிய புட்டமிருக்கிறது.

2. மத்ய மஹேஸ்வர என்னுமிடத்தில் சிவனுடைய நாபிக்கமலம் அல்லது மத்தியபாகமிருக்கிறது. இது உக்கி மடத்திலிருந்து கடினமான கால் பாதையில் 18 மைல் செல்லவேண்டியது.

3. துங்கநாத் என்னுமிடத்தில் சிவனுடைய கைகள்-ஹஸ்தங்களிருக்கின்றன. 64ம் பக்கம் கண்டிருக்கும் சோப்ட என்னுமிடத்திலிருந்து 3 மைல் தூரம். கடினமான வழி. இது சமுத்திர மட்டத்தைவிட 12,000 அடி உயரம்.

4. ருத்ரநாத் என்னுமிடத்தில் சிவனுடைய முகமிருக்கிறது. 64ம் பக்கம் கண்டிருக்கும் மண்டல் என்னும் ஸ்தலத்திலிருந்து ஒரு கால் பாதையில் 15 மைல் சென்றால் இத்தலத்தையடையலாம்.

5. கல்பேஷ்வர்நாத் என்னுமிடத்தில் சிவனுடைய ஜடையிருக்கிறது. இந்த இடத்திற்கு ஜோஷிமடம் அடையுமுன்னுள்ள 50ம் பக்கம் 44 பாராவில் கண்டிருக்கும் ஹிலாங்கு அல்லது குமார சட்டியிலிருந்து 6 மைல் செல்ல வேண்டும். 1 மைல் இறக்கமும் 5 மைல் கடினமான ஏற்றமுள்ள வழி.

கேதார்நாத் தரிசினம் செய்தபின், சென்ற வழியே திரும்பி வந்து நாராயன் கோடியில் மூட்டையை எடுத்துக் கொண்டு 23 மைல் தூரமுள்ள நளசட்டி வரையிலும் வந்து அவ்விடமிருந்து உக்கிமடம் போகும் வழியாய் 3 மைல் சென்றால் உக்கிமடம் வருகிறது. இது கேதார்நாத் கோயிலில் பூஜை செய்யும் ராவல் என்பவரின் வாசஸ்தானம். இவ்விடமிருந்து 18 மைல் கடினமான கால் வழியில் சென்றால் இரண்டாவது கேதார் எனப்படும் மத்ய மஹேஸ்வர என்னும் ஸ்தலத்திற்குச் செல்லலாம்.

நள சட்டியிலிருந்து—உக்கி மடம் (Nala Chatti to Ukhi Matha) 3 மைல்.

உக்கிமடத்திலிருந்து-கணேச சட்டி (Ukhi Matha to Ganesh Chatti) 3½ மைல்.

கணேசசட்டியிலிருந்து—போதி பச (Ganesh Chatti to Pothi Basa) 5 மைல். வழி ஏற்றமாயிருக்கிறது.

போதி பசவிலிருந்து -சோப்ட (Pothi Basa to Chopta) 3 மைல் இவ்விடமிருந்து ஒரு பாதை 3வது கேதாராகிய துங்கநாத் என்னும் ஸ்தலத்திற்குப் போகிறது. துங்கநாத் என்னுமிடம் சமுத்திர மட்டத்தைவிட 12,000 அடி உயரமிருக்கிறது. கடின ஏற்றமான பாதை.

சோப்டவிலிருந்து—பங்கர் பச (Chopta to Pangar Basa) 4 மைல்.

பங்கர் பசவிலிருந்து—மண்டல் (Pangar Basa to Mandal) 4 மைல். இவ்விடமிருந்து 15 மைல் தூரமுள்ள ஒரு கால் பாதை 4வது கேதாரென்கிற ருத்ரநாத் என்னும் ஸ்தலத்திற்குப் பிரிகிறது.

மண்டல் என்னுமிடத்திலிருந்து—கோபீஷ்வர் (Mandal to Gopeshwar) 4½ மைல். இந்த வழி அடர்த்தியான காடுகளின் மார்க்கத்தில் இறக்கமாகவும் ரமணீயகரமாயுமுள்ளது.

கோபீஷ்வரிலிருந்து —சமோலி (Gopeshwar to Chamoli) 3 மைல். இவ்விடம் ஹரித்வாரத்திலிருந்து கர்ணபிரயாக் மார்க்கமாய்—பத்ரி செல்லும் வழி கிடைக்கிறது.

சமோலியிலிருந்து (Chamoli) பத்ரீநாராயணன் போகும் வழியின் விவரம் 48வது பக்கம் 36வது பாராவில் பார்க்கவும். இவ்விடமிருந்து பத்ரி 48 மைல்.

முனிகிரேடியிலிருந்து "ஜாம்பன்" (Jampan) என்னும் 'தண்டி' அல்லது டோலிகளில் போகலாம். இதை 4 கூலியாட்கள் எடுத்துச் செல்லுகிறார்கள். ரூ. 120, லிருந்து 150வரையில் கேதார், பத்ரியிலிருந்து போய் வர கேட்பார்கள். இது ஒரு சிறிய குறிச்சி. உட்கார்ந்து காலை நீட்டிக்கொள்ள அநுகூலமாயிருக்கும். ஒருவரானால் அவருடைய சொற்ப சாமான்களை அதிலேயே வைத்துக்கொள்ளலாம். பெட்டி படுக்கையிருந்தால் வேறே சுமை கூலியாளை ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். சுமை கூலியாளுக்கு 1 மணுவு பாரமுள்ள சாமானுக்கு போக வர ரூ. 30 முதல் ரூ. 50 வரையில் கொடுக்கவேண்டும். 'கண்டி' (Khandi) என்பது ஒரு பெரிய நீண்ட கூடை. இதில் ஒருவர் மாத்திரம் உட்காரலாம். இதை ஒரு கூலி தன் முதுகில் கட்டிக்கொண்டு போகிறான். போய்வர ரூ. 40 முதல் ரூ. 60 வரையில் சுமை கூலி கேட்பார்கள். பிரயாணியினுடைய வயது உடம்பின் பெருமனைப் பார்த்து சார்ஜு கேட்பார்கள். இதில் உட்கார்ந்து செல்வது வெகு கஷ்டம். உட்கார்ந்தால் அசைய முடியாது. இதில் சகஜமாய் பலமில்லாத கிழங்கள்மாத்திரம் ஏறிப் போவார்கள். இதில் பால்யமாயுள்ளவர்கள் உட்காரமாட்டார்கள். இதில் உட்காருவதைவிட நடந்து செல்லுவதே உத்தமம்.

குதிரைகளும், கோவேரி கழுதைகளும் ஏறிப்போகக் கிடைக்கும். அவைகளுக்கும் சார்ஜு ரூ. 60க்குள்ளேயே போகவர கேட்பார்கள். இந்த தண்டிகளில் (Jampan)

கங்கோத்ரி-யமுனோத்ரி செல்ல வேண்டுமானால் பணச்செலவு வெகுவாகும்.

மற்றும் முனிகிரேடியிலிருந்து ஏற்படுத்தப்படும் டோலியாட்கள் அல்லது சுமை கூலிகளிடத்திலிருந்து டெஹரி சர்க்காரார் வொர்க்மென்ஸ் பிரீச் ஆப் காண்ட்ராக்ட் ஆக்டின்படி (Workmen's Breach of Contract Act) இரண்டு காரார்களை ஏற்படுத்துகிறார்கள். யாத்ரீகர்களிடமிருந்து தாங்கள் கூலியாட்களுக்கு ஒப்புக்கொண்ட பணத்தை யாத்திரை தீர்மானமானவுடன் பூராவும் கொடுப்பதாய் எழுதிக்கொண்டு அதை சர்க்காரார் வைத்துக்கொள்ளுகிறார்கள். யாத்ரீகரை சரியானபடியாய் நடு வழியில் விட்டுவிடாமல் ஒப்பந்தம் செய்தபிரகாரம் சுமந்துகொண்டுபோய் ஒப்பிக்கொண்ட கடைசி இடத்தில் விட்டுவிடுவதாக கூலிகள் எழுதிக்கொடுத்த ஒப்பந்தப் பத்திரத்தை யாத்ரீகர் கையில் கொடுத்து, ஒப்பந்தம் சரியான பிரகாரம் முடிந்ததாவென்னும் சமாச்சாரம் ஷை பத்திரத்தில் யாத்ரீகர்கள் எழுதிக் கூலிகள் கையில் கொடுத்தனுப்பவேண்டும். யாத்ரீகர்களுக்கு கூலிகள் திருப்திகரமாய் நடந்ததாக மேற்கண்ட ஒப்பந்தப் பத்திரத்தில் யாத்ரீகர் எழுதியிருந்தால் டெஹரி (Tehri) சர்க்காரார் இக்கூலிகளை மறுபடியும் புதிய யாத்ரீகர்களை சுமக்க அனுமதிக்கிறார்கள். இல்லாவிடில் இவர்களை தூரத்திவிட்டு அந்த யாத்திரை முடியும் வரையிலும் இவர்களை கூலி வேலைக்கு எடுத்துக்கொள்ளுவதில்லை.

---

பத்ரீ நாராயணனிலிருந்து திரும்பிவரும் மார்க்கம்.

திரும்பும்போது சென்றவழியான ரிஹிகேஸ் மார்க்கம் திரும்பினல் ரிஹிகேஸ் (ரிஷிகேஸ்) 169 மைல் தூரம்.

67½ மைல் தூரமுள்ள கர்ணபிரயாக் வரையிலும் பத்ரி யிலிருந்து திரும்பி ராம்நகர் மார்க்கம் இறங்கினல் ராம்நகர் 164 மைல்.

ராம்நகர் மார்க்கத்தில் இறங்கும் வழியின் விவரம் கீழ்க்கண்டவாறு.

பத்ரியிலிருந்து கர்ணபிரயாக் (Badrinath to Karna-Prayag) 67½ மைல்.

கர்ணபிரயாகிலிருந்து பட்லி (KarnaPrayag to Patli) 2 மைல்.

பட்லியிலிருந்து சிமலி (Patli to Simali) 1¾ மைல். சமமான வழி.

சிமலியிலிருந்து சிசராலி (Simali to Sisarauli) 2¼ மைல். வழி கொஞ்சம் ஏற்றம்.

சிசராலியிலிருந்து படோலி (Sisarauli to Bhatoli) 1½ மைல்.

படோலியிலிருந்து அதிபத்ரி (Bhatoli to Ad-Badri) 4 மைல். இவ்விடம் பத்ரீ நாராயணனெனும் பெயருள்ள சிறு கோயில்களும், தபால் தந்தி ஆபீசும், கடைகளும், தர்மசாலைகளுமுண்டு. சிறிய கிராமம்.

அதிபத்ரியிலிருந்து கேடி (Ad-Badri to Kheti) 3¼ மைல். வழி ஏற்றமானது.

கேடியிலிருந்து ஜங்கல் சட்டி (Kheti to Jangal Chatti) 1½ மைல். ஏற்றமான வழி.

ஜங்கல் சட்டியிலிருந்து கண்ட பஞ்ச (Jangal Chatti to Ganda Banja) 2 மைல். இறக்கமான வழி.

கண்ட பஞ்சவிலிருந்து கலிமடி (Ganda Banja to Kali Mati) 1¾ மைல். இறக்கமான வழி.

கலி மடியிலிருந்து ரசிய (Kali Mati to Rasia) 1 மைல். இறக்கமான வழி.

ரசியவிலிருந்து குவர்கதேர (Rasia to Gwarhgadhera) 2 மைல். இறக்கமான வழி.

குவர்கதேராவிலிருந்து துணர்காட் (Gwarhgadhera to Dhunarghat) 1¾ மைல். இறக்கமான வழி.

துணர்காட்லிருந்து தரிம்தலி (Dhunarghat to Darhim Dali) 1½ மைல். சமமான வழி.

தரிம்தலியிலிருந்து ஸய்ன்ஜி (Darhim Dali to Sainji) 1¾ மைல.

ஸய்ன்ஜியிலிருந்து மேல்சௌரி (Sainji to Melchauri) 3 மைல். இவ்விடம் கூலியாட்களை மாற்றவேண்டும். முனி கிரேடியில் ஏற்படுத்தப்பட்ட டோலி அல்லது சுமை கூலியாட்கள் ரிஷிகேஸுக்குத் திரும்பாவிடில் இதுவரையிலும் தான் வருவார்கள். இவ்விடமிருந்து புதிய கூலியாட்கள்

கிடைப்பார்கள். இவ்விடமிருந்து ஏற்படும் கூலியாட்கள் தங்கள் மனதுக்கு தோன்றினாப்போல் கூலி கேட்பார்கள். ஒரே ரேட் கிடையாது. சந்தர்ப்பம்போலும் யாத்ரீகர்கள் திரும்பிவரும் கூட்டம்போலும் கூலி கேட்பார்கள். முதலில் முனிகிரேடியில் கூலி டோலிகள் அமைக்கும்பொழுது இந்த மேல் செளரி வரையிலும்தான் கூலி பேசுவார்கள் அல்லது ரிஷிகேஸ் வரையிலும் ஒப்பிக்கொள்ளுவார்கள். ஆனால் இவ்விடமிருந்து ஒரு டோலிக்கு ராம்நகர் போக 10—15 ரூபாய் கேட்பார்கள்.

மேல்சௌரியிலிருந்து ராம்நகர் ரயில்வே ஸ்டேஷன் சேர கீழ்க்கண்ட சட்டிகள் மூலியமாய்ப் போகவேண்டும்.

சேமல்கேட் (Semalkhet) 2½ மைல்.

பிஜ்ராணி (Bijrani) 2 மைல்.

ராம்பூர் (Rampur) 1 மைல்.

பிரிகேஷ்வர் (Brikeshwar) 1 மைல்.

டிகோடி (Digoti) 1 மைல்.

கானயீன் (Ganayeen) 2 மைல். இது பெரிய ஊர். தபால் தந்தி ஆபீசும், தர்மசாலைகள், கடைகளுண்டு. இவ்விடமிருந்து ஒரு பாதை ராம்நகர் என்னும் ரயில்வேஸ்டேஷனுக்கும், மற்றொரு பாதை காத்கூடம் என்னும் ரயில்வே ஸ்டேஷனுக்கு ராணிகேட் மூலியமாய்ப் பிரிகின்றது. ஆனால் ராணிகேட் (Ranikhet) என்பது மிலிடெரி கன்டோன்மென்ட் நகரமானதால், யாத்திரைவாசிகளை அவ்விடம் போகவிட்டால் பிளேக், காலரா முதலான தொத்து வியாதிகள் உண்டாகுமென்று, கவர்ண்மென்டார் பத்ரியிலி

ருந்து திரும்பிவரும் யாத்ரீகர்களை ராம்நகர் மார்க்கமே போகும்படி திருப்பிவிடுகிறார்கள். ராணிகேட் மார்க்கம் சென்றாலும் வற்புறுத்தி ராம்நகர் மார்க்கம் திருப்பிவிடுகிறார்கள். ஆனால் சக்தியான கௌரவமுள்ள யாத்ரீகர்களை அவ்வாறு தொந்திரவு கொடுப்பதில்லை. ராணிகேட் மார்க்கம் சென்றால் சீக்கிரத்தில் சேர்ந்து அவ்விடமிருந்து மோட்டார் வண்டிகளின்மீதில் காத்கூடம் என்னும் ரயில்வே ஸ்டேஷன் சிக்கிரத்தில் சேரலாம்.

கானயீனிலிருந்து (Ganayeen) ராம்நகர் போகும் மார்க்கத்தில் 2 மைலுக்கதிகப்படாத தூரங்களில் சட்டிகளுண்டு. பிரயாணிகர்கள் சௌக்கியமாய் சாப்பாட்டிற்கு கஷ்டப்படாமல் பிரயாணம் செய்யலாம். அம்மாதிரியே ராணிகேட் (Ranikhet) போகும் வழியும். ஆனால் இந்த வழியில் யாத்ரீகர் அதிகமாய்ப் போகாததினால் தூரம் தூரமாய் கிராமங்களுண்டு. 4லிருந்து 6 மைல் தூரங்களுக்கு ஒவ்வொரு கிராமம் கிடைக்கும்.

முக்கிய குறிப்பு:—

1. ஹிமயகிரி பர்வதத்திலுள்ள வடநாட்டு யாத்ரீகர்களில் அதிகமாய் பக்திமார்க்கமாயுள்ளவர்கள் ஹரித்வாரத்திலிருந்து புறப்பட்டு தீர்த்த யாத்திரைக்காக யமுனோத்ரி (யமுனா நதி உற்பத்தி) கங்கோத்ரி (கங்கை நதி உற்பத்தி) கேதார்நாத், பத்ரீநாத் என்னும் இந்த நான்கு ஸ்தலங்களுக்கும் சென்றுவருவது வழக்கம். அப்படிப் போகவேண்டுமானால் ஏப்பிரல் மாதம் ஆரம்பம் முதற்கொண்டு ஜுலை மாதம் முடிவதற்குள் பிரயாணப்பட்டு முதலில் யமுனோத்ரி, பின்பு கங்கோத்ரி, மூன்றாவதாய் கேதார்நாத் தரிசினம்

செய்துக்கொண்டு கடைசியாக பத்ரீநாத் தரிசினம் செய்து வரமுடியும். இந்த யாத்திரை முடிய சுமார் 2 முதல் 3 மாதங்கள் செல்லும். போக மாத்திரம் முழுதும் 437 மைல்கள்.

2. கேதார்நாத் மாத்திரம் தரிசினம் செய்துவிட்டு பத்ரீ நாராயணன் போக இஷ்டப்படுவோர் மே மாதம் 15ம் தேதிக்கு மேல்பட்டு செப்டம்பர் மாதம் கடைசிக்குள் யாத்திரையை முடிக்கவேண்டும். இதற்கு சுமார் $1\frac{1}{2}$ முதல் 2 மாதங்கள் செல்லும். போகமாத்திரம் முழுதும் 255 மைல்கள்.

3. நேராய் பத்ரீ நாராயணன் மாத்திரம் போவதாக உத்தேசமுள்ளவர்கள் மே மாதம் 15ம்தேதிக்கு மேல்பட்டு அக்டோபர் மாதம் 15-தேதிக்குள் யாத்திரையை முடிக்க வேண்டும். இதற்கு 1 முதல் $1\frac{1}{2}$ மாதங்கள் செல்லும், டோலிகளிலாவது, வேகமாய் நடந்தாவது செல்லும் யாத்ரீகர்கள் சுமார் 22 நாட்களுக்குள் இந்த ஒரு யாத்திரையை மட்டும் சுலபமாய் முடிக்கலாம்.—போக மாத்திரம் முழுதும் 183 மைல்கள். இதில் திரும்பிவரும் யாத்திரைக்கு ராம்நகரம் சென்றால் 164 மைல்கள். ரிஹிகேஸ் வந்தால் 169 மைல்கள்.

மேலே சொன்ன 1, 2, 3வது பாராக்களில் கண்டிருக்கும் மைல்களில் 14 மைல் கழித்துவிட்டால் (ரிஹிகேசிலிருந்து ஹரித்வாரத்தின் தூரம்) பாக்கியிருக்கும் தூரம் நடந்தோ அல்லது டோலிகளிலோ செல்லவேண்டும்.

## இந்த பத்ரி யாத்திரையின் மஹத்துவம் மற்றும் பலன்கள்.

மலையின்பேரில் பிரயாணம் செய்யும்பொழுது பிச்சைக்காரன், ஏழை, பணக்காரனென்ற வித்தியாசமே கிடையாது. மற்றும் வழியின் கஷ்டத்தால் அம்மாதிரி பாராட்டவுமுடியாது—எல்லா ஆத்மகோடிகளும் ஒன்றே என்ற மனோபாவம் உண்டாய்விடுகிறது. இதுவே மலையின் கீழில்லாத பத்ரி யாத்திரையின் மகத்துவம். எல்லாப் பிரயாணிகர்களின் மனதும் ஒரே விதமாய் பகவத் தியானத்திலேயேயிருக்கும்.

இந்த பத்ரி யாத்திரையின் பலன். (Popular belief) வடநாட்டார் கீழ்க்கண்டவாறு நம்புகிறார்கள்.

1. பத்ரிக்குப் போனவர்கள் திரும்பி வருவது நம்பிக்கையில்லை.

2. திரும்பிவந்தால் விடாத காயலாவில் விழுவார்கள்.

3. மேலிரண்டையும் முதலிலேயே தப்பித்துக்கொண்டு ஊர் சுகமாய் வந்து சேர்ந்தால் இவர்களுக்கு சாகுமளவும் தரித்திரமில்லை.

அடியேன் அனுபவமுமிப்படியே.—உண்மை.

குறிப்பு:—கேதார்நாத் சந்நதி பத்ரி திறக்குமுன்பே திறந்துவிடுவதினால் யாத்ரீகர்கள் சாதாரணமாய் கேதார்நாத் தரிசினம்செய்து பின்பு பத்ரி போகிறார்கள். வெகுவாய் யாரும் பத்ரியிலிருந்து கேதார் போவதில்லை.

1. ஹரித்வாரத்திலிருந்து தேவப்பிரயாக் மார்க்கமாய் யமுனோத்ரி போக 165 மைல்கள்.

2. ஹரித்வாரத்திலிருந்து யமுனோத்ரி போகாமல் நேராய் கங்கோத்ரி போக 193 மைல்கள். (தேவப்பிரயாக் மார்க்கமே).

3. யமுனோத்ரியிலிருந்து கங்கோத்ரி போக 98 மைல் கள்.

4. கங்கோத்ரியிலிருந்து கேதார்நாத் போக 123 மைல்கள்.

5. கேதார்நாத்திலிருந்து பத்ரீ நாராயணன் போக 101 மைல்கள்.

6. ஹரித்வாரத்திலிருந்து கேதார்நாத் மார்க்கமாய் பத்ரீ நாராயணன் போக 250 மைல்கள்.

7. ஹரித்வாரத்திலிருந்து நேராய் பத்ரீ நாராயணன் போக 183 மைல்கள்.

8. கோடத்வாரா (Kotadwara) என்னும் ரயில்வே ஸ்டேஷனிலிறங்கி பௌரி—ஸ்ரீநகர் மார்க்கமாய் பத்ரீ நாராயணன் போக 165 மைல்கள்.

யமுனோத்ரி கங்கோத்ரி போக கீழ்கண்ட வேறே மார்க் கங்களுமுண்டு.

1. ரிஷிகேஶிலிருந்து நரேந்திர நகரமென்னும் டெஹரி (Tehri) மார்க்கம்.

2. டேராடூன் (Dehra Dun) மார்க்கமாயுள்ள மூஸோரி (Mussoorie) மார்க்கம். இவ்வழி தேவப்பிரயாகின் வழியைவிட 80 மைல்கள் குறைவு. வெகுவும் சௌக்கியமான வழி.

மானஸரோவரம் அல்லது கைலாஸ் என்னும் குளத்திற்கு (Lake) யாத்திரை போக

கீழ்க்கண்ட மார்க்கங்களாய்ச் செல்லலாம்.

1. அல்மோரா (via Almora) மார்க்கம். அல்மோரா வரையிலும் மோட்டார் வண்டிகளுண்டு—சுலபமான வழி.

2. ஜோஷி மடத்திலிருந்து நிதிபாஸ் (via Nitipass) மார்க்கம்.

3. பத்ரிநாராயணனிலிருந்து மானபாஸ் (via Manapass) மார்க்கம். (வெகுவும் கடினமான வழி).

4. கங்கோத்ரியிலிருந்து நிலங்பாஸ் (via Nelangpass) மார்க்கம். வெகுவும் தூரம். மற்றும் கடினமான பாதை.

இப்பிரயாணம் 2, 3 மாதங்களுக்குக் குறையாது. கையில் சமையல் சாமான்கள் எடுத்துக்கொண்டே செல்ல வேண்டும். 10 ஜனங்களுக்குக் குறையாமல், கையில் மிருகங்களினின்றும் பாதுகாப்புக்காக துப்பாக்கிகள் வைத்துக் கொண்டே செல்லவேண்டும்.

[பக்தியுள்ளோர்கள், விடாமுயற்சியுடையவர்கள், திடகாத்திரமுள்ளவர்கள் மாத்திரம் இந்த யாத்திரையை செய்ய பிரயத்தினம் செய்யலாம்.]

# ஸ்ரீ பத்ரி யாத்திரை—மார்க்கத்தின் படம்—(வடதிசை)




Rajagopal Photo-Zinco & Printing Works, Fort, Bangalore City.

## தங்குமிடங்கள் அல்லது சட்டிகள்.

1. ஹரித்வாரம்
2. ரிஷிகேஸ்
3. முனிகிரேடி
4. லக்ஷுமண்ஜ-ஜுலா
5. கரூரசட்டி
6. குலார்சட்டி
7. நயிமோஹன்
8. பிஜனி
9. குண்ட்சட்டி
10. பண்டார்பேல்
11. மஹாதேவ்
12. சேமல்சட்டி
13. கண்டிசட்டி
14. வியாசகாட்
15. உம்ரசு
16. தேவப்பிரயாக்
17. ராணிபாக்
18. கோல்டசட்டி
19. ராம்பூர்சட்டி
20. வில்வகேதார்
21. ஸ்ரீநகர்
22. சுக்ரட
23. பட்டிசேர
24. கண்கர
25. நர்கோட
26. குலாப்ராய்
27. ருத்திரபிரயாக்
28. சிவநந்தி
29. கமேர
30. சோடபீபல்
31. கர்ணபிரயாக்
32. ஜெய்கண்டி
33. நங்கசு
34. சோன்ல
35. நந்தபிரயாக்
36. சமோலி
37. மத
38. ஸியாஸய்ன்
39. ஹத்
40. பீபல்கோடி
41. கரூரகங்க
42. பாதாளகங்க
43. குலாப்சோடி
44. ஹிலாங்கு
45. ஜோஷிமடம்
46. விஷ்ணுபிரயாக்
47. காட்சட்டி
48. பாண்டுகேஷ்வர்
49. லம்பாகர்ஹ
50. ஹனுமான்சட்டி
51. பத்ரிநாராயணன் (பத்ரிகாஸ்ரமம் or வதரியாச்சிரமம்)

பத்ரீநாராயணனிலிருந்து திரும்பும் மார்க்கத்தின் விவரம்.

1. பத்ரீநாராயணனிலிருந்து கர்ணபிரயாக் மார்க்கம் ரிஷிகேஸ் போக 169 மைல்கள்.

2. பத்ரீநாராயணனிலிருந்து கர்ணபிரயாக் கானயின் மார்க்கமாய் ராம் நகரம் ரயில்வே ஸ்டேஷன் செல்ல 164 மைல்கள்.

வழியிலுள்ள (ஷிரிகோட்டிலிருந்து (Shrikot) 38 மைல்கள் ராம்நகரம் வரையிலும் போக மோட்டார் வண்டிகள் கிடைக்கின்றன).

3. பத்ரீநாராயணனிலிருந்து கானயின் மார்க்கமாய் ராணிகேட் செல்ல 148 மைல்கள்.

(ராணிகேட்டிலிருந்து வடக்கே அல்மோராவுக்கும் தெற்கே காத்கூடம் (Kathgodam) என்னும் ரயில்வே ஸ்டேஷனுக்கும் சுலப வாடகைக்கு மோட்டார் வண்டிகளோடுகின்றன).

[அடியேனுக்குத் தமிழ் பாஷையின் பழக்கமில்லாததால் கூடிய வரையிலும் செந்தமிழில் இக்கிரந்தத்தை எழுத முயன்றிருக்கிறேன். குற்றங் குறைகளை மன்னிக்கவும்.]

100 முதல் 102வது முடிய ஹிமயகிரி பர்வதத்தின்
மீதுள்ள ஆழ்வார்களால் மங்களாசாசன
மாகப்பெற்ற திவ்ய தேசங்களின்
யாத்திரை முற்றுப்பெற்றன.

---

## 103. நைமிசாரண்யம் 99.

மங்களாசாசனம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
1ம் பத்து 6ம் திருமொழி 10 பாசுரங்கள்.

ப்ரபாவம் :—தேவராஜன்—ஸ்ரீஹரி லக்ஷ்மி—புண்டரீகவல்லித்தாயார்—ஸ்ரீஹரி விமானம்—திவ்ய விஸ்ராந்த தீர்த்தம்—கிழக்கே திருமுக மண்டலம்—நின்றதிருக்கோலம்-தேவ ரிஷிகள், இந்திராதிகளுக்கும், ஸூதருமனுக்கும் ப்ரத்யக்ஷம்.

குறிப்பு:—இவ்விடத்தில் ப்ரபாவத்தில் கண்டிருக்கும் சந்நதி கிடையாது. இந்தப் ப்ரபாவத்தை முன்னுகக் கொண்டு, ஹரிப்ரபன்ன ராமாநுஜ ஸ்வாமியென்னும் ஓர் உத்திராதி வைஷ்ணவர் தென்னுட்டில்சென்று பணம் வசூல் செய்து, ஓர் சந்நதி புதிதாய்க் கட்டியிருக்கிறுர். உற்சவ முதலான விழாக்களும், தென்னுட்டாரைப் போலவே நடத்துகிறுர். சாதுக்களுக்கும் சதாவர்த்தி நடத்துகிறுர். பத்ரீ நாராயணன் போய் திரும்பிவரும் தென்னுட்டு யாத்ரீகர்கள், இங்கு வந்து தரிசினம் செய்துபோவது சாதாரணம். அவர்களுக்கும் தங்க இடமும், தளிகை வசதிகளும் செய்கிறுர். வடதேசத்தார் நம்பிக்கைக் கொண்டிருக்கும் 8 வைகுண்டங்களென்றும், ஸ்வயம்விக்த ஸ்தலங்களென்று சொல்லும் வைகுண்டங்களில் இதுவுமொன்று. இங்கு கடவுள் அரண்யரூபியாய் இருக்கிறுரென்று சொல்லப் படுகிறது. ஆகையாலேயே இங்கு சந்நதி கிடையாது போலும். இவ்விடம் வியாசர் முதலான ரிஷிகள் சதா

தபஸ் செய்துக்கொண்டிருப்பதாக நம்பிக்கை. பூர்வத்தில் ரிஷிகள் ஸ்ரீ மஹாவிஷ்ணுவை யடைந்து தாங்கள் எவ்விடம் வாசஞ் செய்யவேண்டுமென்று கேட்டதாகவும், அவர் தன் சக்கிரத்தை யெறியுவதாகவும், அது விழுமிடத்திலிவர்கள் வசிக்கவேண்டுமென்று சொன்னதாகவும், அம்மாதிரியே சக்கிரம் விழுந்த விடமே இந்த ஸ்தலத்தில் இப்பொழுது சக்கிர வடிவாயிருக்கும் சக்ர தீர்த்தமென்றும், பக்கத்திலிருக்கும் ஆரண்யத்தில் வியாசர்முதலான ரிஷிகள் தபஸ் செய்துகொண்டிருக்கிறாரென்றும், கோமுகி யென்னும் பக்கத்திலோடும் நதியில் ஸ்நானம் செய்வது புண்ய மென்றும் நம்பிக்கை. இவ்விடம் யாத்ரீகர்கள் வந்தால், முதலில் சக்ரதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, பின்பு கோமுகி நதியில் ஸ்நானம் செய்தபின் எதிரில் காணும் அரண்யத்தை நமஸ்கரித்துக்கொண்டால் இத்தலத்தின் யாத்திரை முடிந்த தாக நம்பிக்கை.

வட நாட்டார் நம்பியுள்ள 8 வைகுண்டங்களாவன :—

(ஸ்வயம்விக்தஸ்தலங்கள்)

1. பத்ரீநரயணன். இவ்விடம் கடவுள் தப்த ரூபி அதாவது உஷ்ண ரூபி—இவ்விடம் உஷ்ணமாய் கொதிப்புடன் மலையிலுள்ளிருந்து வெளியே வரும் ஓர் நீரருவியுண்டு. யாத்ரீகர்கள் இந்த ஜலத்தில்தான் ஸ்நானம் செய்வார்கள்.

2. முக்தீ நாராயணன் இந்த ஸ்தலம் நேப்பால் தேசத்திலுள்ளது. நேப்பாலின் முக்கிய பட்டணமாகிய காட்மண்டு என்னும் ஊரிலிருந்து வட மேற்கில் 180 மைல் தூரத்திலுள்ளது. கடின

மான மலை வழி. சத்திரங்களும், கடைகளும் வழியில் கிடையாதென்கிறார்கள். வழியில் கிராமங்களில் யாத்ரீகர்கள் தங்கவேண்டும். மனித மாம்சத்தை புசிக்கும் ஜனங்களும் (Canibals) அந்த வழியிலுள்ளாரென்று தெரிகிறது. இவ்விடம் கடவுள் சீதளரூபியா யிருக்கிறாரென்று சொல்லப்படுகிறது. இத்தலம் சமுத்திர மட்டத்தைவிட சுமார் 26,000 அடி உயரமுள்ளது.

3. நைமிசாரண்யம். இவ்விடம் கடவுள் அரண்ய ரூபமாயிருக்கிறாரென்று சொல்லப் படுகிறது. கோமுகி நதியின் இடபுரமுள்ள காட்டுப்ரதேசம்.

4. புஷ்கரன். இந்த ஸ்தலம் அஜ்மீரிலிருந்து கிழக்கே 8 மைல் தூரத்திலுள்ளது. இவ்விடம் கடவுள் தீர்த்த ரூபி யென்று சொல்லப்படுகிறது. ஒரு பெரிய குளமிருக்கிறது. இதற்குத்தான் பூஜை. (படத்தைப் பார்க்கவும்.)

இவை நான்கும் வட நாட்டின் வைகுண்டங்களெனப் படுகின்றன.

5. திருவேங்கிடம். (திருப்பதி அல்லது பாலாஜி) இவ்விடம் கடவுள் சேஷ (மலை) ரூபி.

6. ஸ்ரீமுஷ்ணம். தென் ஆர்காடு அல்லது கடலூர் ஜில்லாவிலுள்ள ஸ்தலம். சிதம்பரத்திற்கு வடமேற்கே 25 மைல் தூரத்திலுள்ளது. (ஸ்வயம் வித்த ஸ்தலமெனப்படும்). இவ்விடம் கடவுள் வாயு ரூபி யெனப்படும். இந்த ஸ்தலம் ஜில்லிகா



புஷ்கரன் (PUSHKAR Near Ajmeer)
(கடவுள் ஜலரூபி—இக்குளத்திற்குத்தான் பூஜை).

வனமெனப்படும். (தண்டகாசுரனை விஷ்ணு இவ்விடத்தில் வராக ரூபியாய் அவனுடைய ஸ்வாசத்திலிருந்து பிராண வாயுவை இழுத்து அவனை மடியச் செய்ததாக புராணம் ஏற்பட்டிருப்பதால், இவ்விடம் விஷ்ணு வாயு ரூபி யெனப்படும்).

7. ஸ்ரீரங்கம். திருச்சினப்பள்ளியின் சமீபமுள்ளது. இவ்விடம் விஷ்ணு ப்ரணவ ரூபி யெனப்படும். மூலஸ்தானத்தின் விமானம் ப்ரணவாகாரத்தைப்போலிருக்கிறதை கவனிக்கவும்.

8, தோதாத்ரி. சிரிவரமங்கை யென்றும் வானமாமலை அல்லது நங்குனேரி என்றும் சொல்லப்படுகிறது. S. I. Ry. திருநெல்வேலிக்குத் தெற்கே 18 மைல் தூரத்தில் நாகர்கோவில் போகும் கற்சாலையிலுள்ளது. இவ்விடம் விஷ்ணு திலரூபி அல்லது தைலரூபி யெனப்படும். தினமும் மூலஸ்தானத்திற்கு எள் எண்ணெய் அபிஷேகம் நடக்கிறது. இவ்விடம் எண்ணெய் கிணறு ஒன்றிருக்கிறது.

(5 முதல் 8வரை தென்னாட்டிலுள்ள வைகுண்டங்களெனப்படுகின்றன.)

மார்க்கமும் வசதியும்:—ஈஸ்டு இந்தியா ரெயில்வேயிலுள்ள (E. I. Ry.) லக்னோ என்னும் பட்டணத்திற்கு

மேற்கேயுள்ள பாலமு என்னும் ஜங்ஷனிலிருந்து வடக்கே ஸித்தாபூருக்குச் செல்லும் கிளை லைனிலுள்ள ஓர் சிறு ஸ்டேஷன். நிம்சார் (Nimsar) என்று ஆங்கிலேய பாஷை யில் சொல்லப்படுகிறது. ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து ஊருக்கு சுமார் 1 மைல் தூரம். இவ்விடம் பண்டாக்கள் என்னும் பிராமண புரோகிதர்கள் சுமார் 2,000 வீட்டுக்கா ரர்களிருக்கிறார்கள். அவர்களிருக்கும் வீடுகளும், தெருக் களும் செழிப்பில்லாமல் பாழாயிருக்கின்றன. இவர்களு டைய ஜீவனம், யாத்ரிகர்களால்தான். யாத்ரிகர்களை அழை த்துச்சென்று திர்த்த தரிசின முதலானதுவைகள் செய்து வைப்பதாகவும், சாப்பாடு, இடமுதலான சௌகரியங்களும் வைதிகச் சடங்குகளும் செய்துவைப்பதாகச் சொல்லி யாத் ரிகர்கள் கொண்டுவரும் பணத்தையெல்லாம் செலவழிக்கும் வழி செய்துவிடுவார்கள். ஆகையால், தென்னாட்டு யாத்ரீ கர்கள் இவர்களிடம் சேராமல் நேராக இராமாநுஜகூடம் சென்றால், அவ்விடமுள்ளவர்களும், மடத்திலுள்ள மஹந்து வும் யாத்ரிகர்களுக்கு வேண்டிய அநுகூலங்கள் பிரதிபலன் கோராமலே செய்வார்கள். சகஜமாய் பத்ரீ நாராயணன் யாத்திரைசெய்து திரும்பும் தென் தேசத்திய வைஷ்ணவர் கள் யாவரும் இத்தலத்திற்கு வந்து இராமாநுஜகூடத்தில் தங்கித்தான் ஊர் திரும்புவார்கள். இவ்விடம் சத்திரங்க ளும், கடைகளும் உண்டு. ஸ்டேஷனிலிருந்து மாட்டு வண்டிகள் ஊருக்குள் போக கிடைக்கின்றன.

---

104. திருவயோத்தி. (அயோத்யா) 98.
மங்களாசாசனம்.

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி
3ம் பத்து 9ம் திருமொழி 8, 10ம் பாசுரங்கள்.
,, 10ம் ,, 4, 8ம் ,,
4ம் ,, 7ம் ,, 9ம் பாசுரம்.

குலசேகராழ்வாரருளிச் செய்த பெருமாள் திருமொழி
முதலாயிரம் 8ம் திருமொழி 6, 7ம் பாசுரங்கள்.
,, 10ம் ,, 1, 8ம் ,,

தொண்டரடிப்பொடியாழ்வாரருளிச் செய்த திருப்பள்ளி
[யெழுச்சி 4ம் பாசுரம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
10ம் பத்து 3ம் திருமொழி 8ம் பாசுரம்.

நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழி
7ம் பத்து 5ம் திருமொழி 1ம் பாசுரம்.

ப்ரபாவம்:—சக்ரவர்த்தித் திருமகன்—ரகுநாயகன்—சீதாபிராட்டி—புஷ்கல விமானம்—பரமபத ஸத்யபுஷ்கரிணி—ஸரயுநதி—வடக்கே திருமுகமண்டலம்—வீற்றிருந்த திருக்கோலம்—பரதாழ்வானுக்கும், தேவர்கள், முனிவர்களுக்கும் ப்ரத்யக்ஷம்.

குறிப்பு:—இது ஒருகாலத்தில் பெரிய இராஜதானி நகரமாயிருந்தது. இப்பொழுது இவ்விடம் பிரிட்டிஷ் சர்க்காரிலிருந்து வருஷ பென்ஷன் வாங்கும் ஹிந்து ராஜா ஒருவரிருக்கிறார். அவருடைய மாளிகை வெகுவும் பெரியது

ஊரின் மத்தியிலிருக்கிறது. மாளிகையின் வெளி வட்டார த்தில் பார்க்கத்தக்க கட்டிடவேலைப்பாடுகளமைந்த சிவன் கோயிலொன்றிருக்கிறது. இவ்வூரிலிப்பொழுது குடிகளில்லாமல் பாழாயிருக்கும் அனேக பெரிய கட்டிடங்களுண்டு. ஸ்ரீ ராமபிரானுடைய தாய்தந்தையர்களின் மாளிகை, ஸ்ரீ ராமபிரான் குழந்தைப் பருவமாயிருந்தபொழுது வளர்ந்து வந்த மாளிகை, விவாஹமானபின்பு தன் பத்னி சீதையுடன் வசித்துவந்த மாளிகையென்று சொல்லப்படும் கட்டிடங்கள் இப்பொழுதும் நல்லஸ்திதியிலிருக்கின்றன. ஸ்ரீராமபிரான் ஜனனஸ்தானமென்று சொல்லப்படுமிடம், இப்பொழுது ஒரு மகம்மதிய மசூதியின் முன்புறம் காம்பௌண்டிலுள்ளது. ப்ரபாவத்தில் கண்டிருக்கும் சந்நதி இப்பொழுது ஹனுமான்டேக்ரி என்றழைக்கப்படுகிறதுபோலும். இதில் ஒரு ஹனுமாரின் பெரிய கோயிலிருக்கிறது. இவ்வூர் சரயு நதியின் வலப்பக்கத்திலிருக்கிறது. ஓர் தென்னாட்டுவாசியாகிய ஸ்வாமி யோகி பார்த்தசாரதி ஐயங்கார் என்பவர் தென்னாட்டின் சந்நதியைப்போல் ஒரு விஷ்ணு சந்நதியும் சுற்றிலும் தங்குவதற்காக அறைகளும் கட்டியிருக்கிறார். அவர் சம்சாரம் இப்பொழுது ஜீவித்திருக்கிறார். அவர் பெயர் அம்மாஜி அம்மாள். ரெயில்வே ஸ்டேஷனிலிறங்கி "அம்மாஜிகா மந்தீர் ஜானா" என்றால் எல்லா வண்டிக்காரர்களும் அவ்விடம் அழைத்துச் செல்லுவார்கள். இவ்விடம் தென்னாட்டு பாஷை தெரிந்தவர்களும், ஜலவசதியுமுண்டு. இவ்விடமிருந்து சரயு நதியின் ஸ்நான கட்டம் சமீபம். இவ்வூரில் ஒவ்வொரு வீடுகளிலும் ஸ்ரீ ராமபிரான் விக்கிரஹத்தை வைத்துக்கொண்டு பூஜை செய்கிறார்கள். இவ்வூரிலிருந்து சுமார் 4 மைல் தூரத்தில், சரயுநதிக் கரையில்

குப்தகாட் என்னும் ஸ்நான கட்டமுண்டு. இவ்விடம்தான் ஸ்ரீ ராமர் தன் சேனைகளுடன் சரயுநதியிலிறங்கி மறைந்த தாகச் சொல்லப்படுகிறது. இங்கே யாத்ரீகர்கள் ஸ்நானம் செய்யப் போகிறார்கள். இவ்வூரில் ஸ்ரீராமநவமி உற்சவம் வெகு பிரபலம். அனேக லக்ஷக்கணக்கான ஜனங்கள் வந்து சேருகிறார்கள். இப்பொழுது இது முனிசிபல் டவுன் அல்லாவிட்டாலும் யாத்திரைவாசிகள் ஏராளமாய் வருவ தால், டிஸ்ட்ரிக்டு அதிகாரிகள் உற்சவ காலங்களில் யாத்ரீகர் களுக்கு வேண்டிய சுகாதார (Sanitary) பந்தோபஸ்துகள் செய்கிறார்கள். 3 மைல் தூரத்திலிருக்கும் பைசாபாத் (Fyzabad) என்னும் ஜில்லாவில் சேர்ந்த பட்டணம். குடிக்கும் தண்ணீர்க்குழாய்களுண்டு.

மார்க்கமும் வசதியும்:—இது ஈஸ்டு இந்தியா ரெயில்வே (E.I.Ry.) லைனிலுள்ள ஓர் ரெயில்வே ஸ்டேஷன். லக்னோ (Lucknow) என்னும் பட்டணத்திலிருந்து நேராக ரெயில் வண்டி வடகிழக்காய் இந்த ஸ்டேஷனுக்குச் செல்லும். காசி (Benares) ஸ்டேஷனிலிருந்தும் வடமேற்காய் பைசாபாத் லூப் லைன் மார்க்கமாயும், இந்த ஊருக்குப் போகலாம். அனேக சத்திரங்களுண்டு. பெரிய ஸ்தலமானதால், அனேக கடைகளுண்டு. ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து குதிரை (டாங்கா) வண்டிகள் ரூ. 0—6—0 வாடகைக்கு ஊருக்குள் செல்லும்.

105. சாளக்கிராமம். 100.

மங்களாசாசனம்.

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி
4ம் பத்து 7ம் திருமொழி 9ம் பாசுரம்.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழி
1ம் பத்து 5ம் திருமொழி 10 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—ஸ்ரீமூர்த்திப்பெருமாள்--ஸ்ரீதேவி நாய்ச்சியார்—கநகவிமானம்—சக்ரதீர்த்தம்—கண்டகிநதி--வடக்கே திருமுக மண்டலம்--நின்றதிருக்கோலம்-கண்டகி என்கிற தேவிக்கும், பிரஹ்ம ருத்ராதிகளுக்கும் பிரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதியும்:-இந்த ஸ்தலம் நேப்பால் (Nepal) ராஜ்யத்திலிருக்கிறது. ராஜ்யத்தின் முக்கிய பட்டணமாகிய காட்மண்டு என்னும் நகரத்திற்கு வடமேற்கில், சுமார் 60மைல் தூரத்தில் கண்டகி நதிக்கரைமேலுள்ளது. இவ் விடத்திலேயே சாளக்கிராம மென்னும் பூஜை மூர்த்திகளை கண்டகிநதியின் ஆழமான பள்ளங்களினின்றும், நேப்பால் ராஜாவின் அனுமதியின் (லைசென்சு) பேரில், முத்துசிப்பிகள் எடுப்பதைப்போல் அத்தேசத்து மனிதர்கள் எடுக்கிறார் கள். இந்த ஸ்தலம் முக்திநாராயணன் என்னும் க்ஷேத்திர த்திற்குப் போகும் வழியிலுள்ளது. முக்திநாராயணன் இவ்விடமிருந்து சுமார் 100 மைல் தூரம் இந்த க்ஷேத்தி ரத்திற்கு சுலபமாய்ப் போகமுடியாது. ஏனென்றால் சரி யான பாதை கிடையாது. பனிக்கட்டிகள் மூடின மலையின் பேரிலுள்ள சிறு கால்பாதையின் வழியாய்ப் போகவேண் டும். வண்டி முதலான சவாரி கிடையாது. வழியிலும் சத்திரங்கள், கடைகள் கிடையாது. 8, 10 மைல்கள் தூரமாயிருக்கும் கிராமங்களில்தான் இரவில் தங்கவேண் டும். சாப்பாட்டு சாமான்களைக் கையில் கொண்டுபோக வேண்டும். கூலியாட்கள் கிடைப்பார்கள். வெய்யல்

கலாத்தில் மலைமேல் பனிக்கட்டிகள் கரையும்பொழுதுதான் பிரயாணம் செய்யவேண்டும். ஒண்டியாய்ப் பிரயாணிகள் போகக்கூடாது. ஏனென்றால், மனித மாம்சத்தைத் தின்னும் ஜனங்கள் (Canibals) மலைமேல் போகும் பாதையின் சமீபம் வசிக்கிறார்கள். ஆகையால் 50, 60 ஜனக்கூட்டம் அல்லது சாதுக் கூட்டம் சேர்ந்து காட்மண்டிலிருந்து பிரயாணம் செய்கிறவரையிலும் நேப்பால் மஹாராஜா அனுமதி கொடுக்கமாட்டார். மேலும் ரக்ஸூல் (Raxul) என்னும் ரெயில்வே ஸ்டேஷன்தான் நேப்பால் ராஜ்யத்தின் எல்லையிலிருக்கும் சிறிய பட்டணம். அவ்விடமிருந்து வடக்கே சுமார் 75 மைல் மலைகளின்மீதில் ஏறிச்சென்றால் காட்மண்டு என்னும் முக்கிய பட்டணம் சேரலாம். ரக்ஸூல் என்னுமிடத்தில் நேப்பால் சர்க்காரின் ரெயில்வே லைன் ஆரம்பித்து 25 மைல்கள்தான் ஓடுகிறது. இது நேரோ கேஜ் (Narrow Gauge Line) லைன். 25 மைல் தூரம் வடக்கே காடுகளின் மார்க்கமாய் மலையடிவாரத்திலுள்ள அம்லக்கன்ஜ் (Amlak Ganj) என்னுமிடத்தில் ரெயில்வே லைன் முடிகிறது. இவ்விடம் ஊர் கிடையாது. நேப்பால் மஹாராஜாவின் சத்திரங்களிருக்கின்றன. இவ்விடமிருந்து தான் நேப்பால் தேசத்தில் இந்தியாவினின்றும் இறக்குமதியாகும் சாமான்கள் யாவும் மின்சார பலத்தினால் இரும்புக் கயிற்றின் (Electric Ropeway) வழியாய் 50 மைல் தூரம் சென்று காட்மண்டு சேரவேண்டும். அம்லக் கன்ஜினின்றும் மோட்டார் லாரிகள் ஹிமயகிரி மலையின் சந்துக்களின் மூலமாயும் (Mountain Creeks) மலையைக் குடைந்த குகைகளின் மூலியமாயும் (Tunnels) சுமார் 25 மைல் தூரமுள்ள கற்பாறையின் வழியாய் செங்குத்தான மலைகளிருக்கும்

அடிவாரத்திலுள்ள பிம்பேரி (Bhimperi) என்னும் ஊருக்குச் செல்லுகிறது. அவ்விடமிருந்து மலைகளின்பேரில் கால்வழியாய் 25 மைல் தூரம் சென்றால், முக்கிய பட்டணமாகிய காட்மண்டு என்னும் அழகிய செழிப்புள்ள நகரம் அடையலாம். ஆனால் ரக்ஸவுல் என்னுமிடத்திலிருந்து புறப்பட நேப்பால் மஹாராஜாவின் அனுமதியாகிய பாஸ் ஒன்று முன்னாடியே பெறவேண்டும். நேப்பால் ராஜ்யத்திற்குள் இந்தியாவிலுள்ள எந்த ஜனங்களையும் இப்பாஸின்றி விடமாட்டார்கள்.

[ஐரோப்பியர்கள், மஹம்மதியர்கள், கிரிஸ்துவர்கள், ஹிந்துக்கள் மற்ற வேறெந்த ஜாதியாரும் போகக்கூடாது.] ஆனால் சிவராத்திரி காலங்களில் மாத்திரம் சுமார் 15 நாட்களுக்கு ஹிந்துக்கள்மாத்திரம் பாஸன்றி நேப்பால் சென்று பசுபதி ஈஸ்வரரை தரிசினம் செய்து திரும்பிவிடவேண்டியது. திரும்பாவிட்டால் 15 நாட்கள் முடிந்ததும் (அதாவது சிவராத்திரிக்கு முன்பு 7 நாள், பின்பு 7 நாள் ஆக 15 நாட்கள் சென்றதும்) ஹிந்து பிரயாணிகளை நேப்பால் தேசத்து போலீசார், மற்றும் மிலிடெரி சிப்பாய்கள் ஹிம்சைபடுத்தி நேப்பால் தேசத்திற்கு வெளிப்படுத்துவார்கள். வெய்யல் காலத்தில் முதலில் நேப்பால் ராஜாவுக்கு சாளக்கிராமம் போவதாய் தெரியப்படுத்தி அனுமதியாகிய பாஸ் பெற்றுக்கொண்டு பிரயாணம் செய்யவேண்டும். (அடியேன் 1933-வருஷ சிவராத்திரி சமயத்தில் காட்மண்டு சென்று முன் சாளக்கிராமம் போக முடியாமல் திரும்பிவிட்டேன். மற்றும் சாதுக்கள் ஜமாதையில் சேரவேண்டும்). காட்மண்டில் காபி, டீ கடைகள் கிடையாது. நாடகம், சினிமா இல்லை.

மாட்டு, குதிரை வண்டிகள் கிடையாது. ஊரில் மின்சார விளக்குகளும், குடிக்கும் தண்ணீர்க்குழாய்களும் உண்டு. ஜனங்கள் மோசம், பொய், பிறட்டு செய்யாதவர்கள். தென்னாட்டைப்போல் மற்றவர்கள் காரியத்தில் பிரவேசிக்கமாட்டார்கள். ஜனங்கள் வெகு அழகாயும், சிகப்பு வர்ணமாயுமுள்ளவர்கள். பால், தயிர் வெகுவாய்க் கிடைக்கும். 80 ரூபாய் இடையுள்ள 1சேர் மெல்லிய அரிசியின் விலை 0-0-9, அதே இடையுள்ள, கோதுமை மாவின் விலை 0—0—6, உருளைக்கிழங்கின் விலை 3, அல்லது 6 பை.

**106. துவாரகை (துவரை) (Dwaraka) 104.**

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி

4ம் பத்து 7ம் திருமொழி 9ம் பாசுரம்.
5ம் ,, 4ம் ,, 10ம் ,,

ஆண்டாளருளிச்செய்த நாய்ச்சியார் திருமொழி

முதலாயிரம் 4ம் திருமொழி 8ம் பாசுரம்.
,, 9ம் ,, 8ம் ,,

திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரிய திருமொழி

6 ,, 6 ,, 7ம் ,,
,, 8 ,, 7ம் ,,

நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழி

5 ,, 3 ,, 6ம் ,,

ப்ரபாவம் :-கல்யாணநாராயணன் (கண்ணன்) கல்யாணநாய்ச்சியார் — அஷ்டமஹிஷிகள்— ஹேமகூடவிமானம்— கோமுதிதீர்த்தம்—மேற்கே திருமுகமண்டலம்—வீற்றிருந்த திருக்கோலம்—திரௌபதிக்கு ப்ரத்யக்ஷம்.

குறிப்பு:—பெருமாள் நின்றதிருக்கோலமாயிருக்கிறார். எதிரில் துவஸ்தம்பமில்லை. துவாரபாலகர்கள் கிடையாது. பெருமாளுக்கு எதிரில் சுமார் 50 அடி தூரத்தில் பெருமாளைப்பார்த்தாப்போல் ஸ்ரீ கிருஷ்ணனின் தாயாராகிய தேவகியின் சந்நதியிருக்கிறது. இவ்விடத்தில் தென்னாட்டு சந்நதிகளைப்போல தரிசினத்திற்கு கஷ்டமில்லை. சந்நதிக்கு தென் மேற்கில் 2, 3, பர்லாங்கு தூரத்தில் மேல் சமுத்திரமிருக்கிறது (Arabian Sea). தென்னண்டை ½ பர்லாங்கு தூரத்தில் கோமுகி கங்கையென்று நதியாய் பாவிக்கப்படும் ஒரு சமுத்திர நீரோட்டமுளது. இந்த ஊர் சமுத்திரக் கரையில் உயரமாயிருக்கும் மணற்குன்றின்மேல் கட்டப் பட்டிருக்கிறது. இந்த ஊருக்கு சுமார் 2, 3 மைல் தெற்கில் சமுத்திரத்தின் ஜலம் பள்ளமாயிருக்கும் கீழ்த் திசையில் சிறிது தூரம் உட்சென்று வடக்கே திரும்பி மற்றும் மேற்கு திசையாய் இந்த சந்நதியின் தென்பாகமாய் ஓடி சமுத்திரத்தில் சேருகிறது. இதற்கே கோமுகிநதி என்று பெயர். முழுதும் உப்பு ஜலம். இதில் யாத்ரீகர் புதிதாய் வரும்பொழுது ரூ. 1—1—0 கொடுத்து கரைமேலிருக்கும் பரோடா உத்தியோகஸ்தர்களிடமிருந்து ஒரு சீட்டு பெற்றுக்கொண்டே ஸ்நானம் செய்யவேண்டும். முதல் நாள் சீட்டு பெற்றுக்கொண்டால், பின்பு திரும்பி வரும் வரையிலும் ஸ்நானம் செய்யலாம். சீட்டு பெறாவிட்டால் ராஜாவின் சிப்பாய்கள் அந்த நதியில் ஸ்நானம்செய்ய விட மாட்டார்கள். இவ்வூர் பரோடா (Baroda) மஹாராஜாவின் தேசத்திலிருப்பதால், இக்கோயில் மஹாராஜாவைச் சேர்ந்தது. இந்த ரூ. 1-1-0ல் ரூ. 1 மஹாராஜாவைச் சேரும்' 0—1—0 முனிசிபாலிடியைச் சேர்ந்தது. சந்நதிக்குள்

போனால் ரூ. 0–8–6 கொடுத்து சீட்டு வாங்கிக்கொண்டால் மூலஸ்தான மூர்த்தியை தொட்டு (ஸ்பரிசித்து) தரிசினம் செய்யலாம். இதுவும் ஒரேதடவைதான் ரூ.0-8-6 கொடுக்க வேண்டும். திரும்பி வரும்வரையிலும் தினமும் ஸ்பரிசித்து தரிசினம் செய்யலாம். ரூ. 1 கொடுத்தால் தினமும் காலை 8மணிக்கு நடக்கும் அபிஷேகத்தில் பணம் கொடுத்தவர்கள் தங்கள் கையால் அபிஷேகம் தினமும் செய்யலாம்.

குறிப்பு :—(தென்னாடாகிய கர்மபூமியின் சந்நிதிகளுக்கும், வடநாடாகிய ஞானபூமி யெனப்படும் சந்நிதிகளுக்கும் வித்தியாசம் பாருங்கள்). யாத்ரீகர்களுக்கு தரிசினம் செய்ய ஒரு விதமான தொந்திரவும் கிடையாது. ஸ்ரீரங்கம் முதலானயிடங்களைப்போல் திரைபோட்டு மூடுவதும், திருவேங்கிடம் முதலான விடங்களைப்போல் ரூபாய் கொடுத்து தரிசினம் செய்வதுமான வழக்கங்கள் இந்த வட நாட்டுத் திருப்பதிகளில் கிடையாது. பத்ரீநாராயணத்திலும் தரிசினத்திற்கு பணம் கிடையாது. தொண்டை, நடு, சோழ, மற்றும் பாண்டிய நாட்டுத் திருப்பதிகளாகிய சில சந்நிதிகளில் பணமின்றி தரிசினம் கிடையாதென ஏழை யாத்ரீகர்களுக்கு வெகு சிரமத்தைக் கொடுக்கிறார்கள். பாவம் ஏழை யாத்ரீகர்கள் தரித்திரத்தினால் தரிசினத்திற்கு பணம் கொடுக்க சக்தியில்லாமல் அனேக ஸ்தலங்களில் தரிசினமின்றி திரும்புவது அடியேனுக்கு நன்றாய்த் தெரியும். சினிமா, நாடகம் கண்காக்ஷிமுதலான விடங்களில் உள்ளே செல்ல ரேட்டுகள் (Entrance Fees) ஏற்படுத்தியிருப்பதைப்போல் டிரஸ்டிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கும் சில சந்நிதிகளில் உள்ளே பிரவேசிக்க பிரவேச கட்டணம் (வைகுண்ட ஏகாதசி சமயத்தில் ஸ்ரீரங்கத்தில்

பார்க்கலாம்), கற்பூர தீபாராதனை கொடுக்க கட்டணம் (திருவேங்கடமென்னும் திருப்பதியில் இந்த தமாஷ் பார்க்கலாம்) ஏற்படுத்தியிருக்கிறார்கள். இவைகளல்லாமல், அர்ச்சனை, சகஸ்ரநாமம், அஷ்டோத்ரம், அபிஷேகம் என்று அனேகவிதமான ரேட்டுகள் ஏற்படுத்தி, ஏழை யாத்ரிகர் பணத்தைப் அபகரித்து விடுகிறார்கள். இம்மாதிரியான பழக்கம் மலைநாடு மட்டும். வடநாட்டு திருப்பதிகளில் கிடையாது. கோயில் அதிகாரிகளின் ரேட்டுகள், அவர்கள் குறிப்பிட்டிருக்கும்காலநேரங்களில்தான். மற்றகாலங்களில் அர்ச்சகரின் இஷ்டமான ரேட்டு கொடுத்தால் தரிசினம் செய்து வைப்பார். சில சந்நதிகளில் இவ்வளவு பணம் கொடுத்தால் தான் கர்ப்பகிரஹத்தின் கதவைத்திறந்து தரிசினம் செய்து வைப்பேனென்கிறார்கள். இந்த சந்நதியில் தேங்காய் உடைக்கும் பழக்கமில்லை. மூலஸ்தானத்தைத் தொட்டுக்கொண்டு (பிரதக்ஷணம்) சுற்றிவரலாம். தென்னாட்டுக் கோயில்கள்போல் வட நாட்டில் சந்நதிகள் கட்டுவதில்லை. வட நாடுகளில் சந்நதி வெகு ரமணீயகரமாயும், வெளிச்சம், காற்று உண்டாயிருக்கும்படியாயும் கட்டியிருக்கிறார்கள். அர்ச்சகர்களின் இஷ்டம்போல் திரை மூடுவதும், திறக்கிறதும் ஒன்றும் கிடையாது. யாத்ரிகர்கள் தரிசினமானவுடன் தென்னாட்டாரைப்போல் அனாவசியமாய் சந்நதியில் நிற்காமல் சென்றுவிடுவார்கள். நம்மாழ்வாரருளிச்செய்த பிரகாரம் வருவார் செல்வாரென்றேயிருக்கும்.

[நம் தென்னாட்டின் யாத்ரிகர்கள் வெகுவாய் பெருமாளுக்கு அணியப் பண்ணியிருக்கும் விலையுயர்ந்த ஆபரணங்களை வியப்புடன் பார்த்துக்கொண்டிருப்பதால் சந்நதிவிட்டு சீக்கிரமாய்ச் செல்லும் வழக்கமில்லைபோலும்].



**கோமுகிதுவாரகை (Dwaraka)**

தேவஸ்தானம்—கோமுகிகட்டம்.



**பேட்-துவாரகை (Bet Dwaraka)**

ரன்சோட்ஜி—மூலஸ்தானம்.

இந்த துவாரகை யென்பது இரண்டு ஸ்தலங்களுண்டு. ரெயில் ஏறிச்சென்றால், துவாரகா (Dwaraka) என்னும் ரெயில்வெ ஸ்டேஷன் மேற்சொன்ன கோமுகி துவாரகை என்பது. இவ்விடத்தில் ஸ்ரீ கண்ணபிரான் அரசுபுரியுங் காலத்தில் இதை முக்கிய ராஜதானிப் பட்டணமாய் வைத்துக்கொண்டிருந்ததாகவும், தான் தன் பத்னிகளுடன் வசித்துவந்த விடம் இவ்விடமிருந்து 20 மைல் வடக்கே பேட்துவாரகா [Bet (Island) Dwaraka] என்னுமிடமென்றும் சொல்லுகிறார்கள்.

இந்த கோமுகி துவாரகையில் அனேக சத்திரங்கள், மற்றும் பெரிய கடைகளுண்டு. சமுத்திரக் கரையின்மீதிருப்பதால் ஜலக்கஷ்டமதிகம். உப்புநீர் கிணறுகள் அதிகம். ஊருக்கு வெளியில் ½ மைல் தூரம் சென்றால்தான் ருசியான குடிக்கும் ஜலம் கிடைக்கும். ஆகையால் இவ்வூரில் பீப்பாயில் குடிக்கும்ஜலம் கொண்டுவந்து விற்கிறார்கள். ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து ஊர் சுமார் 1மைல் தூரம். ஊர் நன்றாய்க் காணும். ஸ்டேஷனிலிருந்து வரும் வழியில் மத்திய பாகமாகிய ½ மைல் தூரத்தில் ஒரு இராமாநுஜகூடமிருக்கிறது. இதின் மகந்து விஷ்ணுசித்தர் என்பவர். இவ்விடத்தில் யாத்ரீகர்கள் சிலருக்கு சௌகர்யமாய்த் தங்க இடவசதியுண்டு. இங்குள்ள தோட்டத்தில் 2 கிணர்களுண்டு. ஜலம் குடிக்க உபயோகப்படும். சாதுக்களுக்கு சதாவர்த்தியும், தென்னாட்டாருக்குப் பிரசாதமும் கிடைக்கிறது. இந்த ஊரில் சிமென்ட் (Cement Works) செய்யும் ஒரு பெரிய கம்பெனியிருக்கிறது. ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து ஊருக்குப்போக குதிரை டாங்கா வண்டிகளுண்டு. ஊருக்குள்ளும் அனேக அழகிய கட்டிடங்கள் சமுத்திரக்

கரையின்மீது கட்டப்பட்டிருக்கின்றன. இது பரோடா சமஸ்தானத்தைச்சேர்ந்த ஓகா(Oka)ஜில்லாவின் தாலுக்கா பட்டணம். ஊரைச் சுற்றிலும் வெட்டாரவெளியாயிருக்கிறது. மரங்களில்லே. இவ்விடமிருந்து மோட்டார் வண்டிகள் 15 மைல் தூரமுள்ள கோபி தலாப் என்னும் (Gopi Talab Ghat) ஸ்தலம் செல்லுகின்றன. நபர் 1க்கு சார்ஜ் அணு 10, அல்லது 12. போகும் வழியில் நாகேஷ்வர் மஹாதேவ் என்னும் 10½ மைல் தூரமுள்ள இடத்தில் இந்தியாவிலுள்ள துவாதச (12) ஜோதிர்லிங்கங்களில் ஒன்றாகிய நாகேஷ்வர் மஹாதேவரின் லிங்கமிருக்கிறது. யாத்ரீகர்கள் இதைத் தரிசினம் செய்துக்கொண்டு முன்பு 3 மைல் தூரமுள்ள கோபி தலாப் என்னுமிடம் செல்லுகிறார்கள். இதுவும் பரோடா மஹாராஜாவின் சமஸ்தானத்திலிருக்கிறது. இது வெகு சிரிய கிராமம். இவ்விடம் ஒரு சிறிய பாழடைந்த குளமிருக்கிறது. இந்தக் குளக்கரையில் சில மடங்களும், சாதுக்களின் சிறிய கோயில்களுமுண்டு. பரோடா சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் இவ்விடம் வரும் ஒவ்வொரு யாத்ரீகர்களிடமும் 0—1—0 வசூல் செய்து கொண்டு அந்தக்குளத்தில் ஜலத்தைத் தொடவிடுகிறார்கள். ஸ்ரீ கண்ணபிரானை (ஆயர்பாடி) கோகுலத்திலிருந்து தேடிக்கொண்டு துவாரகைக்கு வந்த கோபிகளையெல்லாம் கண்ணன் அவர்களுடன் நடனஞ்செய்துக்கொண்டு வந்து அவர்களை யெல்லாம் இந்தக் குளத்தில் கொண்டுவந்து மூழ்கச்செய்து அவர்களுக்கு மோக்ஷம் கொடுத்ததாகவும், அவர்கள் இக்குளத்தில் மறைந்துபோனதினிமித்தம் இதில் ஸ்நானம் செய்கிறவர்கள் மோக்ஷத்திற்கு போவார்களென்ற நம்பிக்கையுடன், வெகுவாய்ப் பெண்களும், சில

ஆண்களும் இக்குளத்தில் கண்டிப்பாய் ஸ்நானம் செய்யாமல் முன் போவதில்லை. மோட்டார் வண்டிக்காரர்களும் யாத்ரீகர்கள் ஸ்நானம் செய்யும் வரையிலும் இவ்விடம் காத்துக்கொண்டிருந்து பின்னிட்டு இவர்களை இவ்விடமிருந்து 2 மைல் தூரமுள்ள கோபிதலாப்காட் (Gopi Talab Ghat) எனப்படும் சமுத்திரக்கரைக்குக் கொண்டு போய் விட்டுவிடுவார்கள்.

இந்த இடத்திலிருந்து 3 மைல் தூரத்தில் ஒரு தீவு எதிரில் காணப்படுகிறது. சாதாரணபடகுகளில் (Country Crafts) அவ்விடம் செல்லவேண்டும். நபர் ஒன்றுக்கு 4 அணாவுக்கு அதிகமில்லை. எதிர்காற்றில்லாமலிருந்தால் குறைந்த சார்ஜூக்கு வருவார்கள். எதிரில்காணும்தீவுதான் பேட் துவாரகா [Bet (or Island) Dwaraka]. பேட் என்றால் சிறிய தீவு. சுமார் 4 or 5 மைல் சுற்றளவுள்ளது. இவ்விடத்தில் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா தன் பத்னிகளுடன் வாசஞ்செய்துகொண்டிருந்த பெரிய மாளிகை வீடு இருக்கிறது. கிருஷ்ணன் வீடு, சத்யபாமா வீடு, ருக்மணி வீடு, ராதாவின் வீடு, அணிருத்ரனின் வீடு என்று தனித்தனி அரைகள் பிரிக்கப்பட்டிருக்கிற ஒரு பெரிய வீடு அந்த வீடு அவ்வூருக்குள் உள்ள வீடுகளுக்கெல்லாம் மிகவும் பெரியது. ஒரு ராஜாவின் அரண்மனை எவ்விதமாய்ப் பெரியதாய் இருக்கின்றதோ, அம்மாதிரியாகவே இதுவும் பெரிய அரண்மனையாகக் காண்கிறது. இது சாதாரண பழைய காலத்து மெத்தை வீடு (தார்சு கட்டடம்). ஒவ்வொரு அரைகளிலும் யார் யார் வசித்திருந்தார்களோ, அவரவர்களுடைய சிலை ஒவ்வொன்றைவைத்துப் பூஜை நடக்கிறது. இவ்விடம் ஸ்ரீ கிருஷ்ணன் வீட்டிற்கு சம்மந்தப்பட்ட ஒரு

மஹந்திருக்கிருர். அவரே பூஜை செய்பவர். ஸ்ரீ ராதா வின் வீட்டிற்கு ஒரு பூஜைசெய்யும் மஹந்திருக்கிருர். இவ்விடம் ருக்மணியைவிட ராதாவுக்கு மரியாதை அதிகம். வீடும் பெரியது, செல்வமும் அதிகம். அவ்விடத்தில் ஜனங்கள் சாதாரணமாய் ருக்மணியின் வீடென்றும், ராதா ராணியின் வீடென்றும் சொல்லுகிருர்கள். ராதாவைத் தான் ராணியென்று கூப்பிடப்படுகிறது. இந்த வீடு ஒரு பெரிய ஆலயமாய் பாவிக்கப்படுகிறது. யாத்ரீகர்கள் உள் ளே சென்று தரிசினம் செய்ய ரூ. 1—2—0 கொடுத்து முதல் தடவை சிட்டு வாங்கிக்கொண்டால் எத்தனை தடவை யானுலும், அவ்விடமிருக்கும்வரையிலும் தரிசினம் செய்ய லாம். சிட்டு வாங்காமல் போனுல் தரிசினம் செய்ய முடி யாது. ரூ. 1 பரோடா ராஜாவிற்கும், 0—2—0 இவ்வூர் முனிசிபாலிடிக்குச் சேரும். இவ்வூரில் ஜலக்கஷ்டமதிகம். மகம்மதியர்களும், அவர்கள் மசூதிகளதிகம். சத்திரங்களும் கடைகளுமுண்டு. பெரிய கப்பல் வியாபாரஸ்தலம். இவ் விடம் 0—8—6 அணு கொடுத்தால் மூலஸ்தானத்தைத் தொட்டு தரிசினம் செய்யலாம். இது சந்நதிக்கு சேறும் வரும்படி. கசோரிய தலாப் (Kachoria Talab or tank) என்ற குளத்தில் அனேக கிணறுகள் வெட்டியிருக்கிருர்கள். இந்த கிணறுகளின் ஜலம் குடிக்க நன்ருயிருக்கும். கிணறு களில் வெய்யல்காலத்தில் ஜலம் வற்றிப்போகும். இக்குளக் கரையின் வடவண்டை சங்குநாராயணன் என்னும் ஒரு பெரிய சந்நதியுண்டு. இதற்கு எதிர்பக்கத்திலிருக்கும் ஒரு குளத்தில்தான் ஸ்ரீ கிருஷ்ணன் சங்காசூரனென்னும் ராக்ஷசனைக் கொன்றதாகவும், அதன் காரணத்தினுல் சங்க நாராயணன் என்னும் பெயர்வந்ததாகவும்சொல்லுகிருர்கள்.

கசோரியா தலாப் என்னும் குளத்திற்குக் கிழண்டை ராமா நுஜகூடமிருக்கிறது. தங்கவசதிகளும், பக்கத்தில் ஜல வசதியுமுண்டு. இவ்வூரிலிருந்து எதிர்புறமாய் (மேற்கே) 1மைல் தூரத்தின் சமுத்திரத்தைப் படகுகளின் வழியாய்த் தாண்டினுல் (சார்ஜு நபர் 1க்கு 0—2—0) ஓகா போர்ட் (Okha Port) என்னும் மீடர்கேஜ் ரெயில்வே ஸ்டேஷனிருக்கிறது. இவ்விடமிருந்து ரெயில் ஆரம்பித்து, கோமுகி துவாரகா மார்க்கமாய் பம்பாய்முதலான விடங்களுக்குச் செல்லுகின்றது. ரெயில் மார்க்கமாயும் கோமுகி துவாரகையிலிருந்து ஓகா போர்ட் ஸ்டேஷன் (Okha Port Station) சென்று எதிர் கரையில் 1மைல் தூரமுள்ள பேட் துவாரகா என்னும் ஊருக்கும் செல்லலாம். ஆனுல் ரெயில் மூலியமாய்ப் போய்த் திரும்பினுல், கோபி தலாப் தரிசின ஸ்நானமும், நாகேஷ்வர்நாத் என்னும் லிங்கத்தின் தரிசின மும் கிடைக்காது.

மார்க்கம் :–இந்த துவாரகைக்குப்போக ரெயில் மார்க்கம் பம்பாயிலிருந்திருக்கிறது. ஆனுல், பம்பாயிலிருந்து புகைக்கப்பல் புறப்படுகிறது வாரத்திற்கு இரண்டு தடவைகள்தான். பம்பாயிலிருந்து (B. B. & C. I. Ry.) பி. பி. அண்டு சி. ஐ. ரெயில்வே மூலியமாய் முதல் நாள் காலை 8½ மணிக்கு வண்டியேறினுல், மறுநாள் சாயந்திரம் 5 மணிக்கு துவாரகை சேரலாம். வழியில் எவ்விடமும் தங்கக்கூடாது.

ரேயில் மார்க்கத்தின் விவரம்:—பம்பாயிலிருந்து காலை 8½மணி சுமாருக்கு பெரிய வண்டியாகிய பி.பி. அண்டு சி.ஐ. ரெயிலின் கத்தியவார் எக்ஸ்பிரஸ் மூலியமாய் ஆமதாபாத் (Ahmedabad)தாண்டி, வீரம்காம் (Viramgam Junction)

சந்தி ராத்திரி 9 மணி சுமாருக்கு சேரவேண்டும். அவ்வி டத்தில் இரவு 10 மணி சுமாருக்கு சிறு வண்டி (Metre Gauge) ஏறி, காலை 7மணிக்கு ராஜ்கோட் ஜங்ஷன் (Rajkot Junction) சேர்ந்து, பின்பும் வண்டி மாறி ஜாம்நகரம் மார்க்கமாய் துவாரகை மாலை 5 மணி சுமாருக்கு நேராய்ச் சேரலாம்.

குறிப்பு :— இந்த துவாரகையென்பது கத்தியவார் என்னும் (Kathiawar) பிரதேசத்திலுள்ளது. இந்தியா படத்தைப்பார்த்தால் மேற்குத்திசையில் வாயின்மோவாக் கட்டையைப்போன்று உருவம் காணும் பிரதேசத்திற்குக் கத்தியவார் என்று சொல்லப்படும்.

துவாரகைக்குப் போனவர்கள் திரும்பி வரும்பொழுது கத்தியவாரேன்னும் பிரதேசத்தில் பார்க்கத்தகுந்த வேறு ஸ்தலங்களாவன :—

1. போர்பந்தர் (Porbandar).

இது ஒரு பெரிய துறைமுகப் பட்டணம். அனேக சத்திரங்களும், பெரிய கடைகளுமுண்டு. இது ஒரு சிற்றரசரின் ராஜதானி. இந்த ஊரில் குசேலரென்று தென்னாட்டாரழைக்கப்படும் ஸ்ரீ கிருஷ்ணனின் தோழரான "சுதாமா"வென்பவரின் கோயிலிருக்கிறது. இக்கோயில் முன் காலத்தில் குசேலர் வசித்த இடத்திலேயே கட்டியிருப்பதாகச் சொல்லுகிறார்கள். இதைச் சுற்றிலும் கோயிலுக்கு சேர்ந்த இடத்திலேயே ஒரு அனாதாஸ்ரமம் (Orphanage) கட்டியிருக்கிறார்கள். அதின் போஷகர்கள் அவ்விடம் வசிக்கும் அனாதைப் பிள்ளைகளுக்கு துணி,

சாப்பாடு கொடுத்து வெளிப் பள்ளிக்கூடங்களில் படிக்க சம்பளம், புஸ்தகங்கள் கொடுத்தனுப்புகிறார்கள். வெகு பெரிய பணக்காரர்கள் வசிக்கும் பட்டணம். பார்க்கத் தகுந்தது.

வேராவல் (Veraval).

இதுவும் ஒரு பெரிய பட்டணம். முகம்மதிய குடிகள் அதிகம். ஒரு முகம்மதிய (Junagad) நவாப்புக்குச் சேர்ந்த பெரிய பட்டணம். சத்திரங்களும், கடை, ஹோட்டல்களுண்டு. இவ்விடமிருந்து 1 மைல் கிழக்குத்திசையில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் வேட்டையாட வந்தபொழுது, ஒரு வேடனால் காலில் காயப்பட்ட ஸ்தலமிருக்கிறது. அப்பொழுது அர்ஜுனன் அவ்விடம் வந்ததாகவும், ஸ்ரீ கிருஷ்ணன் தனக்கு அந்தியக்காலம் வந்துவிட்டதென்றும் பாண்டவர்களும் பரகதியடைய வேண்டுமென்றும் அவர் கட்டளையிட்டதாகவும், பின்பு அவ்விடமிருந்து 2 மைல் தூரமுள்ள இப்பொழுது ப்ரவாஷ் க்ஷேத்திரமெனப்படுமிடத்தில் 2 நதிகள் சமுத்திரத்தில் சங்கமமாகுமிடத்தில் நதிக்கரையின்மீது ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா தன் சரீரத்தை விடுவிட்டயிடமும், பலராமன் சர்ப்பவடிவமாய்ப் பாதாளத்தில் நுழைந்த குகையும் இவைகள்தானென்று சொல்லி இத்தோப்பிற்குள்ளிருக்கும் இரண்டுஸ்தலங்களைக் காட்டுகிறார்கள். (போட்டோ படத்தைப் பார்க்கவும்).

வெராவிலிருந்து 2மைல் தூரத்தில் கிழக்குத்திசையில் குதிரை ட்ராம்வண்டி மார்க்கமாய் (நபர் ஒன்றுக்கு 0–1–0 சார்ஜு) இப்பொழுது பட்டணம் (பிரவாஷ் பட்டணம்) என்று சொல்லும் பழைய சோமநாதபுரம் சேரவேண்டும்.

இதுவும் பெரிய பட்டணம். அனேக கடைகளுண்டு. முகம்மதியர் அதிகம். இந்த ஊர் பரோடா ராஜாவிற்குச் சேர்ந்தது. இவ்விடமிருந்து கிழக்கே 1 மைல் கோட்டை மதிலைக்கடந்து சென்றால், நதியும் சமுத்திரமும் சந்திக்குமிடங் காணும். இதைத்தான் பிரவாஷ் க்ஷேத்திரமென்று சொல்லுகிறார்கள். இவ்விடம் சத்திரங்களிருக்கின்றன. சூரியபகவானுக்கு ஓர் கோயில் கட்டியிருக்கிறார்கள். அது இப்பொழுது பாழாயிருக்கிறது. சங்கமத்தின் வடவண்டை 2 பர்லாங்கு தூரத்தில் நதிக்கரையின்மீது ஒரு தோப்பும், கோயிலின் கட்டிடங்களு மிருக்கின்றன. (போட்டோ படத்தைப் பார்க்கவும்). தோப்பிற்குள் நதிக்கரையின் பக்கத்தில் ஒரு அரசமரமிருக்கிறது. அந்த மரமிருக்கும் இடத்தில்தான் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா தன் சரீரத்தை விட்டதாகவும், சரீரத்தை தகனம் செய்யும்பொழுது நதியில் பிரவாகம் வந்து சரீரத்தை சமுத்திரத்தில் சேர்த்ததாகவும், சரீரம் மிதந்துகொண்டுவந்து கிழ்க்கரையில் பூரி ஜகன்னாத் (Puri-Jagannath) என்னுமிடத்தில் ஒரு மரக்கட்டையைப்போல் அகப்பட்டு அதை கோயிலுக்குள் பிம்பமாய்ச் செய்திருப்பதாகவும் சொல்லுகிறார்கள். (பூரி—ஜகன்னாதத்தின் ஸ்தல புராணத்தில் விவரம் அறியவும்).

சுமார் 40 வருஷங்களாய் இந்த அரசமரத்தை, பரோடா மஹாராஜா தன் சிப்பாய்களைக்கொண்டு, இரவும் பகலும் காப்பாற்றிக்கொண்டிருக்கிறார். பக்கத்திலுள்ள ஹிந்து கோயிலுக்கு பூஜையில்லாமல் மூடப்பட்டிருக்கிறது. ஏனென்றால், முகம்மதியர்கள் ஒரு மக்காவை கோயிலுக்கும், அரசமரத்திற்கும் மத்தியில் ஒரு காலத்தில் ஏற்படுத்தி



ப்ரவாஷ் க்ஷேத்திரம்

ஸ்ரீகிருஷ்ணன் தன் சரீரத்தை விட்ட ஆற்றங்கரை.

PRAVASH KSHETHRA.

(Near Veraval Kathiawar)

River bank where Lord Sri Krishna left his body.

விட்டு பின்னர் ஹிந்து யாத்ரீகர்கள் கோயிலுக்கும், அரச மரத்திற்கும் செல்வதால் இவர்களுக்கு இடையூறு உண்டாகிறதென்று அரசமரத்தை வெட்ட பிரயத்தினம் செய்யும் பொழுது பரோடா ராஜாவானவர் கோயிலையும், மக்காலேயும் மூடச்செய்துவிட்டு அரசமரத்தைக் காப்பாற்ற இரவும் பகலும் சிப்பாய்களை எற்படுத்தியிருக்கிறார். இவ்விடத்திற்கு ஹிந்து, முகம்மதியர் எல்லோரும் போகலாம். மரத்தை போட்டோபடம் பிடிக்கக்கூடாது. ஹிந்துக்கள் மரத்தைச் சுற்றிவந்து தரிசினம் செய்து போகிறார்கள். இந்த ஸ்தலம் பார்க்கத்தக்கது. மரத்தின் தென் பக்கத்தில் ஒரு குகையிருக்கிறது. கவனிக்கும்பொழுது பூமியின் கீழுள்ள கோயிலாகக்காண்கிறது (Underground Temple). இந்தக் குகைக்குள்ளேயே ஸ்ரீ பலராமன் ஆதிசேஷாவதாரமெடுத்து பூமிக்குட் சென்ற குகையென்று சொல்லுகிறார்கள். இந்த பிரவாஷ பட்டணமென்னும் சோமநாத்பூரில் இப்பொழுதும் பாழடைந்திருக்கும் சோமநாதரின்கோயில் சமுத்திரக்கரை பக்கத்திலிருக்கிறது. இக்கட்டடம் பூர்வகாலத்தில் தங்கத் தகடினல் மூடப்பட்டிருந்ததாகவும், இதைத்தான் முஹம்மத் கஜனி (Mohamed Gazni of Indian History fame) என்னும் முகம்மதிய அரசன் 14 தடவைகளில் முற்றுகைசெய்து கடைசியில் இந்தக் கோயிலைக் கொள்ளையிட்டதாகவும் இந்துதேச சரித்திர புத்தகத்தில் நாம்வாசித்திருக்கும்சோமநாத்பூர் (Somnathpur) என்னும் ஸ்தலமிதுவே. இப்பொழுது சோமனதரின் லிங்கம் பூமிக்குள்ளிருக்கும் ஓர் அரையில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இது இந்தியாவிலுள்ள (12) துவாதச ஜோதிர் லிங்கங்களில் ஒன்று. வெகுவும் பெரியது. இக்கோயிலைச்

சுற்றிலும் இப்பொழுது முகம்மதியர்கள் தான் வசிக்கிறார்கள். தென்னாட்டைப்போல் சிவன்கோயிலைச் சுற்றிலும் ஸ்மார்த்தப் பிராமணர்களும், விஷ்ணு கோயிலைச்சுற்றிலும் ஸ்ரீவைஷ்ணவப் பிராமணர்களும் வசிக்கிறாப்போலல்ல. ப்ரவாஷ் க்ஷேத்திரம் போகும்வழியில் இரண்டு ராமாநுஜ கூடங்களிருக்கின்றன.

## ஜுனகட் (Junagad)

இது ஒரு ரெயில்வே ஸ்டேஷனுள்ள பெரிய ஊர். சத்திரங்களும், கடைகளுமுண்டு. இவ்விடமிருந்து 4 மைல் தூரத்தில் கிர்னார்(Girnar hills) என்னும் மலையிருக்கிறது. இதன் மேலே போக சுமார் அரையடி உயரமுள்ள 10,500 படிக்கட்டுகளிருக்கின்றன. முதலில் சுலபமான ஏற்றமாய்க் காண்கிறது. மலையின் மேல்பாகம் ஏறக் கடினமாயிருக்கும். செங்குத்தான முதல்மலையின்பேரில் ஜெயினர்களின் கோயில்களிருக்கின்றன. பார்ப்பதற்கு வெகு அழகாய் வெள்ளைக்கற்களால் கட்டப்பட்டிருக்கின்றன. இவ்விடத்திலிருந்து சிறிது தூரத்தில் ஓர் ராமாநுஜகூடமிருக்கிறது. மத்திய செங்குத்தான மலையைத்தாண்டி, மூன்றாவதான செங்குத்து மலையின்மீதில் தத்தாத்ரி தபசு செய்த இடமென்று சொல்லுகிறார்கள். அனேக ஹிந்து யாத்ரீகர்கள் எப்பொழுதும் இந்த ஸ்தலத்திற்கு வருகிறார்கள். தபசு செய்தவிடத்தில் தத்தாத்ரியின் பாதமிருக்கிறது. இதைத் தான் தரிசினம் செய்துவருகிறார்கள். ஆதிசங்கரரும் இவ்விடம் தரிசினார்த்தம் வந்திருந்ததாக இவரின் ஒரு சிறு பிம்பம்செய்துவைக்கப்பட்டிருக்கிறது. சாதுக்கள் வழியிலிருக்கும் மடங்களிலிருக்கிறார்கள். இவர்கள் அங்கங்கே

குடிக்க ஜலம் சேகரித்துவைத்து யாத்ரீகர்களுக்குக் கொடுக்கிறார்கள். ஏறுவதற்குக் கடினமான மலை. தென்னாட்டில் திருப்பதி எப்படி யாத்திரை ஸ்தலமோ அவ்வாறே கதியவாரென்றிப் பிரதேசத்தில் இதுவும் ஒரு பெரிய யாத்திரை ஸ்தலம். பார்க்கத்தக்கது. டோலிகளுண்டு. கூலிகள் மனிதரை நிறுத்தி எடைபோல் சார்ஜு வாங்குவார்கள். போகவர ரூ. 10க்கு மேலில்லை. பம்பாயிலிருந்து புறப்பட்டு இந்த துவாரகையென்னும் திவ்யதேசத்தையும், சுற்றிலுமுள்ள மேலே சொல்லியிருக்கும் பிரதேசங்களையெல்லாம் சாவகாசமாய் தரிசினம் செய்துவர சுமார் 20லிருந்து 25 நாட்களாகும். ஆனால் இப்பிரதேசங்களில் குடிக்கும் தண்ணீர்க் கஷ்டமதிகம். வரும் மார்க்கத்தில் பாவநகரம் (Bhavnagar), ஜோதிப்பூர் (Jodhpur State), பாலிடான் (Palitan) என்னும் ஜைனர்களின் யாத்திராஸ்தலம், முதலானதுகள் பார்க்கத்தகுந்த விடங்களாகும்.

---

## 107. திருப்பாற்கடல் 107.

மங்களாசாசனம்.

பெரியாழ்வாரருளிச் செய்த பெரியாழ்வார் திருமொழி
2ம் பத்து 6ம் திருமொழி 6ம் பாசுரம்.
3ம் ,, 3ம் ,, 7ம் ,,
4ம் ,, 10ம் ,, 5ம் ,,

ஆண்டாளருளிச்செய்த திருப்பாவை 2ம் பாசுரம்.

குலசேகராழ்வாரருளிச்செய்த பெருமாள் திருமொழி
முதலாயிரம் 2ம் திருமொழி 8ம் பாசுரம்.
,, 4ம் ,, 4ம் ,,

திருமழிசையாழ்வாரருளிச்செய்த திருச்சந்த விருத்தம்
81, 95ம் பாசுரங்கள்.
நான்முகன் திருவந்தாதி 3, 36ம் பாசுரங்கள்.

தொண்டரடிப்பொடியாழ்வாரருளிச்செய்த திருமாலை
18ம் பாசுரம்.

திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரிய திருமொழி
1ம் பத்து 6ம் திருமொழி 6, 9ம் பாசுரங்கள்.
,, 8ம் ,, 2ம் பாசுரம்.
5ம் ,, 6ம் ,, 1ம் ,,
9ம் ,, 9ம் ,, 1ம் ,,
10ம் ,, 1ம் ,, 3ம் ,,
திருநெடுந்தாண்டகம் 9, 15ம் பாசுரங்கள்.

பொய்கையாழ்வாரருளிச்செய்த முதற்றிருவந்தாதி
25ம் பாசுரம்.

பூதத்தாழ்வாரருளிச்செய்த இரண்டாந்திருவந்தாதி
3, 28ம் பாசுரங்கள்.

பேயாழ்வாரருளிச்செய்த மூன்றாந்திருவந்தாதி
32, 61ம் பாசுரங்கள்.

நம்மாழ்வாரருளிச்செய்த திருவிருத்தம் 79ம் பாசுரம்.
,, பெரிய திருவந்தாதி 77ம் பாசுரம்.

ப்ரபாவம் :— க்ஷீராப்திநாதன்—வ்யூகமூர்த்தி—கடல் மகள் நாய்ச்சியார்—அஷ்டாங்கவிமானம்—அம்ருததீர்த்தம்-தெற்கே திருமுகமண்டலம்—புஜங்கசயனம்—ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கு ப்ரத்யக்ஷம்.

குறிப்பு :— சாமானியமாய் இத்திவ்யதேசத்திற்கு மனித சரீரத்துடன் போகமுடியாதென்றும், தேவர்களும், முனிவர்களும், யோகிகள் மாத்திரம் போகக்கூடிய ஸ்தல மென்றும், தங்கள் "குறையிரக்குமிட" மென்றும் சில கிரந்தங்களில் எழுதியிருக்கின்றன. இவ்விஷயத்தைக் குறித்து அடியேனுக்கு உண்டாகும் அபிப்பிராயமாவது:-

இது மனிதர்கள் சென்று சேவிக்க முடியாத ஸ்தல மென்றிருந்தால் (சேவிக்க வெகுவும் பிரயாசையுள்ள ஸ்தல மென்றாலும் தகும்) இதை 12 வடநாட்டுத் திருப்பதிகளில் ஒன்றாய் என் சேர்த்திருக்கப்பட்டிருக்கிறது. திரு நாடாகிய (பரமபதத்தை) எவ்வாறு மனித சரீரத்துடன் போய் சேவிக்க முடியாத ஸ்தலமென்று எண்ணி அதைத்

தனியாய் "திருநாடொன்றுக்கொள்" என்று பாசுரத்தில் சொல்லியிருக்குமாப்போல், அம்மா திரியாகவே யிருந்தால் இத்தலத்தையும் சேர்த்து இரண்டாகச் சொல்லியிருக்கப் பட்டிருக்குமல்லவா. இத்தலத்தின் ப்ரபாவத்தையும், வட நாட்டார் அஷ்ட (8) வைகுண்டங்களாக (ஸ்வயம்விக்த ஸ்தலங்கள்) நம்பிக்கைக் கொண்டிருக்கும் ஸ்தலங்களில் சொல்லியிருக்கும் விஷ்ணுவின் அனேக ரூபங்களின் விவரங் களைக் கவனிக்குமளவில், பெரிய பனிக்கட்டிகளாயிருக்கும் (Glasiers) பனிமலைகளால் எப்பொழுதும் கவர்ந்துள்ள தினுல் பாலின் நிறத்தைப்போல் காணும் சமுத்திரத்தை யும் (உஷ்ணம், குளிர், ஜலம், மலை, அரண்யம், என்னெய், வாயு, ப்ரணவம், இவைகளன்றி) கடவுளின் ரூபமென்றும், அவ்விடம் கடவுள் சதா நிறைந்திருக்கிருரென்றும், அகண்ட பிரம்மாண்டமாகிய இச்சமுத்திரத்தில் பெரிய ஆகாரமான (வ்யூகமான) வடிவைக்கொண்டவராய் கடவுளிருக்கிரு ரென்று நம்புவதற்கு தடையொன்றுமில்லை. ப்ரபாவத்தில் புஜங்கசயனராயும், தெற்கே திருமுகமண்டலராயுமிருப்ப தால் (திருவரங்கத்தைப்போல்), இவர் நம் தேசத்திற்கு வடவண்டையில் புஜங்கசயனராயிருக்கிருரென்ற யூகை யுண்டாகிறது. ஆகையால், நார்த் போல் (North Polar Regions) என்னும் ரஷியா, போலண்டு முதலான ஸ்தலங் களுக்கு உத்திரபாகத்தில் எப்பொழுதும் வெண்மையான பனிமலைகள் கவர்ந்துள்ள வெண்மை (பால்) நிறமுள்ள வட சமுத்திரத்திலே சர்வவியாபகனுய் நின்றும், இருந்தும், கிடந்தும் என்ருப்போன்ற கிடந்த புஜங்க சயனனுய் கடவுள் இருக்கிருரென்பதற்கு ஐயமொன்று மில்லை. ஆகையால், அடியேன் கோட்பாடென்னவென்ருல்

திருப்பாற்கடல் (க்ஷீராப்தி) என்பதனுல் (Polar Regions) போலார் ரீஜன்ஸ் என்றும், (உருண்டை வடிவமாயுள்ள பூலோகத்திற்கு திசைதிக்குகளின்மையால்), தெற்கே திருமுகமண்டலமென்றதினுல் நமக்கு வடவண்டையில்தா னிருக்கவேண்டுமென்றும் அடியேன் (North Polar Regions) வட போலார் ரீஜன்ஸ் என்று எடுத்துக்கொண்டு முகவுரையில் ரஷியா, போலண்டுக்கு வடவண்டையெனக் கொண்டேன். பூகோளத்தை யெடுத்துக்கொண்டால் வடக்கிலிருப்பது (North Pole) நார்த் போல், தெற்கி லிருப்பது (South Pole) செளத் போல். ஆனுல் இரண்டும் ஒன்றே, பார்வைக்குமாத்திரம் வித்தியாசமாய்க் காண்கிறது. இந்த இரண்டு போல்களுக்கு மத்தியிலேயே பூமியின் பாகங்களான கண்டங்களிருக்கிறதாக சாஸ்திரம். ஆகையால் க்ஷீராப்தியான திருப்பாற்கடலில் புஜங்கசயன ராயிருக்கும் மகாவிஷ்ணு இந்த அண்டபிண்ட சராசரங்களை யெல்லாம் தன் உந்தியில் வைத்துக்கொண்டிருக்கிருரென் றும், அவைகள் ஜீரணமாகாமலிருக்கும்பொருட்டு, வலது கையைத் தலையின் கீழ்ப்புறம்வைத்தும் (ஆரோக்கிய சாஸ்திரப் பிரகாரம் ஒருவர் இடதுகைப்புறம் படுத்தால் சாப்பிட்டது ஜீரணமாகிவிடும். ஆண்கள் இடது கைப்புற மாயும், பெண்கள் வலது கைப்புறமாயும் இராத்திரியில் சயனித்தால் சாப்பிட்டது ஜீரணமாகும்) நமக்கு புஜங்க சயனராய் தரிசினங் கொடுக்கும்பொருட்டு தெற்கே திருமுகமண்டலத்துடனும், நின்றும், இருந்தும் எனப்படும் திருக்கோலங்களின்பொருட்டு அஷ்டாங்க விமானத்துட னும், கடவுளிருப்பதாக ப்ரபாவத்தில் கண்டிருக்கிறதைப் போல் ஆழ்வார்களின்(எல்லோரும் தென்னுட்டில் உதித்த

வர்களே) மங்களாசாசனமாயிருப்பதாகக் காண்கிறது. இக் கூற்றை நாம் பிசகென்று கூறுவதற்குக் காரணமில்லை. ஆகையால் சர்வவியாபியெனப்படும் கடவுள் எவ்விடமு மிருக்கிறாரென்னும் வேதத்தின் பொருளையே ஆழ்வார்கள் திருவாய்மலர்ந்தருளி யிருக்கிறார்கள். இவ்வட சமுத்தி ரத்தின் தரிசினமே இத்திவ்யதேசத்தின் சேவையெனலாம். மனித சரீரத்துடன் பிரயாசைப்பட்டு போகலாம். ஆகை யால், சரீரத்துடன் போக முடியாத திவ்யதேசமன்று என்பது அடியேன் கூற்று.



12 வடநாட்டுத் திருப்பதிகள் முற்றுப்பெற்றன.

## 108 திருநாடு என்னும் பரமபதம் 108

மங்களாசாசனம்.

பெரியாழ்வாருளிச்செய்த பெரியாழ்வார் திருமொழி.

3-ம் பத்து, 6-ம் திருமொழி, 3-ம் பாசுரம்.
4 ,, 7 ,, 9-ம் ,,
5 ,, 4 ,, 10-ம் ,,

திருமழிசையாழ்வாருளிச்செய்த திருச்சந்தவிருத்தம் 45-ம் பாசுரம்.

திருப்பாணாழ்வாருளிச்செய்த அமலனாதிபிரான் 1-ம் பாசுரம்.

திருமங்கையாழ்வாருளிச்செய்த திருக்குறுந்தாண்டகம் 11-ம் பாசுரம்.

பொய்கையாழ்வாருளிச்செய்த முதற்றிருவந்தாதி 68-ம் பாசுரம்.

பேயாழ்வாருளிச்செய்த மூன்றாந் திருவந்தாதி 61-ம் பாசுரம்.

நம்மாழ்வாருளிச்செய்த திருவாய்மொழி
10-ம் பத்து, 9-ம் திருமொழி, 11 பாசுரங்கள்.

ப்ரபாவம்:—பரமபதநாதன், பெரிய பிராட்டியார், அந்தரங்க விமாநம், விரஜாநதி, அயிரம்மத் புஷ்கரிணி, தெற்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், அநந்த கருட விஷ்வக்சேநர் முதலிய நித்ய ஸூரிகளுக்கும், முக்தர்களுக்கும் ப்ரத்யக்ஷம்.

குறிப்பு:—இத்திவ்ய தேசத்திற்குச் செல்பவர்கள் என்னப்பன் வாழ்புகழ் நாரணன் தமர்களாவர்.

இவர்கள் இத்திவ்ய தேசத்தை நாடிச்செல்லும் பொழுதே பணிமுகிலில் தூரியவாத்தியங்கள் முழங்

கிக்கொண்டிருக்கும், கடல்களிலுள்ள அலைகளெல்லாம் ஆடுமாப்போல் காணும், எழ்பொழிலும் வளமேக்திரைப்போல் காணும், நன்னீர்முகில் பூரண பொற்குடம் பூரித்து உயர்விண்ணில் (பரமபதத்தில்) நீரணி கடல்கள் நின்றார்த்தனப் போலிருக்கும், உலகத்தோரெல்லாரும் பெரிய தோரணங்களை எங்கும் கட்டித்தொழுவாராவார், மற்றும் மலர் மழையைப் பொழிவார்கள். முனிவர்களெல்லோரும் இசையைச் சொல்லிக்கொண்டு வைகுந்தத் திதுவே வழி யென்று எதிரே வருவார்கள். பின்னர் இவர்கள் இருப்பிடத்தை வகுத்து, கடலின் அலைகளை யொத்த பலமான வாத்தியங்களை முழக்குவார்கள். மற்றும் கின்னரர் கெருடர்கள் கிதங்கள் பாடுவார்கள். மாதர்களான அப்ஸர ஸ்திரிகள் மகிழ்ந்துவாழ்த்துவார்கள். தேவர்களும் வசுக்களும் எல்லாவிடங்களிலும் சென்று தோத்திரம் சொல்லுவார்கள். வைகுந்தமாகிய இத்திவ்ய தேசம் புகுதலும், அவ்விடமுள்ள வானவர்கள் வந்தவர் கோவிந்தன்றனக்கென்று முறை முறை யெதிர் கொள்ள, வைகுந்தம் புகுதலும் வாசலில் வானவர் வைகுந்தம் தமரெமரெமதிடம் புகுவென்று, அமரரும் முனிவரும் வியந்து நிற்கும்பொழுது, நல்வேதியர்கள் பாங்காக வந்தவர் பாதங்களைக் கழுவ, சந்தனம் தடவி பூரண கும்பமும் விளக்கும் ஏந்திய சந்திர பிரகாசத்தை யுடைய அப்ஸர ஸ்திரீகள் வந்து எதிர்கொண்டு மாமணி மண்டபத்து அந்தமில் பேரின்பத்தடியரோடிருக்கச் செய்வர்.

மார்க்கம்:—மூன்றுவிதம்—அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம் என்பவை.

அத்வைத மார்க்கம்—சரீர லக்ஷணம் இப்பேர்ப் பட்டதென்று விசாரித்துத் தெரிந்துகொள்ளாவிடில், ஆத்மா இப்பேர்ப்பட்டதென்னும் ஆத்ம ஞானம் உண்டாகமாட்டா. ஆதலால் சரீர லக்ஷணம் இப்பேர்ப் பட்டதென்பதைச் சிரத்தையுடன் விசாரிப்பதே முக் கியம். ஸ்ருதி—ஸாங்க்யம் தேஹவிசாரணம்.

ஞானேந்திரியங்கள் 5.

1. செவி—ஆகாசத்தின்
2. தோல்—வாயுவின்
3. கண்கள்—அக்நியின்
4. நாக்கு—அப்புவின்
5. நாசி, (மூக்கு) பிருதிவின்

} அம்சம்

கன்மேந்திரியங்கள் 5.

1. வாய்—ஆகாசத்தின்
2. கைகள்—வாயுவின்
3. கால்கள்—அக்நியின்
4. குதம்—பிருதிவின்
5. மர்மஸ்தானம்—அப்புவின்

} அம்சம்

அந்தக்கரணங்கள் 4.

மனம், புத்தி, சித்தம், அஹங்காரம்.

வாயுக்கள் 10.

(பஞ்சபிராணன்) பிரதான வாயுக்கள்—5
உபவாயுக்கள்—5

பிரதானவாயுக்கள்

1. பிராணவாயு—புசித்த ஆஹாரத்தை ஜீரணம் செய்விக்கும்.

2. அபானவாயு—நிசுவாஸ ரூபம்.

3. உதானவாயு—தூங்கும்பொழுது அஞ்ஞான இருளில் அழுந்தச்செய்து, தூங்கி எழுந்தவுடன் அந்

தந்த இந்திரியங்களைத் தம்தம் ஸ்தானத்தில் இருக்கச் செய்யும்.

4. ஸமான வாயு—தேகத்தை வளர்ப்பிக்கும்.

5. வியான வாயு—புசித்த அன்னத்தை திப்பி வேறு ரசம் வேருகச் செய்வது.

உபவாயுக்கள் 5.

1. நாகன் 2. கூர்மன் 3. கிருகரன் 4. தேவ தத்தன் 5. தனஞ்ஜயன் என்றிருக்கின்றன.

இவைகளை அறிந்துத் தன் வசம் பண்ணிக் கொண்டு, எது ஸ்தூல சரீரம், சூட்சும சரீரம், காரண சரீரம் என்னும் விஷயத்தையும் தெரிந்து பஞ்சகோச விவரங்களையுமறியவேண்டும்.

(1. அன்னமயகோசம், 2. பிராணமயகோசம், 3. மனோமயகோசம், 4. விஞ்ஞானமயகோசம், 5. ஆனந்த மயகோசம்.) பிரியம், மோதம், பிரமோதம் என்பவை களைக் கண்டித்து, ஸத்துவம், ராஜஸம், தாமஸ மென்னும் குணங்களில் சதா ஸத்துவத்தையே அநுசந்தானித்து, ஜாக்ரதா, சொப்பன, சுஷுப்தி, துரியாவஸ்தைகளை நன்ருய்த் தெரிந்துகொண்டு தத்துவ பரிசோதனை செய்து ஜீவன்முக்தன் லக்ஷணமறிந்து, சம்சார வாசனையைத் துறந்து, பந்த மோக்ஷ ஆத்மா அநாத்மா லக்ஷணங்களை யறிந்து, காம, குரோத, லோப, மோஹ, மத, மாச்சராதி குணங்களை நசிப்பித்து, பக்தி, ஞான, விசேஷ வைராக்கியம் முதலானவைகளை யடைந்து, பந்தமின்றி மனோவாசனை முதலான சங்கல்பங்களை நசிக்கச் செய்து பிரம்ம சொரூபியா யிருக்கவேண்டும். சதா மித ஆகாரத்துடன் பகவத் தியானம் செய்ய வேண்டும். கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, கசப்பு, துவர்

ப்பு, இனிப்பு ஆகிய ஷட்ரசமாகிய ஆறுவித ருசி பேதங்களும், ருசியில்லாத அன்னமும் தெய்வாதீன மாய் எவ்வாறு பிராப்தித்தபோதிலும் அதில் ருசி அருசி விசாரிக்காமல் சமபாவத்துடன் புசித்து, சதா ஆத்மாநுசந்தான பரனுயிருக்க வேண்டும். வேத விஹித தர்மா அதர்மங்களினுல் தனக்கு லாபமில்லை யென்று, எண்ணி, அவைகளை நினைக்காமலும் அபே க்ஷிக்காமலும் சதா ஆத்மாநு சந்தானம் செய்யவேண் டும் நானு விசித்திர நாம (பெயர்) ரூபங்களுடன் காணப்படும் பிரபஞ்சம் மாயா கற்பனை யென்றும், அது அசத்தியமென்றும் தெரிந்து, பிரபஞ்சத்தின் ஆசை யைவிட்டுச் சதா ஆத்மத்யானம் செய்துகொண்டு தன் மயமா யிருக்கவேண்டும்.

சரீர சம்பந்தமாகிய மூப்பு (கிழத்தனம்), மரணம், ஆபத்து, ராச்சியம், சம்பத்து, தாரித்திரிய முதலான வைகள் சம்பவித்தபோதிலும் அவைகள் தேகத் திற்கேயன்றி ஆத்மாவிற்கில்லை யென்று நினைத்து நிர்ப்பயமாய்ப் பிரம்மானந்த சொரூபமா யிருக்க வேண்டும்.

சகல எண்ணங்களையும், சகல சந்தேகங்களையும், சர்வ பிரபஞ்ச விஷயங்களையும் சர்வசாஸ்திர சித்தாங் தங்களையும் விட்டுவிட்டு லோகவாசனை, சாஸ்திர வாச னை, தேஹ வாசனையென்னும் 3 வாசனைகளுமில்லாமல் சதா ஆத்மாநுசந்தானம் செய்துகொண்டிருக்கவேண் டும். சம்சாரத்திலிருந்தும் சம்சாரபந்தங்களில்லாதவ னுயும், வித்வாம்சனுயிருந்தும் வித்வாம்சனென்னும் கர்வமில்லாதவனுயும், பரிசுத்த சித்தனுயும், எந்த எண்ணங்களுமில்லாமல் இருக்கவேண்டும்.

ஜாக்கிராவஸ்தையில் தூங்கிக்கொண்டிருப்பவ னைப்போலிருந்து, சகல காரியங்களையும் செய்து

கொண்டு அந்தரங்கத்தில் காமக்குரோதாதிகள் இல்லாதவனாய், தான் சாக்ஷிமாத்ரனாய்ச் சகித்துக்கொண்டு, வெளிக்கு உலகத்தாரைப்போல் சாதாரணமாய் சகல காரியங்களையும் செய்துகொண்டிருக்கவேண்டும்.

தேஹேந்திரியங்களே நானென்னும் அஹங்காரத்தைவிட்டுத் தேகத்திற்கு வேறாயிருக்கும் ஆத்மாவே நானென்று நினைக்கவேண்டும்.

காமக்குரோத லோப மோஹாதி குணங்களையுடையவனாய் நடித்துக்கொண்டிருந்தபோதிலும், பண்டித திறமையைக் காட்டாமல் பாமரனைப்போலிருந்து மனம் பிரம்ம மயமாய் நிராகாரமாய் ஆகாசத்தைப் போல் பரிசுத்தமா யிருக்கவேண்டும்.

அஹங்கார ரூபமாகிய மலின வாசனைகளை விட்டுவிட்டு, தேவதா உபாசனாதிகளை நிவர்த்தி செய்து, சதா ஆத்ம நிஷ்டையிலிருக்கவேண்டும். இச்சை இல்லாதவனாய்ச் சகல கார்யங்களையும் செய்துகொண்டு, தாமரை இலையின்மீதுள்ள ஜலத்தைப்போல், சுகதுக்கங்களைப் பற்றாமல் அசங்கனாயிருக்கவேண்டும். அன்னபானாதிகளை (பசி தாகங்களை) ஆசிரயிக்காதவனாய் எவ்விடத்திலும் சஞ்சாரம் செய்யாமல், ஞானாமிருதம் பானம் செய்து திருப்தியடைந்து, சகல காரியங்களும் தெய்வாதீனமென்றுணர்ந்து திட நிச்சயமுண்டாய், அஹங்கார சூன்யனாய், நிச்சலனனாய்ச் சதா பிரம்மானந்த நித்திரையிலிருக்கவேண்டும்.

பிராரப்த கர்மம் நசிக்கும் வரையில், சம்சாரத்திலிருந்தபோதிலும் அதில் பற்றாமல், மனம், இந்திரியம் முதலானதுகளை வசியம் செய்து சகலஜனங்களுக்கும் மித்திரனாய் அதிக தயாளத்துவமுடையவனாய்க் கோப தாபங்கள், அசூயை, பயம் முதலானவைகளில்லாதவனாய்த் தனக்கிஷ்டமான பதார்த்தங்கள் கிடைத்தால் சந்தோஷமும், கிடையாவிட்டால் துக்கமும் இல்லாதவனாய்த் தன் பூர்வ கர்மானுசாரமாய்த் தனக்கு

எதெதுபிராப்தமாகின்றதோ (கிடைக்கின்றதோ) அதில் திருப்தியடைந்து, தூஷணை பூஷணைகளைச் சமமாய் நினைத்து சதா பிரம்மைஞ்ஞானுசந்தானம் செய்து கொண்டிருக்கவேண்டும். ஸச்சிதானந்த பிரம்மம் 'நா' (அஹம் ப்ரஹ்மாஸ்மி) என்று சதா அதிலேயே புத்தியை லயிக்கச் செய்துகொண்டிருக்க வேண்டும். இப்படிப்பட்டவனே ஜீவன் முக்தன் என்னும் நிலைக்கு அருகனுய் பரமாத்மாவில் ஐக்கிய மாய் சாயுஜ்ய பதவியடைந்து பிறப்பு அற்று மோக்ஷ சாதனை யடைவான்.

**விசிஷ்டாத்வைத மார்க்கம்:—**

சேதனன் ஓர் குருவையடைந்து அவர் மூலமாய்த் தான் முக்தியடைவான். இவன் திருமந்த்ரம், த்வயம் சரமஸ்லோகம் குருவால் தெரிந்து ஞானம் பக்தி பிரபத்தி சரணுகதி யென்னும் வழிகளால் சற்குருவை யடைந்து, குருவே பரப்பிரம்மமென்றும், அவரே இவன் ஆஸ்தி யென்றும், இவன் பிரீதிக்கும் பொரு ளென்றும், அவரே இவன் சுகசௌக்கியமாயடையு மிடமென்றும், அவரே இவனுக்குப் புத்தியும் வழியு மென்றும், அவரே இவனைக் காப்பாற்றும் மஹா புருஷர் என்று எண்ணுவதுடன், மற்றும் தெரிந்து கொள்ளவேண்டிய விஷயமாவது.

கடவுள் தூங்கிக்கொண்டிருக்கிருரென்றும், குரு எப்பொழுதும் விழித்துக்கொண் டிருக்கிருரென்றும், கடவுள் கண்புலனுக்குக் காணுதவரென்றும், குரு தம் முன் சலனமாய்த் தெரியத்தக்கவரென்றும், குரு கடவுளின் ஆக்ஞையைக்கொண்டு வருகிருரென்றும், அவர் கடவுளின் பரமாய்ப் பேசத்தக்கவரென்றும், இவர் மூலமாகவே கடவுள் மனிதர்களுக்கு விஷயங்க ளைத் தெரியச்செய்து கற்றுக்கொடுக்கிருரென்றும் உணர்ந்து, இம்மாயாப் பிரபஞ்சத்தில் குருவையே கடவுளாகப் பாவிக்கவேண்டியது. எவ்வாறெனருல், மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரிடத்தில் பக்தி செலுத்






தினதைப்போலவும், லக்ஷ்மணன் ஸ்ரீராமரிடத்திலும், சத்ருக்னன் பாதரிடத்திலும் பக்தி செலுத்தினதைப் போல் பக்தி செய்வது பஞ்ச மோபாய மெனப்படும். இத்தால் மோக்ஷ சாதனத்தை யடையலாம். சாமபர்வ என்னும் கர்மம், ஞானம், பக்தி, பரபத்தியினல் மோக்ஷமடைய இயலாவிட்டாலும், மேல்சொன்ன பஞ்சமோபாயத்தால் அடையலாம். இதுவே கடைசியான மார்க்கம் அல்லது வழி.

கடவுள் மனிதனுக்குக் கிட்டும் மார்க்கம் ஆசாரியன்மூலமே. ஆனல் சாமானியமாய்ச் சேதனன் இந்த மார்க்கத்தை நம்பமாட்டான் ஏனென்றால் ஆசாரியனெனப்படுவன் தன் சிஷ்யனனவனுடன் மத்தியில் வசித்தும் இவன் சுகதுக்கங்களை யெல்லாம் இவனுடன் அனுபவித்தும் சிஷ்யனுடைய சங்கத்திலிருப்பதினல் சிஷ்யனுக்குக் குருவின்பேரில் யாதொரு பக்தி நம்பிக்கை பிறப்பதில்லை அவர்பேரில் ஓர் அசுசி இவனுக்குப் பிறந்துவிடுகிறது அவரைச் சற்குருவாய் இவன் மதிக்கிறதில்லை. இதுவே பெரிய அஞ்ஞானம். இந்த அஞ்ஞானமான இருளை ஒழித்துவிட்டால்தான் பஞ்சமோபாயத்தின் மார்க்கம் அடையலாம். ஆதலின் ஆசாரியன் ஞானனுஷ்டான சீலனயும், அர்த்தகாமாதிகளில் நசையில்லாதவனயும், ஞானபக்தியாதிகளில் பரிபூர்ணனயும், சிஷ்யன் ஆத்மோஜ்ஜீவனத்திலே பெருநோக்குடையவனயும், சிஷ்யனுடைய தேக யாத்திரையைக் கர்மாதீனமாயும், ஆத்மோஜ்ஜீவனத்தை ஈஸ்வராதீனமாயும் வைத்து, சதா ஈஸ்வர மங்களாசாசனத்திலேயே நோக்குடையவனய் காம்யபரனய் வைக்க வேண்டும். சிஷ்யன் தேகயாத்திரையை கர்மாதீனமாக்கி; ஆத்ம யாத்திரையை ஆசாரியனதீனமாக்கி உஜ்ஜீவிக்கவேண்டும்.

மூன்றாவதாக—த்வைதமதமார்க்கம் இது. மத்வாசாரியரின் மதத்தை யனுசரித்தது.

---